# தாராஸ் புல்பா



கோகோல்

தமிழாக்கம் :
ரங்க. துரைவேலன்




ஸ்டார் பிரசுரம்

திருவல்லிக்கேணி
சென்னை-5

மேல

# முன்னுரை

ருஷ்ய நாவல் இலக்கியத்தின் பிதாமகன் என்று கோகோல் கருதப்படுகிறார். அம்மொழியின் மகோன்னத மான இலக்கிய மாளிகையின் நுழைவாயில் என்று புஷ்கினைக் கூறினால் அம்மாளிகையின் ஏனைய யாவுமாக நிற்பவர் கோகோல். டாஸ்டாவஸ்கி என்ற பிரபல ருஷ்ய நாவலாசிரியர் "நாங்கள் எல்லோரும் கோகோலின் 'மேலங்கி'யிலிருந்து வெளிவந்தவர்கள்" என்று கூறுகிறார். 'மேலங்கி' என்பது கோகோலின் புகழ் பெற்ற சிறுகதை.

கோகோல் எழுதிய 'இறந்த ஆத்மாக்கள்' (Dead Souls) என்ற நாவல்தான் ருஷ்ய மொழியிலேயே எழுதப் பட்ட முதல் நாவலாகும். அவருடைய இந்த முதல் நாவலைப்பற்றி ஆக்ஸ்போர்டு யுனிவர்ஸிட்டி வெளியிட் டுள்ள கலைக்களஞ்சியத்தில், "உலகத்திலுள்ள நகைச் சுவை மிகுந்த காவியங்களில் முதன்மையானது இந் நாவல்" என்று குறிப்பிடப்பட் டிருக்கிறது. அவருடைய இரண்டாவது நாவல் இந்த **தாராஸ் புல்பா**. இந்நாவலைப் பற்றிப் பிரபல ஆங்கில விமர்சகரான ஜான்கர்னஸ் பின் வருமாறு குறிப்பிடுகிறார்:—

இந்த மகத்தான நாவலை 1833–42-க்கு இடைப்பட்ட காலத்தில் கோகோல் எழுதினார். இதற்கு முன்பே அவர் ஒரு நாவல் எழுதியிருந்தார். ஆயினும் இந்த நாவல்தான் அவரை உலகத்திற்கு அறிமுகப்படுத்தியது. தூங்கி விழுந்து கொண்டிருந்த பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கியத்திற்குச் சவால் விட்டதுபோல் தோன்றியது

இந்நாவல். 'ஹோமரின் ஒடெஸேயைப் படித்துவிட்டு அதை அடியொற்றி எழுதப்பட்டது இந்நாவல்' என்று சிலர் கூறுகிறார்கள். ஆனால் "தாராஸ் புல்பா" வெளி வந்த பிறகுதான் ஒடெஸே ருஷ்ய மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட தென்பதை இவர்கள் கவனிக்கவில்லை. ஒடெஸேயின் சாயலும், ஹோமரின் வேகமும் இந்நாவலில் பிரதிபலித்தால் அது கோகோலின் மேதையைத்தான் வெளிப்படுத்துகிறது.

சிறந்த ஆங்கில விமர்சகர் கூறியிருப்பதற்குப் பிறகு நான் சொல்வதற்கு ஒன்றுமில்லை.

போலந்தின் ஆட்சியாளர்களை எதிர்த்துக் கோஸக்கு கள் தங்கள் சுதந்தரத்தையும், மத உரிமையையும் காப் பாற்றிக் கொள்வதற்காகத் தொடுத்த பல போராட்டங் களைப் பின்னணியாகக் கொண்டது இந் நாவல். இதை மொழிபெயர்க்கும்போது சில சொற்களை அப்படியே உபயோகித்திருக்கிறேன். "சபோரோஷியர்", "செட்ச்", "குரன்" ஆகிய சொற்கள், கோஸக்குகளின் பிரதேசத் தில் மட்டும் உபயோகிக்கப்படும் சொற்கள். அந்தச் சொற்களுக்கு அடிக்குறிப்புகள் அங்கங்கே கொடுத் திருக்கிறேன்.

இந்த மகத்தான நாவலை மொழிபெயர்க்கக் கிடைத்த சந்தர்ப்பத்தை ஒரு பெரும் பாக்கியமாகவே கருதுகிறேன். இந்தப் பாக்கியத்தை எனக்களித்த ஸ்டார் பிரசுரத் தாருக்கு என் நன்றி.

திருவல்லிக்கேணி<br>21—12—1956

**ரங்க. துரைவேலன்**




# தாராஸ் புல்பா

"எங்கே இப்படிக் கொஞ்சம் திரும்படா மகனே, பார்ப்போம், இந்த ஆடையும் விநோதமான இந்தப் பாதிரியின் நீண்ட கோட்டும், இது என்ன உடுப்பு! இந்த ஆடையோடு உங்களைப் பார்த்தால் அசல் 'சோளக் கொல்லை பொம்மை' மாதிரியே இருக்கிறீர்கள். நீங்கள் படித்த கல்லூரியில் எல்லோரும் இப்படித்தான் ஆடை அணிவதா?"

கீவ் நகரத்துக் கல்லூரியில் தங்கள் படிப்பை முடித்து வீடு திரும்பி இருக்கும் தன் இரு பிள்ளைகளை இப்படித்தான் வரவேற்றான் கிழட்டு புல்பா.

அவனுடைய இரண்டு பிள்ளைகளும் அப்போதுதான் குதிரையை விட்டுக் கீழே இறங்கினர். இருவரும் 'கொழு கொழு' என்று வளர்ந்திருந்தனர். கல்லூரி மாணவர்களுக்கே உரிய ஒருவிதக் கூச்சத்தோடு காணப்பட்டனர். துடிதுடிப்பு நிறைந்து ஆரோக்யமும் அழகும் பிரதிபலிக்கும் அவர்களின் க்ஷவரக்கத்தியே படாத இளம் முகங்களில் அப்போதுதான் ஆண்மையின் ஆரம்பப் பொலிவு படர ஆரம்பித்திருந்தது. தம் தந்தையின் இந்த விநோதமான வரவேற்பு அவர்களைக் குழப்பிவிட்டது. ஒன்றும் தோன்றாமல் அப்படியே தங்கள் தலைகளைக் கவிழ்த்துக் கொண்டு தரையையே பார்த்துக்கொண் டிருந்தனர்.

"இன்னும் கொஞ்சநேரம் அப்படியே நில்லுங்கள்" என்று கூறிவிட்டு புல்பா, அவர்களை இப்படியும் அப்படியுமாகத் திருப்பித் திருப்பிப் பார்த்தான்.

"அடேயப்பா—இந்தக் கோட்டென்ன இவ்வளவு நீளமிருக்கிறதே. அதுவும் எவ்வளவு அழகு! உலகம் இதுவரை இதைப்போன்ற கோட்டைக் கண்டே இருக்காது. இந்த நீண்ட அங்கியோடு, யாராவது ஒருவன் ஓடினால், கீழே விழாமல் இருப்பானா? வாலும் தோலுமாகத் தொங்கும் இந்த அங்கியோடு கால்கள் சிக்கிக் கொண்டு நிச்சயம் கீழே விழுந்துவிடுவான்" என்றான்.

"எங்களைப் பார்த்து இப்படிக் கேலியாகச் சிரிக்காதீர்கள் அப்பா, சிரிக்காதீர்கள்," என்று கடைசியில் மூத்தவன் கூறினான்.

"ஏன்? சிரித்தால் என்னவாம், உன் கௌரவம் குறைந்து விடுகிறதோ?"

"இப்படிச் சிரித்தால் நீங்கள் என் தந்தை என்பதையும் பாராமல் அடித்துவிடுவேன்!"

இதைக் கேட்ட புல்பா சற்றுப் பின்வாங்கினான். "என்ன! உன் சொந்தத் தந்தையையே, அடித்துவிடுவாயா? அட பேய்ப்பயலே!"

"நீங்கள் என் தந்தையாய் இருந்தால் என்ன? என்னை அவமானப் படுத்தும் யாரையும் நான் சும்மா விடமாட்டேன்."

"எப்படி அடிப்பாய், உன் முஷ்டியினாலா?"

"எப்படி வேண்டுமானாலும் சரி."

"சரி முஷ்டியினாலேயே சண்டை போடுவோம். நீ எவ்வளவு பலசாலி என்பதை உன் முஷ்டியினாலேயே பார்த்துவிடுகிறேன்" என்று கூறிக்கொண்டே, தன் சட்டையை மடித்து விட்டுக்கொண்டான்.

தந்தையும் மகனும், நீண்ட நாட்களுக்குப் பிறகு சந்தித்துச் சந்தோஷத்தோடு அளவளாவுவதற்குப் பதில், ஒருவரை ஒருவர் குத்திக்கொண்டு சண்டையிட ஆரம்பித்தனர். மாறி மாறி இருவரும் மார்பிலும் விலாவிலும் குத்திக்கொண்டனர். பிறகு சற்று விலகி, முறைத்துப் பார்த்துக்கொண்டே பாய்ந்து தாக்கிக்கொண்டனர்.

"இது என்ன அநியாயம், நல்லவர்களே, இதைக் கொஞ்சம் பாருங்கள். இந்தக் கிழட்டு மனிதனைப் பாருங்கள். நிச்சயமாக இந்த மனுஷனுக்குப் புத்தி தடுமாறித் தான் போய்விட்டது" என்று அந்தப் பிள்ளைகளின் அருமைத் தாய் இந்தக் காட்சியைக் கண்டு கதறினாள். வெளுத்த முகமும், ஒல்லியான உருவமுமுள்ள அந்தத் தாய் இன்னும் தன் கண்மணிகளைச் சேர்த்து அணைத்து முகமன் கூறக்கூட முடியாமல், வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள். "ஒரு வருஷத்திற்குப் பிறகு குழந்தைகள் வீட்டிற்கு வந்திருக்கின்றனர். இந்த மனுஷன் என்னடாவென்றால், அவர்களோடு சண்டைக்குப் போகிறானே, நிச்சயம் பயித்தியம்தான் பிடித்துவிட்டது" என்றாள் அந்தத் தாய்.

இதற்குள் புல்பா தன் சட்டையைத் தட்டிவிட்டுக் கொண்டே "பரவாயில்லையே, அவன் நன்றாகச் சண்டை செய்கிறானே; இவ்வளவு நன்றாகச் சண்டை செய்யக் கூடியவன் என்று தெரிந்திருந்தால், நான் அவனோடு சண்டைக்கே போய் இருக்கமாட்டேன். இவன் ஒரு நல்ல *கோஸக்காக மாறுவான்! சரி மகனே, உனக்கு நான் நல்வரவு கூறுகிறேன், எங்கே இப்போது உன் தந்தைக்கு ஒரு முத்தம் கொடு" என்றான். உடனே இருவரும், ஒருவரை ஒருவர் சேர்த்து அணைத்துக்கொண்டு முத்தமிட ஆரம்பித்துவிட்டனர். "இதுதான் சரி மகனே, நீ எனக்குக் கொடுத்தாயே, அதைப்போல எல்லோரையுமே

---

* அன்னியப் படையெடுப்புகளுக்கு அஞ்சித் தென்ருஷ்யாவின் பல பாகங்களிலிருந்து கிளம்பி உக்ரேனில் வந்து குடியேறியவர்கள். முதன் முதலில் 14-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இவர்கள் அனைவரும் தங்களுக்குப் பொதுவான எதிரிகளை எதிர்க்கக் கூடி, பிறகு ஒரு தனிச சமுதாயமாகி விட்டனர். சுதந்தரமான மனப்போக்கு, முரட்டுச் சுபாவம், எந்தச் சக்திக்கும் தலை வணங்காத பெருமிதம், களங்கமற்ற உள்ளம் இவைகள் இந்தக் கோஸக்குகளின் குணப்போக்கு. இவர்கள் அனைவரும் ஒரு வகுப்பாகச் சேர்ந்து தங்களுக்குள் ஒற்றுமையுடன் வாழ்ந்து பல இன்னல்களை எதிர்த்துத் தகர்த்தவர்கள். காலம் செல்லச் செல்ல இவர்கள் பிற மங்கோலிய, தார்த்தாரிய இனங்களுடன் கலந்து மாறிவிட்டனர்.

தாக்கு, எவருக்கும் விட்டுக்கொடுக்காதே. ஆனால் உன்னுடைய ஆடைகள் என்னவோ வேடிக்கையாகவே தோன்றுகின்றன. இது என்ன கயிறு தொங்குகிறதே?'' என்று சொல்லிவிட்டு, ஒதுங்கி நிற்கும் தன் இளைய மகனைக் கண்டு, "ஏண்டா நோஞ்சான், நீயேன் உன் கரங்களைத் தொங்க விட்டுக்கொண்டு அங்கு சும்மா நிற்கிறாய்? நீயும் உன் தகப்பனுக்கு ஏதேனும் பூசை கொடுப்பதுதானே?'' என்று கேட்டான்.

தன் இளைய மகனை அணைத்துக்கொண்டிருந்த அந்தத் தாய் இதைக் கேட்டதும், "போதுமே, இதைத் தவிர,வேறு என்ன உங்களுக்குத் தெரியும், குழந்தைகள் தந்தையுடன் சண்டையிடுவதை எங்கேனும் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? இதைவிட வேறு நல்லது எதுவும் இல்லையா? அவன் பாவம் குழந்தை, அவ்வளவு தூரம் வந்த களைப்பு......'' —அந்தக் குழந்தைக்கு வயது இருபதுக்கு மேலிருக்கும், ஆறடி உயரம் வளர்ந்திருந்தான்—"ஏதேனும் சாப்பிட்டுச் சிறிது இளைப்பாற விடாமல் இப்படியேன் அவனை வம்புக்கு இழுக்கிறீர்கள்'' என்றாள்.

"ஹோ! நீ வெறும் பாலேடுதானே!'' என்றான் புல்பா. பிறகு, "மகனே உன் அம்மா சொல்வதைக் கேட்காதே. அவள் சாதாரணப் பெண். ஒன்றும் தெரியாதவள். உன் வாழ்க்கை முழுவதிலும் சிறு குழந்தையாகவே இருந்துவிடப் போகிறாயா, என்ன? இதோபார் திறந்த வெளி, ஒரு நல்ல குதிரை, இதைப் போன்ற வாழ்க்கைதான் நீ வாழ வேண்டும்! இதோ இந்த வாளைப் பார்—இதுதான் உன் தாய்! உன் தலைக்குள்ளே சேர்த்துக் கட்டி வைத்திருக்கிறார்களே அந்தக் கல்லூரிக்காரர்கள்—அது வெறும் குப்பை. புத்தகங்களும், தத்துவங்களும், இன்னும் என்னென்னவோ இழவுகள்—தூ!!''......இங்கு புல்பா கூறிய வார்த்தையை நாம் எழுத முடியாது. "அடுத்த வாரமே உங்களைச் *சபோரோஷிக்கு அனுப்பப் போகிறேன்.

---

* கோஸக்குகள் நிரந்தரமாகவாழ்ந்த பிரதேசம். டெனிப்பர் நதியைச் சார்ந்த (சா) நீர்வீழ்ச்சியை (போரஷி) ஒட்டிய பிரதேசம். சபோரோஷியர் என்பதும் சபோரோஷிய கோஸக்குகள் என்பதும் இந்தக் கோஸக்குகளையே குறிக்கும்.

உங்களுக்குத் தேவையான கல்வியை நீங்கள் அங்குதான் கற்க முடியும். அதுதான் உங்களுக்குரிய பள்ளி, அங்குதான் உங்களுக்கு அறிவும் வளரும்'' என்ருன்.

''என்ன, அவர்கள் ஒரு வாரம்தான் இங்கு தங்குவார்களா?'' என்று, கண்ணீர் மல்கும் கண்களுடன், கவலை தோய்ந்த குரலில் கேட்டாள் அந்த வயோதிகத் தாய்: ''பாவம் பிள்ளைகள் வீட்டிற்குவந்து நன்ருகக்கூட இளைப்பாற முடியவில்லை. என் கண்மணிகளை நான் என் ஆசை தீர, கண்ணுறக் காணக்கூட முடியவில்லை'' என்ருள்.

''ஏ கிழமே, உன் ஓலத்தை நிறுத்து! கோஸக்கின் வாழ்வு பெண்ணோடு வாழ்வதற்காக ஏற்பட்டதல்ல. உனக்கென்ன, இவர்களை உன் பாவாடைக்குள் அடைத்துக் கொண்டு, கோழி தன் முட்டைகளை அடை காப்பது போல, வைத்துக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிருய். சரி சரி போ, போய் வீட்டிலுள்ள எல்லா உணவு வகைகளையும் எடுத்து வை. உன்னுடைய பணியாரம், தேன் அடை, கசகசா மிட்டாய் இவைகளை வைத்துவிடாதே. அவைகள் எங்களுக்கு வேண்டாம். ஒரு முழுச் செம்மறி ஆட்டையோ வெள்ளாட்டையோ கொண்டுவா. அதோடு நிறைய 'ஓட்கா' கொண்டுவா. அதில் உன்னுடைய திராட்சைகளையும், பிற குப்பைகளையும் போட்டுக் கொண்டு வராதே. நல்ல நுரை தளும்பும், போதை தரும் மின்னுகின்ற 'ஓட்கா' கொண்டுவா?'' என்ருன் புல்பா.

தன் பிள்ளைகளை வீட்டின் அழகிய அறைக்குள் அழைத்துச் சென்ருன். அப்போது அறையை அலங்கரித்துக் கொண்டிருந்த சிவப்பு 'நெக்லேஸ்' அணிந்திருந்த இரு பணிப் பெண்கள் இவர்களைக் கண்டதும் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடிவிட்டனர். எல்லோரிடமும் மிகக் கண்டிப்பாய் இருக்கும் தம் சிறிய எஜமானர்களைக் கண்டுதான் அப்படி ஓடிவிட்டார்களோ, அல்லது ஆண்களைக் கண்ட உடன், அலறிப் புடைத்துக் கொண்டும் 'கிரீச்' என்று சத்தமிட்டுக் கொண்டும் ஓடவேண்டும் என்ற பெண்களின் பழக்கத்திற்காகவேதான் ஓடிஞர்களோ என்னவோ தெரியவில்லை. அப்படி ஓடிவிட்டுப்

பிறகு நாணம் மிகுந்த முகங்களைத் தங்கள் ஆடையால் மூடி மறைத்துக் கொள்வதுதான் பெண்கள் வழக்கமாகி விட்டது. அந்த அறை அந்தக் காலத்துப் பாணியில் அலங்கரிக்கப் பட்டிருந்தது. போப்பாண்டவரின் அதிகாரத்திற்குள் கிரேக்க மாதா கோவில்களைக் கொண்டு வந்ததை எதிர்த்து உக்ரேன் தன்முதல் போரைத் தொடுத்திருந்த காலம் அது. போரும் பூசலும் நிறைந்த அந்தக் கொடிய காலத்தில், சாதாரண கிராம மக்கள் சூழ்ந்திருக்க, 'பண்டுரா' என்ற வாத்தியத்தின் இன்னிசைக் கேற்ப, பார்வை யற்ற கிழட்டுப் பாடகர்கள் பாடிய காலம் அது. அந்தக் காலம் இப்போது வெறும் நாட்டுக் கதைகளிலேயும், பாடல்களிலேயும்தான் தேங்கிக் கிடக்கிறது. அந்தப் பாடல்களை இப்போது யாரும் பாடுவதுகூட இல்லை.

அந்த அறையின் சுவர்களும் கூரையும், பலவிதமான வர்ணக் களிமண்ணல் அழகாகக் காரைபூசப்பட்டிருந்தன. சுவரெங்கும் வாட்கள், சாட்டைகள், பறவை பிடிக்கும் வலைகள், மீன் வலைகள், துப்பாக்கிகள், வெள்ளிப் பிடிகளிட்ட கடிவாளத் துண்டுகள், கயிறுகள் இன்னோரன்ன பிற மாட்டப்பட்டு அலங்கரிக்கப்பட்டிருந்தன. அந்த அறையிலிருந்த ஜன்னல்கள் மிகச் சிறியவை. அவைகளில் அமைந்திருந்த மங்கிய கண்ணாடிப் பலகணிகள், இப்போதெல்லாம் பழைய மாதாகோவில்களில்தான் காண முடியும். வெளியே பார்க்க வேண்டுமென்றால் அந்த வட்ட வடிவமான கண்ணாடிப் பலகணியைத் தள்ளிவிட்டுத்தான் பார்க்கமுடியும். ஜன்னலும் சுவரும் சிவப்புநிற விளிம்புகளால் அமைந்திருந்தன. அந்த அறையின் மூலைகளில், தண்ணீர் நிறைந்த கூஜாக்களும், பச்சை, ஊதா நிறக் கண்ணாடிக் குப்பிகளும், வெள்ளியாலான கிண்ணிகளும், பல தேசத்து வேலைப்பாடுகள் நிறைந்த கோப்பைகளும் நிறைந்திருந்தன. இவைகள் எல்லாம் புல்பாவின் கரங்களுக்குப் பலவிதமான முறைகளில் வந்து சேர்ந்தவை. பல சாமான்கள், மூன்று நான்கு முறை கைமாறியவை. இவையெல்லாம் துணிவு மிக்க அந்தக் காலங்களில் மிகவும் சகஜம். அந்த அறையைச்சுற்றி ஒரு மரப்பெஞ்சு அமைந்

திருந்தது. அதன் நடுவில் ஒரு பெரிய மேஜையும், இரும்பாலான கணப்பு ஒன்றும், அதைச்சுற்றி அமைந்த பலவித கண்ணாடி வரிசைகளும் இருந்தன. இவையெல்லாம் இந்த இரு பிள்ளைகளுக்கும் நன்கு தெரிந்தவைகள் தான். ஆண்டுதோறும் அந்த இருவரும் தங்கள் விடுமுறைக்கு நடந்து வந்து இங்கு தங்கி இருந்தவர்கள் தான். ஆம், அவர்கள் அப்போதெல்லாம் நடந்துதான் வந்தார்கள். அப்போதெல்லாம் அவர்களுக்குச் சொந்தமான குதிரைகள் கிடையாது. மேலும் இளம் கல்லூரி மாணவர்களைக் குதிரைமீது சவாரி செய்ய விடுவது அந்தக் காலத்தில் பழக்கம் கிடையாது. ஆகவே, அவர்கள் தங்கள் முடிகளை வளர்த்து வருவார்கள். அதுதான் ஆண்மை அடைந்து விட்டோம் என்பதற்கு அடையாளம். கைகள் உள்ள எந்தக் கோஸக்குக்கும் இதைப் பிடித்திழுக்க உரிமையுண்டு. புல்பா தன் பிள்ளைகள் படிப்பை முடித்ததும் தான், தன் லாயத்திலிருந்து ஒரு ஜோடி குதிரைகளை அனுப்பி இருந்தான்.

தன் பிள்ளைகளின் வரவைக் கொண்டாடுவதற்காகப் புல்பா தனது ரெஜிமென்டின் எல்லா ஆபீஸர்களையும், பிறரையும் தன் வீட்டிற்கு அழைத்திருந்தான். அப்போது வீட்டிலிருந்த இரண்டு ஆபீஸர்கள் தனது பழைய தோழன் டிமிட்ரிடோவ்காக் என்பவனுடன் வருவதைக் கண்டதும் புல்பா தன் இரு பிள்ளைகளையும் அவர்களுக்குப் பெருமையோடு அறிமுகப் படுத்தினான். "பாருங்கள் என் அருமைப் பிள்ளைகளை" என்று கூறிக் கொண்டான்: "அவர்களை நான் வெகு சீக்கிரமே சபோரோஷிக்கு அனுப்ப நினைத்திருக்கிறேன்" என்றான். இதைக் கேட்ட மற்ற விருந்தினர்கள் புல்பாவையும் அவனது இரண்டு பிள்ளைகளையும் வாழ்த்தி, அதுதான் சரி என்று ஊக்குவித்தனர். மேலும் சபோரோஷியைப் போன்ற நல்ல பள்ளி இதைப்போன்ற இளைஞர்களுக்கு வேறெங்கும் கிடையாது என்றும் தங்கள் அபிப்பிராயத்தைக் கூறினர்.

"சகோதர ஆபீஸர்களே, உங்களுக்குப் பிடித்தமான இடங்களில் அமருங்கள். பிள்ளைகளே இப்போது நாம்

சிறிது ஓட்கா பருகுவோம்'' என்று விருந்தை ஆரம்பித்து வைத்தான் புல்பா. பிறகு ''கடவுளின் கருணை நம் அனைவருக்கும் இருக்குமாக! உன்னுடைய நல் வாழ்விற்காக ஒஸ்டாப், இதோ உன்னுடைய நல் வாழ்விற்காக ஆன்றி'' என்று வாழ்த்திவிட்டு மதுவைப் பருக ஆரம்பித்தான். ''ஆண்டவன் உங்களுக்குப் போரில் நல்ல அதிர்ஷ்டத்தைக் கொடுக்க வேண்டும். நம்பிக்கை யற்றவர்களை, துருக்கியரை, தார்த்தாரியர்களை, நமது நம்பிக்கைக்கு எதிராக மாறினால் போலந்துக் காரர்களையும் போரில் வெல்ல உங்களுக்குச் சக்தி பெருக வேண்டும். சரி உங்கள் கோப்பைகளை எடுத்துக் கொள்ளுங்கள்; ஏன் ஓட்கா ருசியாக இல்லையா? ஆமாம், லத்தீன் மொழியில் ஓட்கா வுக்கு என்ன பெயர்? ஓ, லத்தீனிய மொழிக்காரர்கள் முட்டாள்கள் போலிருக்கிறது; உலகத்தில் ஓட்கா என ஒன்று இருப்பதையே அறியார்கள் போலிருக்கிறது. லத்தீன் மொழியில் கவிதை எழுதியவன் பெயரென்ன? நான் அதிகமாகப் படித்தவன் இல்லை, ஆகவே சந்தேகமாய் இருக்கிறது—ஹொரேஸ் என்பவன்தானே ?''

புல்பாவின் மூத்த மகன் ஒஸ்டாப் இதைக் கேட்டுத் தனக்குத்தானே, ''இந்தக் கிழட்டு நாய்க்கு எல்லாம் தெரிந்தும், தெரியாததுபோல் பாவனை செய்வதைப் பார், அவன் குணமே இப்படித்தான்!'' என்று நினைத்துக் கொண்டான்.

புல்பா பிறகு தன் பிள்ளைகளைப் பார்த்து ''அங்கு கல்லூரியில், உங்கள் தலைமை குரு ஓட்காவின் வாசனையைக்கூட உங்களால் நுகர முடியாமல் தடுத்திருப்பாரே! உண்மையைச் சொல்லுங்கள், அப்படி நீங்கள் மீறி நடந்திருந்தால், பச்சை மிளாறினால், உங்கள் முதுகையும் உடம்பையும் நன்றாகப் பதம் பார்த்திருப்பார்களே, இல்லையா? மேலும், நீங்கள் இன்னும் சிறிது வயதான பிறகு, உங்கள் தந்திரங்களைப் பிரயோகித்தபோது, நன்கு கட்டி வைத்துக்கூட அடித்தார்கள்! இல்லையா? நாள் என்றும் கிழமை என்றும் பாராமல்கூட அடித்தார்கள் இல்லையா?''

"நடந்தவைகளைப் பற்றி இப்போது பேசிப் பயன் என்ன? நடந்த தென்னவோ நடந்து விட்டது" என்று ஓஸ்டாப் அமைதியாகக் கூறினன்.

"இப்போது செய்யட்டுமே பார்ப்போம், எவனுவது என்னை இப்போது தீண்டிப் பார்க்கட்டும்! ஒரு தார்த்தாரியனைக் கண்டால்கூட நான் சும்மா இருக்கமாட்டேன். ஒரு கோஸக்கின் வாள் எப்படிப் பட்ட தென்பதைக் காட்டுவேன்!" என்றான் ஆன்றி.

"நன்ருய்ச் சொன்னுய் மகனே, நன்ருய்ச் சொன்னுய்! மேலும் இந்த நிலையில், நான் மட்டும் இங்கிருந்துகொண்டு என்ன செய்யப்போகிறேன்? ஆகவே, நானும் நாளை உங்களோடு புறப்படப் போகிறேன். நான் இங்கு இருந்து கொண்டு, கோதுமை விதைத்துக் கொண்டும், ஆடுகளையும் பன்றிகளையும் மேய்த்துக் கொண்டும், குடும்பஸ்தனைப் போல, மனைவியின் பாவாடையை அணிபவன் அல்ல. அவளைப் பிளேக் வாரிக்கொண்டு போகட்டும், எனக்கு அதெல்லாம் ஒத்துக்கொள்ளாது; இப்போது யுத்தம் இல்லாவிட்டால் என்ன? நானும் கூட அங்கு வருவேன்; வந்து அங்கு சந்தோஷமாகக் காலங் கழிப்பேன்" என்று புல்பா கூறினன். மதுவின் போதையால், அவனுடைய நரம்புகள் மேலும் சூடேறின. போதையின் உச்சத்தை அடைந்ததும் புல்பா எழுந்து நின்ருன். கம்பீரமாக முகத்தை மாற்றிக் கொண்டு, தரையைக் காலால் உதைத்தான்! பிறகு "நாம் நாளைக்கே புறப்படுவோம்! எதற்காகத் தள்ளிப்போட வேண்டும்? இங்கு நாம் எந்த எதிரியையும் பார்க்க முடியாது. இந்தக் குடிசை நமக்கெதற்கு? இந்தச் சாமான்கள் எல்லாம் நமக்குத் தேவையில்லை. இந்தக் குடங்கள்தான் நமக்கு ஏன்?" என்று கூறிக் கொண்டே, அந்த அறையிலிருந்த குடங்கள், தண்ணீர்க் குப்பிகள், எல்லாவற்றையும் வாரித் தரையில் போட்டு உடைக்க ஆரம்பித்தான்.

அந்தப் பரிதாபத்துக்குரிய கிழவி, தன் கணவனின் குணத்தைப்பற்றி நன்கு அறிந்தவளாகையால், கவலை நிறைந்த பார்வையோடு, பெஞ்சின் மேலமர்ந்து கொண்டு

அமைதியாகக் கவனித்துக் கொண்டிருந்தாள். அவள் ஒன்றுமே பேசவில்லை. ஆனால் எதைக் கேட்க இத்தனை நேரம் அவள் பயந்து கொண்டிருந்தாளோ, அந்தச் செய்தியைக் கேட்டதும், தன் கண்ணீரை அவளால் அடக்க முடியவில்லை. பிரிந்து போகப் போகும் தன் இரு பிள்ளைகளைக் கவனித்தாள். ஒன்றும் செய்ய முடியாத தன் அச்சத்தின் வேகத்தால் அவள் கண்கள் கலங்கின. ஆத்திரத்தை அடக்க முடியாமல் அவள் தன் உதடுகளைக் கடித்துக் கொண்ட காட்சியை விவரிக்கவே முடியாது.

புல்பா பயங்கரமான மூர்க்கத்தனம் படைத்தவன். பதினைந்தாம் நூற்றாண்டின் பயங்கர நாட்களில், ஐரோப்பாவின் நாடோடிகளின் இருப்பிடமாக இருந்த ஒரு மூலையில், தோன்றிய கூட்டத்தினன். அந்தச் சமயத்தில் ஆதிகாலத்திய தெற்கு ருஷ்யாவை ஆண்டுகொண்டிருந்த அரசகுமாரர்கள், எதிர்க்க முடியாத மங்கோலிய அழிவுக்காரர்களின் கொள்ளைப் படையெடுப்புக்கு அஞ்சித் தமது நாட்டைவிட்டு ஓடிவிட, அந்தப் பிராந்தியத்து மக்கள், மங்கோலியர்களின் படையெடுப்பால் அழிந்துபோன, தமது வீடுவாசல்களின் சாம்பலின்மேல் மறுபடியும் தங்கள் வாழ்வை ஆரம்பிக்க வேண்டியிருந்தது. நிரந்தரமாக ஆபத்துச்சூழ, பயங்கரமான எதிரிகளின் மத்தியிலே வாழ்ந்து பழகிவிட்ட இவர்கள், ஆபத்தைச் சற்றும் பொருட்படுத்தாமல் துணிவு கொண்டு விட்டனர். எந்த விதமான துயரத்தையும் தைரியமாக எதிர் நோக்கும் மனவலிமை பெற்று, கடைசியில், உலகத்தில் பயம் என ஒன்று இருப்பதையே மறந்துவிட்டார்கள். இது பல நூற்றாண்டுகளாக அமைதியுடன் வாழ்ந்திருந்த இவர்களுடைய உணர்ச்சிகளை இந்தப் புது விதமான போராட்ட உணர்வுகளைத் தட்டி யெழுப்பி கோஸக் இனத்திற்கே மன உரத்தைத் தந்து விட்டது. இதுதான் கட்டுப்பாடுகளுக்கு அடங்காத சுதந்திரமான ருஷ்ய குணச்சித்ரத்தின் வார்ப்பு. ஆழமில்லாத துறைகளிலும் நதிக்கரைகளிலும், தோணிகளிலும் இந்தக் கூட்டம் பரந்து கிடந்தது. இவர்களுடைய எண்ணிக்கையே ஒருவருக்கும் தெரியாமல் போய்விட்டது. சுல்தான் ஒருவன், இந்தக் கோஸக்குகளின் தலைவனைப் பார்த்து நீங்கள் எவ்

வளவு பேர் இருப்பீர்கள் என்று கேட்டபோது, தைரிய முடன் அவன் பெருமிதத்தோடு "யாருக்குத் தெரியும்.? நாங்கள் எல்லாப் பரந்தவெளிகளிலும் வியாபித்திருக்கிறோம். எந்தக் குன்றத்தின் உச்சியிலும் எங்களைக் காணலாம்" என்று கூறினான். எஃகிலிருந்து தீ ஜுவாலை பிறப்பது போல துரதிர்ஷ்ட வசமான பயங்கரச் சூழ்நிலையிலே வாழ நேர்ந்துவிட்ட இந்த மக்களின் இதயத்திலிருந்து பிறந்ததுதான் குறிப்பிடத் தகுந்த ருஷ்யனின் சக்தி. பழைய பிரபுக்களின் ஆதிபத்திய பிரதேசமாக,—தங்களுக்குள்ளே பூசலிட்டுக் கொண்டுதங்கள் பிரதேசங்களை ஒருவருக்கொருவர் பங்கிட்டுக்கொள்ளும் குட்டிப் பிரபுக்களின் வேட்டைக் காடாக, சமய சந்தர்ப்பவாதிகள் நிறைந்த பூமியாக இருந்திருக்கவேண்டிய இந்தப் பிரதேசம்—இந்த மக்களின் வாழ்வு காரணமாக, பொதுவாகப் பிற சமயத்துக் கொள்ளைக்காரர்களின் மீது ஏற்பட்ட வெறுப்பும், ஆபத்தும் ஒன்று சேர்ந்து தைரியமிக்க கூட்டத்தின் குடியிருப்பும், போர்ப்பாசறைகளும் நிறைந்த இடமாக மாறிவிட்டது. நாம் சரித்திரத்தின் மூலம் தெரிந்துகொண்டபடி, இவர்களுடைய இடைவிடாத போராட்டமும் துணிச்சல் மிக்க உணர்வும்தான், ஐரோப்பாவை, அமிழ்த்துவிட யத்தனித்த பல மிருகத்தனமான படையெடுப்புகளிலிருந்து காப்பாற்றியது. போலந்தின் அரசர்கள், பலவீனமானவர்களான மிகதூரத்தில் இருப்பவர்களாக இருந்தும் பயந்து ஓடிவிட்ட அரசகுமாரர்களின் பிடியில் இருந்த, இந்தப் பிரதேசங்களின் சக்கரவர்த்திகளாக மாறினார்கள். போர்க்குணமும் விழிப்பான வாழ்வும்கொண்ட இந்தக் கோஸக்குகளின் தகுதியை நன்குணர்ந்து தங்கள் தேவைக்காக, அவர்களை மேலும் ஊக்குவித்து அவர்களை முகஸ்துதி செய்து அவர்களுடைய போக்குகளை வளர்த்தனர். இந்தப் போலந்து சக்கரவர்த்திகளின் ஆட்சியின்போது, இந்தக் கோஸக்குகள், தங்களுக்குள்ளே ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்தார்கள். இந்தத் தலைவன், அவர்களுடைய குடியிருப்புகளை ரெஜிமெண்டாகவும், ராணுவ ஜில்லாக்களாகவும் மாற்றிவிட்டான். வெளிப்படையாகப் பார்ப்பவர்களுக்கு ஒரு நிரந்தரமான ராணுவம் இருப்பதாகவே தெரியாது. ஆனால், யுத்தம்

ஏற்பட்டுவிட்டால் எட்டே நாட்களுக்குள் ஒவ்வொருவ னும் தன் குதிரையுடன், சிரசிலிருந்து கால்வரை ஆயுத பாணிகளாக மாறி, அரசன் தரும் ஒரு செட்டுக்காகப் போராடத் தயாராகி விடுவான். இரண்டு வாரங்களுக்கு வற்புறுத்திச் சேர்த்தாலும் அமைய முடியாத பெரிய ராணுவமாக உடனே அமைந்துவிடும். போராட்டம் முடிந்ததும், இந்தப் படையின் ஒவ்வொருவனும், பழைய படி தனது நிலத்துக்கோ, டெனிப்பர் துறைப் படகு களுக்கோ, தான் ஏற்கனவே செய்து கொண்டிருந்த விவசாயத் தொழிலுக்கோ சென்றுவிடுவான். பழைய படி, மீன் பிடிப்பதோ, பீர் பதனிடுவதோ, வியாபாரம் செய்வதோ, தத்தம் தொழிலில் முனைந்து மறுபடியும் ஒரு சுதந்திர கோஸக்காக மாறிவிடுவான். இவர்களுடைய இந்த அபூர்வமான திறமையைக் கண்டு நியாயமாகவே வெளிநாட்டினர் வியந்தனர். இந்தக் கோஸக்குகளுக்குத் தெரியாத தொழிலே கிடையாது. 'ஒய்ன்' தயாரித்தல், வண்டி செய்தல், மாவரைத்தல், கருமான் வேலை, பூட்டுகள் செய்தல் இவை போன்ற பலவிதமான தொழில் களையும் நன்கு அறிந்தவர்கள். இவற்றிற்கு மேலாக ருஷ்யர்கள் மட்டுமே செய்யக்கூடிய முறையில்—குடிப் பதும், விருந்துண்ணுதலும், அடக்க முடியாத முறையில் ஆடிப்பாடிக் களிப்பதும்—இதைவிட இன்னும் அதிக மாகக்கூட செய்வர். பதிவு செய்யப்பட்ட கோஸக்குகள் எப்போது அழைத்தாலும் யுத்தத்திற்குப் போகவேண் டும். இவர்களைத் தவிர யுத்த சமயத்தில், வேண்டிய அளவு, குதிரைப் படையினரையும் திரட்ட முடியும். ஆள் திரட்டுவோர், இவர்களது, நகரங்கள், கிராமங்கள் இவற்றைச் சுற்றிக் கடைவீதிகளில் நிற்கும் மாட்டு வண்டியின் மேல் நின்றுகொண்டு, உரத்த குரலில் "ஏ, பீர் பதனிடுவோர்களே, ஒயின் செய்வோர் களே, உங்கள் மது இறக்கும் தொழிலைத் தூர எறி யுங்கள். உங்கள் பருத்த சரீரத்தின் இரத்தத்தை உறிஞ் சும் ஈக்களுக்கு இடம் தராதீர்கள். உங்கள் ராஜ கௌரவத்திற்குத் தகுந்த பெருமையும் புகழும் உங்களுக் குக் காத்திருக்கிறது; வாருங்கள்! ஓ, உழவர்களே, உங்கள் மஞ்சள் நிறச் செருப்புகள் சேற்றில் ஊற, ஏர் ஓட்டும்,

உங்கள் தொழிலை விட்டொழியுங்கள். ஏ, கோதுமை விதைப்போர்களே, ஆடுகளை மேய்ப்பவர்களே, பெண்கள் பின்னே சென்று திரிவோர்களே, பெண்கள் வலையில் வீழ்ந்து, உங்கள் வீரத்தையும் சக்தியையும் ஏன் விரயமாக்குகிறீர்கள், வீரமிக்க கோஸக்கின் பெருமை உங்களுக்குக் காத்திருக்கிறது, கிளம்புங்கள்!'' என்று கூவுவார்கள்.

அந்த வார்த்தைகள் காய்ந்த மரத்தின் மீது பட்ட அக்கினிச் சிதல்கள் போன்றவை. உழவன் தன் கலப்பையை உடைத்தெறிவான்; மது பதனிட்டுக்கொண்டிருப்பவன், தன் மதுப் பீப்பாய்களையும், பானைகளையும் உடைத்தெறிவான். பிற வியாபாரிகளும் தொழிலாளர்களும் தங்கள் தொழில்களை அப்படியே விட்டுவிட்டு, தங்கள் உபகரணங்களை உடைத்துவிட்டுப் புறப்பட்டு விடுவார்கள். ஒவ்வொருவனும் ஒரு குதிரையின் மீது உடனே காட்சி அளிப்பான். சுருங்கச் சொன்னால், மகோன்னதமானதும், மகத்தானதுமான ருஷ்ய குணச் சித்திரத்தின் வெளியீடே இதுதான்.

புல்பா மிகவும் பழைய ராணுவத்தின் மூலக்கர்னல். பிறக்கும்போதே, போராட்ட மனப்பான்மையும் அடக்க முடியாத உணர்வும் பொங்கப் பிறந்தவன். நேரடியாகப் பேசும் முரட்டுத்தனமான போக்குக்குப் பிரசித்தமானவன். அந்தக்காலத்தில் போலந்து நாட்டுப் பழக்க வழக்கங்கள், ருஷ்யப் பிரபுத்துவத்தின் மீது தன் செல்வாக்கைப் பரவவிட்டிருந்தது. பல ருஷ்யப் பிரபுக்கள், போலந்து முறையைப் பின்பற்றி, வேண்டாத டாம்பீகமும், மகோன்னதமான வீடுகளையும் வேலை ஆட்களையும் வேட்டைக்காரர்களையும் விருந்துகள், தர்பார்கள் இவைகளையும் அதிகமாகத் தம் நாட்டிலும் பரப்ப முயன்றனர். புல்பாவுக்கு இப் போக்குப் பிடிக்கவில்லை. கோஸக்குகளின் சாதாரண வாழ்வே அவனுக்குப் பிடித்தமானது. தனது தோழர்களில் யாராவது இந்த *வார்ஸா கட்சியைப் பின்பற்றி நடக்க ஆரம்பித்தால், புல்பா உடனே

* போலந்தின் தலைநகரம்.

அவர்களைப் போலந்து நாட்டுப் பிரபுக்களின் செல்வச் சிறுவர்கள் என்று உதறித் தள்ளிவிட்டு விலகிவிடுவான். கிருஸ்தவப் பழம் பிரிவில்* பற்றுக்கொண்ட அவன் தளராத ஊக்கமுள்ளவன். தான் கொண்டுள்ள நம்பிக்கை யின் சளைக்காத பாதுகாவலனுகத் தன்னை நம்பினுன். குத்தகைக்காரர்களின் தொந்தரவாலோ, அல்லது புதிய விநோதமான வரிச்சுமை தாங்கமாட்டாமலோ, எந்தக் கிராமத்தவனுவது அவனிடம் வந்து முறையிட்டால், புல்பா தனது தோழர்கள் சிலருடன் அங்கு சென்று நீதியை நிலைநாட்டுவான். மூன்று சமயங்களில்தான் வாளை எடுத்துப் போர் செய்யலாம் என்ற ஒரு நியதியை ஏற்படுத்திஞன்—கோஸக் பெரியவர்களுக்கு மரியாதை காட்டாமல் தங்கள் தலையில் குல்லாயுடன், போலந்து தேச வரி வசூலிப்போர் வந்து நிற்கும் சமயம்; தன் னுடைய சமய உணர்ச்சிகளுக்கு ஏற்ற பழக்க வழக் கங்களை மாசுபடுத்தி இழிவு கற்பிக்கும்போது; கடைசி யாக, எதிரிகள் முஸல்மான்களாகவோ துருக்கியராகவோ இருந்துவிட்டால்; கிருஸ்தவ சமயத்தின் பெருமைக்காக இவர்களை எப்போது வேண்டுமானுலும் எந்தச் சமயத் திலும் எதிர்த்துப் போராடலாம் என்பது அவனுடைய அசைக்க முடியாத நம்பிக்கை.

நாளை †செட்சிக்குத் தன் மக்களை அழைத்துக் கொண்டு போய் "இதோ பாருங்கள், எவ்வளவு அழகிய இளம் பிள்ளைகளை நான் அழைத்து வந்திருக்கிறேன்" என்று போர் பல கண்ட தன் சகதோழர்களிடம் இவர்களைப் பெருமையோடு அறிமுகப்படுத்தும் காட்சியை இப்போதே கற்பனை செய்து பூரித்துக்கொண்டான். போரிலே அவர்கள் காட்டும் வீரச்செயல்களை அவன் எப்படிக் கண்டு பாராட்டப்போகிறுன்; மதுகுடிக்கும் போட்டியிலே—இந்தப் பழக்கம், வீரனின் முக்கியமான செயல்களில் ஒன்றென அவன் கருதினுன்-தன் பிள்ளைகள் காட்டப்போகும் கெட்டிக்காரத்தனத்தைக் கண்டு எப்படி

---

* Orthadox Church.

† சபோரோஷியர்களின் கிராமம் அல்லது நிரந்தரக் குடியிருப்பு.

அவன் பெருமைப்படப்போகிறான்; என்று இப்போதே மானசீகமாகக் கற்பனை செய்துகொண்டான். முதலில் தன் பிள்ளைகளை மட்டுமே அனுப்புவதாகத் தீர்மானித் திருந்தான். ஆனால் அவனுடைய மூர்க்கத்தனமான மன வலிமைதான் அவனையும் கூடப் போகும்படி தூண் டியது. மேலும் அவர்களுடைய புத்தம் புதிய இளமை, உயர்ந்த ஆகிருதி, வனப்பு மிகுந்து பலம் பொருந்திய ஆண்மை, புல்பாவின் போராட்ட எண்ணத்தில் உணர்ச்சி களைத் தூண்டிவிட்டன. ஆகவே அவனும் அவர்களோடு போகத் தயாரானான். மறுநாள் பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனிக்க ஆரம்பித்தான். குதிரைகளைத் தேர்ந்தெடுத்தான்; பிற பிரயாணத் தள வாடங்கள், தன்னோடு வரவேண்டிய வேலை ஆட்கள் இவர்களைத் தேர்ந்தெடுத்தான். குதிரை லாயங்களுக்குள் ளும், பண்டகசாலைகளுக்குள்ளும் அவனே சென்று பல வேலைகளைச் செய்தான்; தன்னுடைய அதிகாரங்களைத் தனது தோழனான டோங்காவுக்கு அளித்தான்; தான் அழைத்த உடனே, தன் ரெஜிமென்டை செட்சிக்குக் கொண்டு வரவேண்டும் என்றும் கண்டிப்பான உத்திரவு பிறப்பித்தான். அவன் ஒன்றையுமே மறக்கவில்லை. மதுவின் போதை இன்னும் அவனைவிட்டு நீங்காமலிருந் தாலும், மதுவின் போதை அவனது மூளையை இன்னும் கிறங்கச் செய்தாலும், குதிரைகளுக்குத் தண்ணீர் காட்டு வதிலிருந்து, அவைகளுக்கு வேண்டிய பெரிய கோதுமை களைச் சேமிப்பதுவரை எல்லாவிதமான உத்திரவுகளையும் கொடுத்தான். இத்தனை வேலைகளுக்குப் பிறகு களைப்பு மேலிட்டுப் படுக்கச் சென்றான்.

"நல்லது பிள்ளைகளே, நாம் இப்போது கொஞ்சம் தூங்கலாம். நாளை, கடவுள் நம்மை என்ன செய்ய விரும்பு கிறாரோ அதைச் செய்வோம்; நீ ஒன்றும் சிரமப்படத் தேவையில்லை கிழட்டு மனைவியே, நாங்கள் திறந்த வெளியி லேயே, படுத்துக்கொள்ளுகிறோம்" என்றான்.

இரவு மெள்ளக் கவிய ஆரம்பித்தது. ஆனால் புல்பா எப்போதுமே சீக்கிரமாக உறங்கப் போய் விடுவான். விரித்த ஒரு துப்பட்டியின் மேல் படுத்துக்கொண்டு, ஆட் டுத் தோலால் செய்யப்பட்ட ஒரு நீளக் கோட்டை எடுத்

துத் தன் உடல் முழுதும் மூடிக் கொண்டான். அவன் வீட்டிலிருக்கும்போது, சற்றுச் சூடான இடமாகவே பார்த்துப் படுப்பான். இன்று, காற்றுக் கொஞ்சம் குளிர்ந்திருந்தது. படுத்த சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் குரட்டை விட ஆரம்பித்தான். உடனே பிறரும் அவனுடைய குரட்டையைப் பின்பற்றினர். அந்தத் திறந்த வெளி முழுவதுமே, விநோதமான பல குரட்டை ஒலிகள் கலந்து ஒலித்தன. எல்லோரையும்விட முதலில் தூங்கி விட்டவன் காவல்காரன்தான். தனது இளம் எஜமானர்கள் வந்த ஆனந்த விருந்தில் கண் தெரியாமல் குடித்துவிட்டான்.

பாவம் அந்தக் கிழட்டுத் தாய் ஒருத்தி மட்டுமே தூங்காமல், அருகருகே படுத்துறங்கும் தன் இரு பிள்ளைகளின் தலைமாட்டருகே அமர்ந்துகொண்டு அவர்களுடைய கலைந்து கிடந்த கேசத்தைக் கோதிவிட்டுக் கொண்டும், தன் கண்ணீரால் அவைகளை நனைத்துக்கொண்டும் விழித்திருந்தாள். அவள் தன் உள்ளம், உணர்வு, ஆத்மா அத்தனையையும் தன் கண்களில் தேக்கி அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். தான் பெற்று வளர்த்த பிள்ளைகள், தன் மார்பகத்துப் பாலருந்தி வளர்ந்த பிள்ளைகள், இத்தனை நாள் ஆசைகள் பல காட்டி வளர்த்த தன் பிள்ளைகளைப் பார்த்தாள்—இன்னும் சில கண நேரம்தான் பார்க்க முடியும்—"என் அருமைச் செல்வங்களே! என் கண் மணிப் பிள்ளைகளே! நாளை உங்களுக்கு என்ன கதி ஏற்படப் போகிறதோ? விதி உங்களுக்காக என்ன வைத்துக் கொண்டு காத்திருக்கிறதோ?" என்று அவள் முணகினாள். ஒரு காலத்தில் அழகாயிருந்த அவள் சுருங்கிய முகத்தில் கண்ணீர் பெருகி ஓட ஆரம்பித்தது.

உள்ளபடியே அவள் என்ன சுகத்தைக் கண்டாள்? அந்தப் பகுதியிலே வாழும் எல்லாப் பெண்களுமே இந்தத் துயரமிக்க வாழ்க்கைதான் வாழ்ந்து வந்தார்கள். இளமையின் துடி துடிப்பு மிகுந்த அந்தச் சில கணங்களில்தான் அவள் உள்ளபடியே உண்மையான இன்பத்தைக் கண்டாள். அதன் பிறகு அவளுக்கென்று வந்து வாய்த்த அந்த முரட்டுக் கணவன், அவளைப் புறக்கணித்துவிட்டு,

தன் வாளிலும், தோழர்களிடமும், மதுப் போட்டியிலும் கவனம் செலுத்த ஆரம்பித்துவிட்டான். ஒரு வருஷப் பிரிவுக்குப் பிறகு இரண்டு மூன்று நாட்கள் அவனைக் காண்பாள். அப்படி வந்திருக்கும் அந்த இரண்டு மூன்று நாள் வாழ்க்கையும் என்ன வாழ்க்கை! சேர்ந்து வாழ்ந்த அவர்களுடைய சொற்ப நாட்களில் அவள் பட்ட அவமானங்களும், சமயத்தில் பெற்றஉதைகளும் எத்தனையோ? ஏதோ சில சமயங்களில் அவளுக்குக் கிடைக்கும் இன்பமான சந்தர்ப்பங்களும் இந்தக் கொடுமைகளுக்கு இணையாகாது. சபோரோஷியின் கடுமையான போர்க் கவர்ச்சிக்கு உட்பட்ட இந்தகோஸக் வீரர் வர்க்கத்தின் கூட்டத்திலே அவள் ஒரு விநோதமான பிராணி. இன்பங்காணாத அவளது இளமைப் பருவம் வீணே கழிந்தது. அழகு மிக்க அவளது கன்னக் கதுப்புகளும், மார்பகங்களும், முத்தம்படாமலேயே, நிறங் குன்றி இளமையிலேயே சுருங்கிவிட்டன. அவளுடைய உணர்ச்சிகள், அவளுடைய காதல் நினைவுகள், ஒரு பெண்ணுக்கு இயற்கையாக இருக்கவேண்டிய ஆசை அபிலாஷைகள் எல்லாம் வேறு விதத்தில் திரும்பின. ஒரு தாயின் அன்பாகப் பரிணமித்தது. திறந்த வெளியெங்கும் பறந்து திரியும் ஒரு கடற் பறவையைப் போல அன்பும் உணர்வும் பொங்க அவள் தன் பிள்ளைகளையே சுற்றிச் சுற்றி வந்தாள். தன்னுடைய அந்த அருமைக் கண்மணிகளை அவளிடமிருந்து அபகரித்துக் கொண்டு போகும் நேரம் வந்துவிட்டது. ஒருவேளை அவள் தன் பிள்ளைகளைப் பார்ப்பது இதுதான் கடைசிமுறையோ? யாருக்குத் தெரியும்!...முதல் போர்க்களத்திலேயே, தன் பிள்ளைகளின் தலைகளைத் தார்த்தாரியர்கள் வெட்டி வீழ்த்திவிட்டால்?... அவர்களுடைய உடல்கள் கேட்பாரற்று எங்கு கிடக்குமோ?...வல்லூறுகள் ஒருவேளை அந்த உடல்களைக் குத்திக் கிளறிச் சின்னாபின்னமாக்கி விடுமோ? ஐயோ அவர்களுடைய ஒரு துளி ரத்தத்திற்குப் பதிலாக உலகத்தில் தனக்கென்று இருக்கும் அனைத்தையும் அவள் கொடுத்து விடுவாளே—இப்படிப்பட்ட துயரமிக்க எண்ணங்களால் உள்ளம் கொதிக்க, விம்மி விம்மி, அழுதாள். தவிர்க்க முடியாத ஆழ்ந்த தூக்கத்தால் கண்களை மூடிக்

கிடக்கும் தன்னிரு பிள்ளைகளையே ஆதங்கத்தோடு கவனித்துக் கொண்டிருந்தாள்.

"ஒரு வேளை புல்பா குடிபோதையில் இவ்வளவு சீக்கிரம்—நாளையே—போகத் தீர்மானித்திருப்பான். உறங்கி எழுந்ததும் சில நாட்கள் இந்தப் பிரயாணத்தைத் தள்ளிப் போட்டாலும் போடுவான்" என்று அந்தக் கிழட்டுத் தாய் கனவு கண்டாள்.

கொல்லைப்புற மெங்கும் படுத்துறங்கிக் கொண்டிருந்த விவசாயிகளையும், அந்தப் பிரதேசத்தையும், தன் ஒளிக் கதிர்களால் ஒளி விளக்கேற்றிவிட்டு, விண்ணின் உச்சியை எட்டிப் பிடிப்பதுபோல், தவழ்ந்து கொண்டிருந்தது நிலா. அந்தக் கொல்லையைச் சுற்றி அமைந்திருந்த வேலியும், புதர்களும் உயர்ந்து வளர்ந்திருந்த அலறிச் செடியின் நிழல்களின்கீழ் அமிழ்ந்து கிடந்தன.

ஆனால் அந்தத் தாய் மட்டும், தன் பிள்ளைகளின் பக்கத்திலேயே அமர்ந்துகொண்டு, தூங்கவேண்டுமே என்ற நினைப்பில்லாமல், தன் அருமைச் செல்வங்களையே பார்த்துக்கொண்டிருந்தாள். பொழுது விடிவதற்கான அறிகுறிகள் தென்படவே, இதுவரை அசை போட்டுக்கொண்டிருந்த குதிரைகள், கீழே கொட்டிக் கிடந்த புற்களின் மேல் படுத்துவிட்டன. அலறிச் செடியின் உச்சிக்கிளையில் முதலில் ஒரு சிறு சலனம் ஏற்பட்டு, பிறகு படிப்படியாக ஒவ்வொரு கிளையாக அசைந்து, தாழ்ந்திருக்கும் கிளைகள் அசைந்தாடத் தொடங்கின. பொழுது விடிந்தும் அவள் இவ்வளவுநேரம் விழித்திருந்த களைப்புச் சிறிதும் தோன்றாமல், இரவு இன்னும் வளராதா என்று நினைத்துக் கொண்டு இருந்தாள். அந்தத் திறந்த வெளியின் எங்கோ ஒரு மூலையிலிருந்து ஒரு குதிரையின் கனைக்கும் சப்தம் கேட்டது. கீழ் கடலின் வானத்தைத் தன் செந்நிறத்தால் முலாம் பூசிவிட்டு, கடலிலிருந்து குதித்தெழுந்து கொண்டிருந்தான் ஆதவன்.

விழித்துக்கொண்ட புல்பா அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தான். முன்னிரவு அவன் கொடுத்திருந்த உத்திரவுகள் எல்லாம் அவனுக்கு இன்னும் நன்றாக நினைவிலிருந்தன.

"நாம் தூங்கினது போதும், எழுந்திருங்கள் பிள்ளைகளே! டேய்...குதிரைகளுக்குத் தண்ணீர் காட்டு; எங்கே என் கிழட்டு மனைவி?"—தன் மனைவியை அவன் அப்படித்தான் கூப்பிடுவது வழக்கம்—"சீக்கிரம், எங்களுக்கு ஏதேனும் சாப்பிடக் கொண்டுவா. நாங்கள் போகவேண்டிய பாதை எங்கள்முன் நீண்டு கிடக்கிறது" என்றான்.

அந்தப் பரிதாபத்துக்குரிய தாய், தன் கடைசி நம்பிக்கையும் தகர்ந்து விடவே, வேறுவழியின்றி, கவலையால் குன்றிப்போன உள்ளத்தோடு உள்ளே சென்று, அவர்களுக்கு வேண்டிய உணவு வகைகளைத் தயாரிக்க ஆரம்பித்தாள். புல்பா அங்கிருப்பவர் அனைவருக்கும் பலவிதமான உத்திரவுகளைப் பிறப்பித்துக் கொண்டிருந்தான். தானே குதிரை லாயத்திற்குச் சென்று தன் பிள்ளைகளுக்கு வேண்டிய குதிரைகளையும் பிற சாமான்களையும் சேகரித்தான். கல்லூரி மாணவர்களாய் இருந்த அந்தச் சிறுவர்கள் இருவரும் உடனே உருமாறிவிட்டனர். அவர்கள் கால்களிலிருந்த பழைய சேறு படிந்த ஜோடுகளை மாற்றி வெள்ளிப் பாதமிட்ட சிவப்புநிற, மோராக்கோ ஜோடுகள் அணிந்திருந்தனர். அவர்கள் அணிந்திருந்த கால்சட்டைகள் கருங்கடலைப்போன்ற அவ்வளவு அகலம்; அதில் ஒரு ஆயிரம் மடிப்புகளும், தொங்கும் பைகளும் தைக்கப்பட்டிருந்தன. அந்தக் கால்சராயின் இரண்டு பக்கங்களிலும் தங்க நிற வார்கள் தொங்க, அந்த வார்களில் பலவித விநோதமான அலங்கார குஞ்சங்களும், தொங்கணிகளும் மாட்டப்பட்டிருந்தன. அவர்கள் அணிந்திருந்த கோஸக் சட்டை கொழுந்து விட்டெரியும் நெருப்பின் சிவப்பு நிறத்தாலானது. மார்பருகே அழுத்தமாக அமைந்திருந்த உறைகளில், துருக்கி தேசத்து 'பிஸ்டல்கள்' இரண்டு துருத்திக்கொண்டிருந்தன. இடுப்பருகிலிருந்து தொங்க விடப்பட்ட வாட்கள் அவர்கள் கால்வரை நீண்டிருந்தன. சூரியனது வெப்பத்தால் கனியாமல் வெள்ளை வெளேரென்ற அழகிய ஆரோக்கியமுள்ள முகங்களில் சிறு கொத்தாக வளர்ந்திருந்த கருப்புநிற மீசை எடுப்பாக அமைந்திருந்தது. கருப்புநிற ஆட்டு ரோமத் தோலினால் செய்யப்பட்ட குல்லாயின் உச்சியில் தங்கநிறக்

கதிர்கள் அமைத்திருந்தனர். அந்தக் குல்லாயுடன் அவர்கள் பார்ப்பதற்கு மிக அழகாக விளங்கினர். பாவம் அந்தத் தாய்! இவ்வளவு கொள்ளை வனப்போடு விளங்கிய தன்னிரு பிள்ளைகளைக் கண்டதும் அவளால் ஒன்றுமே பேச முடியவில்லை. கண்ணீர் சோர அவள் அப்படியே அசந்து நின்றுவிட்டாள்.

"நல்லது, நாம் புறப்பட வேண்டியதுதான், வீணே நம் காலத்தை இங்கு கழிக்கவேண்டாம்" என்றான் புல்பா: "ஆனால் புறப்படுவதற்கு முன்பு, நம் கிருஸ்தவ வழக்கப்படி, சற்று நேரம் கீழே உட்கார்ந்துவிட்டுப் போகலாம்" என்றான்.

இதுவரை மரியாதைக்காக நின்று கொண்டிருந்த வேலை யாட்கள் உட்பட அனைவரும் கீழே அமர்ந்தனர்.

"உன்னுடைய பிள்ளைகளை ஆசீர்வதித்து விடு. அவர்கள் நம் கிருஸ்தவ மதத்தின் புனிதத் தன்மையைக் காப்பாற்றும் போரிலே, தங்கள் பரம்பரை வீரத்திற்கு இழுக்கின்றி வீரமாகப் போராட வேண்டும் என்று கடவுளிடம் பிரார்த்திக் கொள்; அப்படிச் செய்யத் தவறினால், தங்களைப்பற்றிய சாயல் சிறிதுகூட இல்லாமல் அங்கேயே அழிந்து போகவேண்டும் என்றும் கேட்டுக்கொள்" என்றான் புல்பா.

பிறகு தன் பிள்ளைகளைப் பார்த்து "உங்கள் தாயார் அருகே செல்லுங்கள், பிள்ளைகளே. ஒரு தாயின் ஆசி தான் எந்த மனிதனையும், கடலிலும், நிலத்திலும் காப்பாற்றும் சக்தி கொண்டது" என்றான்.

எல்லாத் தாய்களையும்போல, மிகவும் மெலிந்திருந்த அவள், தன்னிரு குழந்தைகளையும் சேர்த்தணைத்துக் கொண்டு அவர்கள் கழுத்துக்கள் அருகே விம்மி விம்மி அழுது கொண்டே,

"ஆண்டவனின் தாய்தான்......உங்களைக் காப்பாற்ற வேண்டும்... உங்கள் தாயை மறந்து விடாதீர்கள்... நீங்கள் எங்கிருந்தாலும் உங்களைப் பற்றிய சேதியை

எனக்குச் சொல்லி அனுப்புங்கள்...'' அதற்குமேல் அவளால் ஒன்றும் பேச முடியவில்லை.

''நல்லது மக்களே, நாம் இனிப் புறப்படுவோம்'' என்ருன் புல்பா.

சேணமிடப்பட்ட குதிரைகள் வாசலில் காத்திருந்தன. புல்பா தனது குதிரையின்மேல் தாவி ஏறி அமர்ந்தான். ஆஜானுபாகுவான அவனது கனத்தைச் சமாளிக்க முடியாமல், அந்தக் குதிரை ஒருகணம் திணறித் தடுமாறியது.

தன் பிள்ளைகள்கூடக் குதிரைமேல் ஏறி அமர்ந்து விட்டதைக் கண்ட அந்தத் தாய், ஓரளவுக்குச் சாந்தமான முகச் சாயலைக் கொண்ட தன் இளைய மகனை நோக்கி ஓடி, அவனது கரத்திலிருந்த குதிரைக் கச்சத்தைப் பறித்துவிட்டுச் சேணத்தின்மேல் தன் தலையைச் சாய்த்துக்கொண்டு அவனைப் போகவிடாமல் நிராசையோடு கூடிய தன் கண்களால் அவனையே பார்த்துக்கொண் டிருந்தாள். இரண்டு பருத்த கோஸக்குகள், அவளை மெதுவாகப் பிடித்துக் கொண்டுபோய் வீட்டில் விட்டார்கள். அந்தக் கோஸக்குகள் வெளியே சென்றதும், மறுபடியும் அந்தத் தாய், தன் வயதுக்கு மீறிய சக்தியோடு, ஒரு முரட்டு ஆட்டைப் போல 'சரேலென' வெளியே ஓடிவந்து அப்போதுதான் வெளி வாசலைக் கடந்துகொண்டிருந்த குதிரைகளில் ஒன்றை மிகப் பலத்தோடு பிடித்து நிறுத்தி, தன் பிள்ளைகளுள் ஒருவனை அடக்க முடியாத ஆசை வெறியினுல் தாவி அணைத்துக் கொண்டாள். மறுபடியும் அவளைப் பிடித்து வந்து உள்ளே விட்டார்கள். அந்த இரண்டு இளம் கோஸக்குகளும் தாங்க முடியாத கவலையோடு, தன் தந்தைக்குப் பயந்து, கரை புரண்டுவரும் கண்ணீரை அடக்கிக்கொண்டே சென்றனர். புல்பாவைக்கூட இந்த நிகழ்ச்சி சிறிது அசைத்துவிட்டது. ஆனுல் அவன் தன் உணர்ச்சிகளை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. அன்று குளிர் சற்று அதிகமாக இருந்தது. அந்த மைதானத்துப் புல்வெளி எங்கும் ஒருவித அழுத்தமான ஈரம் பரவி இருந்தது. பறவைகள் கூடத் தங்கள் பழக்கமான

இசையை மறந்து நடு நடுங்கும் குரலில் பாடிக்கொண் டிருந்தன. அந்த இரண்டு இளம் கோஸக்குகளும் கொஞ்ச தூரம் வந்த பிறகு, தங்கள் கிராமத்தைத் திரும்பிப் பார்த்தனர். அவர்களுடைய கிராமம், பூமிக்கடியில் புதைந்து விட்டதுபோலத் தோன்றியது.

அவர்களுடைய வீட்டின் புகை போக்கிகளும், அவர் கள்சிறுவயதில் ஏறி விளையாடிய அந்த மரத்தின் மேல்கிளை களும் தவிர வேறு ஒன்றையும் அவர்களால் பார்க்க முடிய வில்லை. அந்த மரத்தின் மீது சிறுவயதில், முயல்களைப் போல எப்படி யெல்லாம் ஏறி ஓடியாடிக் களித்திருப்பார் கள்! அதன் பிறகு அந்த, தூரத்தில் தெரியும் நிலங்களைத் தான் பார்க்க முடிந்தது—அந்த நிலங்களை நினைத்ததும் சென்று போன, தங்களுடைய இளமைக் கால நிகழ்ச்சி கள் மனத்திரையில் தெரிந்தன. சின்னஞ் சிறுவயதில், அந்தப் பனி தூங்கும் புற்றரை மீது விழுந்து புரண்டதி லிருந்து, இருவரும் தங்கள் பருவ வயதில், அந்த வயல் களின் பக்கமாகத் தம் சின்னஞ்சிறு கால்களுடன் துரித மாகத் துள்ளித் திரியும், கருமைநிறப் புருவங்களுடைய விவசாயக் கன்னிப் பெண்களைக் காணக் காத்திருந்த பல நினைவுகள் வரை அவர்களைச் சித்ரவதை செய்தன. இப் போது தங்கள் வீட்டுக் கிணற்றுக்கு மேலே அமைந் திருந்த அந்த வளர்ந்திருந்த மூங்கில் கம்பும் அதன் உச்சி யில் கட்டி இருந்த ஒரு வண்டியின் ஒற்றைச் சக்கரமும் மட்டுமே, வானத்தை ஒட்டியதுபோலக் காட்சி அளித்தது. அதற்கும் அப்பால் தெரிந்த திறந்த வெளி மேடாக நிமிர்ந்து, ஒரு மலையைப்போல எல்லாவற்றையும் மறைத் துக்கொண்டிருந்தது.

அவர்கள் இப்போது தங்கள் இளமையை, தங்கள் அன்புக்குப் பாத்திரமான எல்லோரையும், எல்லாவற்றை யும் விட்டு விட்டு, மானசீகமாக விடை பெற்றுக் கொண்டனர்.

## 2

அந்த மூன்று குதிரை வீரர்களும் மௌனமாகச் சென்றுகொண்டிருந்தனர். வயோதிக புல்பா தனது

சென்று போன பழைய நாட்களை நினைவு படுத்திக்கொண்டான். அவன் முன்னே இளமைக்காலச் சம்பவங்கள் ஒன்றன் பின் ஒன்றாக நடைபோட்டன—ஒவ்வொருகோஸக்கும் நிரந்தரமாகவே இளமையோடு இருக்கவேண்டும் என்று நினைக்கின்ற அளவுக்கு—இன்பம் பயக்கும் அந்தப் பழைய சம்பவச் சூழ்நிலைகள் நிறைந்த இளமைப் பருவத்தை நினைத்தான். தான் போகும் அந்த செட்சில், தன்னோடு தோளோடு தோள் நின்று போர் பல செய்த தன் பழைய தோழர்களில் எத்தனைபேர் இன்று உயிரோடு இருப்பார்கள் என்று நினைத்துப் பார்த்தான். யார் யாரைத்தான் அங்கு பார்க்கமுடியும், யார் யாரைப் பார்க்க முடியாதோ என்று யோசித்துப் பார்த்தான். இப்படி நினைத்ததும் அவனது பார்வையை மங்கச் செய்யும் ஒரு கண்ணீர்த்துளி அவன் கண்களில் துளிர்த்தது. அவனுடைய நரைத்த தலை அவனை அறியாமலேயே கீழே தாழ்ந்தது.

அவனுடைய பிள்ளைகள் வேறு பலவற்றைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தனர். ஆனால் அதற்கு முன்னே அவர்களைப் பற்றிச் சில விவரங்களை இங்கே குறிப்பிட வேண்டும். அவர்களுக்குப் பன்னிரண்டு வயதிருக்கும் போது கீவ் நகரத்திலிருக்கும் கல்லூரியில் சேர்த்தான் புல்பா. அந்தக் காலத்தில் வசதியான அந்தஸ்திலிருக்கும் அனைவரும் தம் பிள்ளைகளுக்குக் கல்வி கற்பிப்பது தங்கள் கடமை என்று நினைத்தனர். படித்த பிறகு அந்தப்பிள்ளைகள் அவற்றை மறந்துவிட்டாலும் அதைப்பற்றி அவர்கள் கவலைப்படுவது இல்லை. அந்தக் கல்லூரியில் சேர்ந்த ஆரம்பத்தில், அவர்கள் கட்டுப்பாடில்லாமல் வளர்க்கப்பட்டிருந்ததால், அடக்கமில்லாமல் முரட்டுத்தனமாக இருந்தனர். ஆனால் அந்தக் கல்லூரியிலேயே சிறிதுகாலம் பழகிய பிறகு, எல்லாக் கல்லூரி மாணவர்களைப் போல, ஒழுங்காகவும் ஓரளவு நாகரிகமான மென்மையும் அடைந்து, ஒரே மாதிரியாக எல்லாக் கல்லூரி மாணவர்களும் தோன்றினர். மூத்தவனை ஒஸ்டாப், முதல் வருஷம் முழுவதும் கல்லூரியைவிட்டு ஓடிப்போவதிலேயே கழித்தான். அவனைப் பிடித்து வந்து சிறிதுகூடக் கருணையில்லாமல் உதைத்துப் படிக்கவைத்தனர். அவன் நான்குமுறை

தன் பாலபாடப் புத்தகத்தைப் பூமியில குழி தோண்டிப் புதைத்துவிட்டான். நான்கு முறையும், அவனுக்கு மிருகத்தனமாக உதைகள் கொடுத்துப் புதுப் புத்தகங்கள் வாங்கிக் கொடுத்தனர். ஐந்தாவது முறையும் அவன் அப்படியே அந்தப் புத்தகத்தையும் புதைத்திருப்பான். ஆனால் புல்பா அவன் இப்படியே செய்து கொண்டிருந்தால், இருபது வருடங்களுக்கு வெளிவர முடியாத ஒரு கிருஸ்தவ மடத்தில் அவனை ஆரம்பப் 'பாதிரியாகச் சேர்த்துவிடுவதாகப் பயமுறுத்தி வைத்தான். மேலும் அந்தக் கல்லூரியில் கற்பிக்கும் பலவிதமான கலைகளையும் அவன் கற்றுக் கொள்ளாவிட்டால், சபோரோஷியைக் கண்ணால்கூடக் காணமுடியாது என்று கண்டிப்பாகக் கூறி இருந்தான். அப்போது அந்தக் கல்வியைப் பற்றி அவ்வளவு சிலாகித்துக் கூறிய அதே புல்பாதான் நாம் முன்னே பார்த்ததுபோல அந்தக் கல்வியைப் பற்றி அவ்வளவு கேவலமாகக் கேலி செய்தான். அந்தக் கல்வியைப் பற்றிக் கொஞ்சங்கூட அக்கரை எடுத்துக்கொள்ள வேண்டாம் என்று தன் பிள்ளைகளுக்கு வேறு உபதேசம் செய்தான். ஆனால் அதன் பிறகு ஒஸ்டாப் தனது சாரமற்ற புத்தகங்களில் தன் கவனத்தைச் செலுத்தி, நன்றாகப் படித்து, கல்லூரியின், கெட்டிக்காரப் பிள்ளைகளை நெருங்கி விட்டான்.

அந்தக் காலத்திய கல்விமுறை, வாழ்க்கைக்கு முற்றிலும் புறம்பான வகையில் அமைந்திருந்தது. அவர்களுக்குத் தர்க்க சாஸ்திரம்; சான்றோர்களின் உன்னதமான நீதிக் கதைகள்; இலக்கண இலக்கியங்கள்; அலங்காரக் காவியங்கள் இவைகள்தான் கற்றுக்கொடுக்கப்பட்டன. இவைகளனைத்தும் காலத்துக்கு ஒவ்வாத வெறும் ஏட்டுச் சுரக்காய் போல, ஒரு பயனையும் படிப்பவர்களுக்கு அளிப்பதில்லை. இந்தக் கலைகளைச் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியர்களும் கால மாற்றத்திற்குத் தக்கபடி தங்களை மாற்றிக் கொள்ளாமல், சொல்லுக்கும் செயலுக்கும் மாறுபட்டிருந்தார்கள். ஆனால் குடியரசுக் கோட்பாடுகள் நிறைந்த அந்தக் கல்லூரியில் படிக்கும் அழகு மிக்க இளம் பிள்ளைகளின் கூட்டம், கல்வித் துறைக்கு அப்பாற்பட்ட வேறு

பல செயல்களில் ஈடுபடாமல் இருக்கவில்லை. அன்பில்லாப் பராமரிப்பு, திரும்பத் திரும்பப் பட்டினி போட்டுத் தண்டனை அளித்தல் இவைபோன்ற சூழ்நிலையில் வளர்ந்த தாலும், அவர்களுடைய இயற்கையான பருவகால உணர்வுகளும் சேர்ந்து, துணிகரமிக்க, ஒருவித முரட்டுத் தனமான மனப்போக்கு உடையவர்களாக இந்த மாணவர் களை மாற்றி விட்டது. இந்தக் குண சித்திரத்தின் பிரதிபலிப்பே பின்னால் சபோரோஷியில் நாம் காண்பது. பசி மிக்க இந்தக் கல்லூரி மாணவர்கள் கீவ் நகர வீதிகளிலே சுற்றுவது அந்த நகர வாசிகளுக்கு ஒரு பெரிய தொல்லையாக இருந்தது. கடைகளுக்குக் காய்கறிகள் கொண்டு செல்லும் பெண்கள், தங்கள் பச்சைப் பட்டாணி, பச்சைக் காய்கள், பிறவற்றைக் கடைக்குக் கொண்டு போகும்போது இந்த மாணவர்களைக் கண்டு விட்டால், தாய்ப் பருந்து தன் குஞ்சுகளைக் காப் பாற்றுவதுபோலக் கூடைகளைத் தங்கள் கரங்களால் மூடிக் காப்பாற்றுவார்கள். இந்த மாணவர்களைக் கண் காணிப்பதற்கென்றே ஒரு காவற்காரன் அமைக்கப்பட் டிருந்தான். ஆனால் அவனுக்கிருந்த ஆழமான கால்ச் சட்டைகளில், அந்தக் கூடைக்காரிகளின், காய்கறிகள் அனைத்தையுமே அடக்கிவிடும் அவ்வளவு பெரிய பைகள்!

இந்தக் கல்லூரி மாணவர்கள் உலகமே தனியானது. சமுதாயத்தில் உயர்ந்த நிலையிலிருக்கும் கூட்டங்களில் இவர்களைச் சேர்ப்பதில்லை. அந்தக் கால சமூக அந்தஸ் தில் உயர்ந்த ஸ்தானத்தை அடைந்திருந்தவர்களில் பெரும்பாலோர் ருஷ்யப் பிரபுக்களும் போலந்தியப் பிரபுக் களும்தான் அதிகம். அந்தக் கல்லூரியின் போஷகர்களில் ஒருவரான வேவோட் குடும்பத்தைச் சேர்ந்த ஆதம் கெய்சல் அவர்களே, இந்த மாணவர்களைச் சமூகத்திலிருந்து விலக்கி வைத்து மிகவும் விழிப்பாகக் கவனித்துக்கொள்ள வேண்டும் என்று கண்டிப்பான உத்திரவு கொடுத்திருந் தார். ஆனால் கடைசியில் கண்டிக்கும் உத்திரவுக்குச் சிறிது கூட அவசியம் இருக்கவில்லை. ஏனென்றால், அந்தக் கல்லூரித் தலைவரும், ஆசிரியர்களாக இருக்கும் பாதிரி களும், தங்களிடம் இருக்கும் சவுக்கையும், பிரம்பையும்

அவர்கள்மீது நன்ருக உபயோகித்தார்கள். பிற சமயங்களில் அவர்களின் உத்திரவுக்குமேல் அக்கல்லூரியிலிருக்கும் பிறகுட்டி ஆசிரியர்களும் காவற்காரர்களும் கொடுக்கின்ற அடிகளை வாங்கிக் கொண்டு பல வாரங்களுக்கு அடிபட்ட இடங்களைத் தடவிவிட்டுக் கொள்வார்கள். சிலருக்கு இந்த உதைகளும் அடிகளும், காரமான மிளகோடு கூடிய 'ஓட்கா' பருகிய காரத்தைவிடக் கொஞ்சம் உரப்பாக இருக்கும். வேறு சிலர் இந்த உதைகளைத் தாங்கமாட்டாமல், சமயமும் சந்தர்ப்பமும் உதவி செய்தால், சபோரோஷிக்கு ஓடி விடுவார்கள்.

ஓஸ்டாப் புல்பா, தர்க்க சாஸ்திரத்திலும், மதச் சார்பான பாடங்களிலும் தன் கவனத்தை எல்லாம் ஊன்றிப் படித்துவந்தாலும், இந்த உதைகளினின்றும் அவனும் தப்பித்தது கிடையாது. ஆகவே இதைப்போன்ற முரட்டுத்தனமான பராமரிப்பு அவனுடைய மனப்போக்கைக் கெட்டிப்படுத்தி, கோஸக்குகளுக்கே உரிய அந்த முரட்டு சுபாவத்தைக் கொடுத்துவிட்டது. ஓஸ்டாப் தன் சக மாணவத் தோழர்கள் மத்தியிலே நல்ல செல்வாக்குப் பெற்றிருந்தான். பொதுத் தோட்டங்களில் கொள்ளையடிக்கும் குழுவுக்குத் தலைவஞக எப்போதும் போகமாட்டான். ஆனல் அவர்களுடைய பிற வம்புச் செயல்கள் செய்யும் கூட்டத்தில் முதல்வஞகச் சென்று ஒத்துழைப்பான். அப்படிச் செய்யும்போது அகப்பட்டுக் கொண்டால், எத்தகைய பயங்கரமான தண்டனை அளிக்கப்பட்டாலும் தன் தோழர்களை மட்டும் எந்தக்காரணம் பற்றியும் காட்டிக் கொடுக்க மாட்டான். தவருன செயல்களைச் செய்யத் தூண்டும் தன் பலவீனத்திற்கு அவன் அவ்வளவு சுலபமாக விட்டுக் கொடுப்பதில்லை. சண்டை செய்வதிலும் மதுப் போட்டியில் கலந்துகொள்வதிலும் மட்டும் அவனுக்குச் சற்றுப் பிரியம் அதிகம். பிற இச்சைகளுக்கு அவன் வளைந்து கொடுப்பதில்லை. தன்னுடைய சக வயதுடைய மாணவர்கள் மத்தியிலே இந்தக் குணத்தால் அவன் குறிப்பிடத் தகுந்தவஞக விளங்கினுன். அவன் காலத்தில் அவனைப் போன்ற ஒருவன் எவ்வளவு கருணை உள்ளவஞக விளங்க முடியுமோ, அவ்வளவு கருணை

யுள்ளவனுக இருந்தான். அவனுடைய பரிதாபத்துக்குரிய தாயின் கண்ணீர் அவன் மனத்தை உண்மையிலேயே நிலை குலையச் செய்து விட்டது. இப்போது அந்த ஒரு எண்ணமே அவனைச் சிந்திக்க வைத்துத் தலையைத் துயரத்துடன் குனிய வைத்துவிட்டது.

அவனுடைய இளைய சகோதரனுடைய உணர்ச்சிகள், வேறு விதமானவை. மிகவும் சுவைமிக்கதும், பக்குவமானதுமான எண்ணங்கள். அவன் படிக்கும்போது விரும்பியே, யாருடைய வற்புறுத்தலும் தேவை யின்றியே படித்தான். படிப்பிலும் எதுவும் அதிகமான சிரமமோ அவனைப் போன்றவர்கள் காட்ட வேண்டிய கடினமான சிந்தனையோ இன்றிப் படித்தான். தன்னுடைய அண்ணனை விட இவனுக்குக் கற்பனை உணர்ச்சிகள் அதிகம். துணிவு மிக்க பல வம்பு வழக்குகளின் தலைவனுக அவன் விளங்கினுன். மேலும் அந்தச் சமயங்களில் சிக்கிக் கொண்டால் அவனுடைய சாதுர்யமான பேச்சுக்களையும் தந்திரமான செயல்களையும் உபயோகித்து அடிபடாமலே தப்பித்துக் கொள்வான். ஆனுல் அதைப்போன்ற சந்தர்ப்பங்களில், ஒஸ்டாப் தந்திரமான பொய்க் காரணங்களைக் கூறித் தப்பித்துக்கொள்வதைக் கோழைத்தனம் என்று உதறி விட்டு அவர்களுடைய கருணையை வேண்டிக் கேட்பதை வெறுத்து, தன் சட்டையைக் கழற்றி விட்டுத் தன் உடம்பைக் காட்டுவான், அது எந்தத் தண்டனையா யிருந்தாலும் சரி என்று. ஆன்றிக்குக்கூட வீரச் செயல்கள் பல புரிய வேண்டும் என்ற அவா இருந்தாலும், அவன் உள்ளத்திலே வேறு பல எண்ணங்களுக்கும் இடம் இருந்தது. அவனுக்குப் பதினெட்டு வயது கடந்ததும், காதல் எண்ணங்களால் அவன் உள்ளம் ஏங்க ஆரம்பித்தது. அதன் பிறகு அவன் ஆசைக் கனவுகளில் அடிக்கடி பெண்கள் தோன்ற ஆரம்பித்தனர். தத்துவ விசாரணை பற்றிய பிரசங்கங்கள் பல கேட்டுக் கொண்டிருக்கும் அதே நேரத்திலேயே—புத்தம் புதிய கருமை படர்ந்த கண்களை உடைய பல அழகான பெண்கள் அவன் கண்களுக்கு முன்னே நர்த்தனமாடுவதுபோலத் தோன்றும். அவன் மனத் திரையிலே எப்போது பார்த்தாலும், ஒருத்தி

யின் உறுதியான மின்னுகின்ற மார்பகங்கள் துள்ளுவது போலவும், அவளுடைய தோள்ப்பட்டை வரை திறந்து மெல்லிய தன் இரு கரங்களைக் காட்டுவதுபோலவும், தனது கன்னிப் பருவ எழிலோடு கூடிய அங்கங்கள் முழுவதும் ஆடைக்குள் மறைந்திருந்தாலும் இவன் கண்களுக்கு அந்தக் காட்சி காமவெறி ஊட்டுவது போலவும், பல உணர்ச்சிகளோடு அவன் தோன்றுவாள். தனது இளமை கொந்தளிக்கும் உள்ளத்திலே தோன்றுகிற இந்த இச்சையை அவன் தன் சகாக்களுக்குத் தெரியாதபடி பார்த்துக் கொண்டான். ஏனென்றால் அந்தக் காலத்தில் இந்த வயதுடைய ஒரு இளம் கோஸக், யுத்தத்திற்குச் செல்லுமுன்பே, இதைப் போன்று பெண்களைப்பற்றியும் அவளது ஆசையைப்பற்றியும் எழும் எண்ணங்களுக்கு இடம் கொடுப்பது தவருகக் கொள்ளப்பட்டது. அவனுடைய கல்லூரியின் கடைசி வருஷத்தில், முன்போல, வம்பு செய்து துணிச்சலாகப் பிறர் பொருளைக் கவருடச் செல்லும் கூட்டத்தில்சேராமலேயே இருந்தான். அதற்குப் பதிலாகக் கீவ் நகரத்து மூலை முடுக்குகளில் உள்ள தெருக்களில் அலைந்து திரிந்து வந்தான். அந்தத் தெருக்களில் அவன் கண்ட தாழ்ந்த கூரையை உடைய சிறு வீடுகள் செர்ரித் தோட்டத்தின் ஆழத்திலே அமைக்கப்பட்டவை போன்று அவன் உள்ளத்திலே ஆசை வெறி தூண்டச் செய்தன. பிரபுக்கள் குடியிருக்கும் பகுதியான பழைய கீவ் நகர எல்லைகளுக்குள் கூட அவன் பல சமயங்களில் அலைந்து திரிந்திருக்கிறுன். அங்கு, உக்ரேனிய, போலந்து தேசத்துப் பிரபுக்கள் பலர், மிகவும் நேர்த்தியான வீடுகளை அமைத்துக் கொண்டு வாழ்ந்திருந்தனர்.

அந்த வீதியிலே இவன் ஒரு நாள், ஆச்சரியத்தால் வியந்து போய், வாயைத் திறந்துகொண்டு நின்றிருந்த சமயம், அந்தப் பாதை வழியாகச் சென்றுகொண்டிருந்த ஒரு போலந்து தேசத்துப் பிரபுவின் கோச் வண்டி அவன் மேலேயே ஏறிவிடுவது போல அவ்வளவு அருகில் பாய்ந்தோடியது. அந்த வண்டியோட்டி, சரியான சமயமாகப் பார்த்துத் தன்சாட்டையால் இவனை ஒருஇழுப்பு இழுத்து விட்டான். அடிபட்ட அந்தக் கல்லூரி இளைஞனுக்குக்

கோபம் பொத்துக்கொண்டு வந்து விட்டது. உடனே பாய்ந்து சென்று ஓடி அந்தக் கோச் வண்டியின் சக்கரங்களில் ஒன்றைத் தன் பலம்பொருந்திய கரங்களால் பிடித்துக் கடைசியில் வண்டியையே நிறுத்திவிட்டான். அந்த வண்டிக்காரன் தன்னை அடிக்கத்தான் வருகிறான் என்று நினைத்து, தன் சாட்டையால் அந்தக் குதிரைகளைத் தட்டி, வண்டியை மிக வேகமாக ஓட்டினான். நல்ல வேளையாக ஆன்றி தன் கைகளை அந்தச் சக்கரத்தினின்றும், எடுத்து விட்டான். வண்டி புறப்படவும், அவன் அப்படியே கீழே கவிழ்ந்த வண்ணம் வீழ்ந்தான். மண்ணில் வீழ்ந்ததும் அவன் அருகே இன்னிசை ஒலிக்கும் கேலிச் சிரிப்பின் ஒலி கேட்டது. ஆன்றி எழுந்து சுற்றிப் பார்த்தான். அவனுக்கு நேர் எதிரே ஒரு ஜன்னலருகே நின்றுகொண்டிருந்த ஒரு அழகுத் தெய்வம்—அவன் இதுவரை எங்குமே காணாத அவ்வளவு கருமையான கண்களும், பனியைப் போன்ற வெண்மையான முகத்தில் ஓரளவு செம்மைப் பொலிவும் குடிகொண்ட ஒருத்தி—சிரித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய சிரிப்பு அடங்கவே இல்லை; இன்னும் அதிகமாகச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு அவள் அழகை மேலும் அதிகமாக்கிக் காட்டிற்று. அவன் தன்னை மறந்து அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டான். அவளையே ஊன்றிப் பார்த்துக்கொண்டு, எங்கோ நினைவாய், தன் புறங் கைகளால், முகத்தைத் துடைத்துக் கொண்டான். அது அவன் முகத்தை மேலும் அழுக்காக்கிற்று. யார் இந்த அழகு மங்கை? இந்தப் பெண்ணைப்பற்றிய உண்மையை அறிந்துகொள்ள வேண்டுமென்று அங்கே 'பண்டுரா' வாசித்துக்கொண்டிருந்த ஒருவனைச் சுற்றிச் சூழ்ந்திருந்த வேலைக்காரர்களை அணுகிக் கேட்டான். அந்த வேலைக்காரர்கள் பளபளக்கும் நேர்த்தியான பதக்கங்களை அணிந்திருந்தனர். ஆன்றியின் நிலையைக் கண்டு அவர்கள் சிரித்துவிட்டு ஒன்றுமே சொல்லாமல் போய் விட்டனர். கடைசியில் ஒரு வழியாக அவள் கோவ்னோவைச் சேர்ந்த வேவோட்டின் மகள் என்றும் அந்த ஊரைச் சுற்றிப் பார்க்க வந்திருப்பதாகவும் அறிந்தான்.

அதற்கடுத்தநாள் இரவு, கீவ் நகரக்கல்லூரி மாணவர்களுக்கே உள்ள தைரியத்துடன், சந்தடிசெய்யாமல் அந்த வீட்டின் வேலியைக் கடந்து தோட்டத்துக்குள் நுழைந்து, கிளைகள் பல நிறைந்து அந்த வீட்டின் உச்சிக் கூரையெல்லாம் படர்ந்திருந்த ஒரு மரத்தின் மீதேறி, வீட்டின் கூரையை அடைந்து, அங்கிருந்த புகை போக்கி வழியாக நேரே அந்த அழகிய மங்கை இருக்கும் அறையிலேயே சென்று குதித்தான். அப்போது அவள் ஒரு மெழுகு வத்தியின் முன் அமர்ந்துகொண்டு தன் விலையுயர்ந்த காதணிகளை அவிழ்த்துக் கொண்டிருந்தாள். திடீரென்று தன் முன்னே ஒரு அன்னியன் வந்து நின்றதைக் கண்டதும் ஒன்றுமே பேசமுடியாமல் திணறிப்போய் விட்டாள். தன்முன் நின்ற அவன், கண்களைத் தாழ்த்திக் கொண்டு தலையைக் கவிழ்த்துக்கொண்டு நிற்பதையும், ஒன்றுமே செய்ய முடியாமல் மௌனமாக நிற்பதையும் கண்டாள். அவனை நன்றாகப் பார்த்ததும், நேற்றுத் தன் கண்முன்னே அவன் வண்டியிலிருந்து கீழே விழுந்தவன் என்பதைக் கண்டு கொண்டாள். உடனே அவளுக்கு மீண்டும் அந்த நிகழ்ச்சி சிரிப்பை வரவழைத்து விட்டது. தன்னாலான மட்டும் உரக்கச் சிரித்தாள். வெகு நேரம் அவள் அவனைப் பார்த்துச் சிரித்தாள். ஆன்றியும் அப்படி ஒன்றும் பயங்கரமான தோற்றம் உடையவனல்ல—மிகவும் அழகானவன்—அந்த அழகிய மங்கை பிற போலந்து தேசத்துப் பெண்களைப் போலவே இருந்தாள். ஆனால், அழகு மிகுந்த நிர்மலமான கூர்மையான அவளது கண்கள் மட்டும் அவனை ஏறிட்டுப் பார்ப்பதும், எவ்வளவு நேரம் அப்படிப் பார்க்க முடியுமோ அவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டுமிருந்தன. அந்தக் கல்லூரி மாணவன் ஏதும் செய்வதறியாமல் அப்படியே கட்டிப் போடப்பட்டவன் போல அசந்து நிற்க, அந்தப் பெண், மிகவும் குறும்புத் தனமான தைரியத்துடன் அவன் அருகே வந்தாள். தன் காதணியை எடுத்து அவனது உதடுகள் மேல் வைத்தாள். தனது முடியலங்காரத்திற்குரிய கிரீடத்தை அவன் தலையில் சூடினாள்; தங்க நிறப் பூக்களால் அலங்கரிக்கப்பட்ட, மஸ்லின் உள்ளாடையை அவன் மேல் போர்த்தினாள்; அவனுக்குப் பலவிதமான ஆடைகள் அணிவித்து ஆயிர

விதமான வேடிக்கை விளையாட்டுகள் விளையாடினுள். இந்தச் செய்கைகளிலெல்லாம் மயக்கந் தரும் போலந்துப் பெண்களுக்கு உரிய குழந்தை உள்ளத்துடன் செய்தாள். இந்தச் செயல்கள் அவனை மேலும் குழப்பிவிட்டன. திறந்த வாய் மூடாமல், அவன் ஒன்றும் செய்வதறியாமல் அவளுடைய மின்னுகின்ற கண்களையே பார்த்துக்கொண்டிருந்தான். அறைக் கதவின்மேல் கேட்ட சப்தம் அவனை விழித்துக்கொள்ளச் செய்தது. அவனைக் கட்டிலின் கீழே மறைந்துகொள்ளச் செய்தாள்; பிறகு ஆபத்து நீங்கியதும், ஒரு தார்த்தாரிய வேலைக்காரியை அழைத்து அவனை ஜாக்கிரதையாக வேலி அருகே கொண்டுபோய் விட்டு விட்டு வரும்படி கூறினுள். ஆனல் நமது கல்லூரி மாணவன் வந்ததுபோல அவ்வளவு சுகமாகத் திரும்பிப் போய் விட முடியவில்லை. வேலியைத் தாண்டும்போது விழித்துக் கொண்ட காவற்காரன், அவன் கால்களை நன்ருகப் பதம் பார்த்து விட்டான். அரவம் கேட்டு விழித்துக்கொண்ட மற்ற வேலைக்காரர்களும் அவனை விரட்டிக் கொண்டு போய் அவன் ஓடும்வரை நன்ருக அடித்து விட்டனர். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, அந்தக் குட்டி ராஜகுமாரன் வேவோடின் குடும்பத்தார் இருக்கும் பக்கமே தலைகாட்டுவதென்ருல் அவனுக்குப் பயமாகிவிட்டது. அதன் பிறகு ஒரு சமயம் போலந்திய ரோமன் கத்தோலிக்க மாதா கோவிலில் அவளைச் சந்தித்தான். இவனைக் கண்டு அவள் ஒரு இன்பப் புன்னகை பூத்தாள். சில நாட்களுக்குப் பிறகு அவர்கள் அந்த வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டனர். அந்தக் கருமை படர்ந்த கண்ணழகிக்குப் பதிலாக அதே வீட்டில் ஏதோ ஒரு அகோர ரூபிணியை ஒரு நாள் கண்டான்.

ஆன்றியின் எண்ணங்கள் இந்த முறையில் அலைபாய, சிந்தனை மனத்தினனாய்த் தன் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டே குதிரையின் தலையையே ஊன்றிக் கவனித்துக் கொண்டிருந்தான்.

இப்போது அவர்கள் அந்தப் புல் நிறைந்த மைதானத்திற்குள் நுழைந்து முன்னேறிக் கொண்டிருந்தனர். மிகவும் உயரமாக வளர்ந்திருந்த புற்கள் அவர்களை வாரி

அமிழ்த்துவிட்டது போல் தெரிந்தது. அவர்களைச் சுற்றி வளர்ந்திருந்த புற்கள் அவர்களை மறைத்துவிட்டன. இப்போது அவர்களுடைய கோஸக் தொப்பிகள் மாத்திரமே தெரிந்தன.

சிந்தனையிலிருந்து அப்போதுதான் விடுபட்ட புல்பா தன் பிள்ளைகளைப் பார்த்து "ஏன் இப்படி மௌனமாக வருகிறீர்கள்? உங்களைப் பார்த்தால் அசல் மௌனப் பாதிரிகளைப் போலிருக்கிறது. உங்கள் சிந்தனைகளைத் தூர எறியுங்கள், உங்கள் புகைபிடிக்கும் சுங்கான்களை எடுத்துக் கொளுத்துங்கள், குதிரையையும் தட்டிவிடுங்கள், பறவைகளை விட வேகமாகச் செல்வோம்" என்றான்.

அவர்கள் தங்கள் குதிரைகளைத் தட்டிவிட்டு அதன் கழுத்தோடு சாய்ந்து படுத்துக்கொண்டு வேகமாக விரைந்தனர். இப்போது அவர்களுடைய தொப்பிகள் கூடத் தெரியவில்லை. குதிரைகள் ஓடியதினால், புற்றரையில் அழுந்திய தடம் மட்டுமே தெரிந்தது.

சூரியன் தன் பொன் கிரணங்களை அந்த மைதானமெங்கும் பரப்பிவிட்டு மிக வேகமாக உச்சி வானத்தை நோக்கிக் கிளம்பினான். இதுவரை அழுது வடிந்துகொண்டிருந்த எல்லாமே ஒரு கவர்ச்சியான உயிர் பெற்றுக் காட்சி யளித்தன. அவர்களுடைய உள்ளங்கள் கூடத் தெம்பு பெற்றுப் பறவைகளைப் போல உல்லாசமாகக் கவி பாட ஆரம்பித்தன.

அந்தத் திறந்தவெளி, போகப் போக விரிந்து கொண்டே போயிற்று. இப்போது நோல்ரோஸ்யா என்று அழைக்கப்படும் கருங்கடலை ஒட்டிய அந்தப் பிராந்தியம் அப்போது ஒரே பசும்புற்றரையாகக் கிடந்தது. அளக்க முடியாத அவ்வளவு விஸ்தீரணமுள்ள அந்தப் புல் வெளியில் காட்டுப்புதர்களையப்படாமல் கிடந்தது. குதிரைகள் மட்டுமே இந்தப் புற்காட்டுக்குள் நுழைந்திருக்கின்றன. இயற்கையின் படைப்பிலே இதைவிட அழகானது வேறெதுவுமில்லை. லட்சக்கணக்கான பூக்கள் மிதக்கும் ஒரு பசுமைபடர்ந்த தங்கக் கடல் போல்

அந்தப் பிரதேசம் காட்சி தந்தது. மெல்லிய உயரமான தண்டுகளிலிருந்து பச்சை, ஊதா நிறத் தானியப் பூக்கள் தங்கள் மலர்ச்சியைத் தெரிவித்துக் கொண்டிருந்தன. கொத்துக் கொத்தாக மலர் குவிந்திருக்கும் இதன் மத்தியிலே எங்கிருந்தோ ஒரு கோதுமைக் கதிரும் காட்சி தந்தது. இந்த மலர்த் தண்டுகளின் நடுவே கவுதாரிகள் தங்கள் கழுத்துக்களை வெளியே நீட்டிக் கொண்டு நடமாடிக்கொண்டிருந்தன. மேலே வானத்திலே ஆயிர விதமான பறவைகள் கீதங்கள் முழங்கிக்கொண்டிருந்தன. வானத்தின் உச்சியிலே இரண்டு இறக்கைகளையும் அப்படியே அசையாமல் விரித்துக் கொண்டு, கீழே இந்தப் புற்றரையையே கவனித்துக் கொண்டிருந்தன சில பருந்துகள். காட்டு வாத்துகளின் சப்தம் வேறு எங்கோ இருக்கின்ற மற்றொரு ஏரியின் பக்கத்திலிருந்து எதிரொலித்தது. இந்தப் புதரிலிருந்து கிளம்பிய ஒரு கழுகு தனது இறக்கைகளை அளவெடுத்தது போல அடித்துக்கொண்டு ‘ஜிவ்’ என்று மேலே பறந்து சூரியனின் நீல நிற ஒளிக் கதிர்களில் ஆனந்தமாக நீராடி விட்டு இன்னும் மேலே பறந்தது. பார்ப்பவர் கண்களுக்கு ஒரு சிறு புள்ளி போலக் காட்சியளிக்கும் அவ்வளவு தூரம் பறந்துவிட்டது. ஓ! திறந்த வெளியே நீதான் எவ்வளவு அழகாய் விளங்குகின்றாய்!

நமது பிரயாணிகள் தங்கள் சாப்பாட்டுக்காகச் சில நிமிஷங்கள் ஓரிடத்தில் தங்குவார்கள். அவர்களோடு துணைக்கு வருகின்ற பத்து வேலையாட்கள் ‘ஓட்கா’ இருக்கும் மரப்பீப்பாய்களைத் திறந்து வைப்பார்கள். சில துண்டு ரொட்டிகளையோ அல்லது கோதுமையால் செய்யப்பட்ட பிஸ்கோத்துகளையோ சாப்பிட்டுவிட்டு, ஒரே ஒரு கோப்பை மதுவை மட்டும் அருந்துவார்கள். இந்தச் சமயங்களில், பிச்சைப்பழத்தின் தோல்தான் அவர்களுக்குக் கோப்பைகளாக உதவும். பிரயாணத்திலிருக்கும் போது யாரும் அதிகமாகக் குடிக்கக் கூடாது என்பது புல்பாவின் யோசனை. அதன் பிறகு தங்கள் பிரயாணத்தைத் தொடர்ந்தனர். மாலை வந்ததும், அந்தத் திறந்த வெளி, ஒரே ஜோதி மயமாகி, காட்சியே வேறு விதமாக

இருக்கும். பல்வித வண்ணங்கள் சேர்ந்த அந்தப் புல் வெளி, மாலைக் கதிரவனின், பலவித மந்தகாசமான ஒளிச் சேர்க்கை பட்டுக் கணத்திற்குக் கணம் அது காட்டும் விந்தைகளை நாம் நேரே பார்க்கும்படி தூண்டும். அங்கு காணப்படும் ஒவ்வொரு மலரும், ஒவ்வொரு செடியும் அந்த மாலை வேளையின் மஞ்சள் நிற வர்ணம் பூசிக் கொண்டு, ஒருவித மனோகரமான மகரந்தம் வீசக் காட்சி தரும். இந்த மணம் அந்தப் புல் வெளி எங்கும் பரவி மனத்திற்கு மகிழ்ச்சியை உண்டாக்கும். கற்றை கற்றை யாய் உலவிவரும் மேகக்கூட்டத்தின், நீல நிறத்தின் மேலே, யாரோ ஒரு பிரம்மாண்டமான தூரிகையினால் செந்நிறத் தங்கக்குழம்பை அள்ளிப் பூசியது போல், நிற மாற்றிக்கொண்டிருந்தது. அந்த மேகக் கற்றையின் முனைகளிலே, வெள்ளை வெளேரென்ற பஞ்சு போல சில மேக அணுக்கள் சிதறிப் பறந்து திரிந்துகொண்டிருந்தன. மாலை நேரத்தில், கடல் காற்றுப் போல அமைதியான ஒரு மென்காற்று அந்தப் புல்லின் நுனியைக்கூட அசைய விடாமல் மெல்லத் தவழ்ந்துகொண்டிருந்தது. பகலெல்லாம் இசைத்துக்கொண்டிருந்த கானத்தின் சுருதி மாறி புதிய கீதம் அந்த வெளியெங்கும் பரவியது. காட்டுப் பறவை கள் சில, தங்கள் கூடுகளை விட்டு வெளியே வந்து தங்கள் கீதங்களை முழக்கின. வெட்டுக்கிளிகளின் கோஷ்டி கானம் அந்த வெளியெங்கும் எதிரொலி செய் தது. எங்கோ ஒரு மூலையில் இருக்கும் ஏரியிலிருந்து ஒரு அன்னத்தின் குரல், வானத்திலெழுந்து ஒலித்துக் கொண்டிருந்தது.

நமது பிரயாணிகள், இரவு வந்ததும் அந்தத் திறந்த வெளியிலேயே, ஏதாவது நல்ல இடமாகப் பார்த்துத் தங்குவார்கள். வேலைக்காரர்கள் நெருப்பை உண்டாக்கி, அதன் மேல் சில கம்பிகளைக் கட்டித் தங்கள் உணவு வகைகளைத் தயார் செய்தனர். இரவு போஜனம் முடிந் ததும் விவசாயிகள் தங்கள் உடல்களை நீட்டி அந்த வெளியிலேயே படுத்துவிட்டார்கள். தங்கள் குதிரை களை மேயவிட்டுவிட்டார்கள். அங்கு வியாபித் திருக்கும் பலவிதமான பூச்சிகள் போடும் சப்தம் அவர்

களுடைய காதுகளில் ரீங்காரமிட்டுக்கொண்டே இருந்தன. வானத்து நட்சத்திரங்கள் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தன. அமைதியாக வீசும் காற்றில், காட்டுப் பூச்சிகளின் பலவித கானங்கள் நிறைந்து இவர்களுடைய காதுகளை நிரப்பின. அந்த இன்பகரமான கீத மயக்கத்திலேயே தங்களை மறந்து அவர்கள் தூங்கிவிடுவார்கள். தூங்குகின்றவர்களில் யாரேனும் ஒருவன் விழித்தெழுந்து அந்த வெளியில் இன்பகரமான காட்சியைப் பார்த்தால், அந்தப் பட்டுமெத்தை விரித்தது போன்ற வெளியைத் தொடும் வானத்தின் இருண்ட மேகத்தை ஒட்டி எங்கோ பறந்து செல்லும் அன்னங்களின் நிழல்களும் அவைகளின் வெண்மை நிற இறக்கைகளும், சமயா சமயத்தில் வெள்ளி நிற ஜோதி யடிப்பது போலவும் இருளின் கருமை படர்ந்து, ஏதோ ஒரு சிவப்பு நிறக் கைத் துண்டுகள் ஆகாயத்தில் பறப்பதுபோலவும் தெரியும்.

இவர்கள் ஒருவித சம்பவமுமின்றி முன்னேறிக் கொண்டே இருந்தனர். வழி யெங்கும் ஒரு மரத்தைக் கூடக் காண முடியவில்லை. எங்கும் அதே முடிவில்லாத புல்வெளி: டெனிப்பர் நதியை ஒட்டி இருக்கும் காடுகளை மட்டும் சமயத்தில் சற்றுச் சந்தேகத்தோடு கவனித்தார்கள். ஒரே ஒரு சமயம், தூரத்தில் தெரிந்த ஒரு காட்டைக் காட்டித் தன் பிள்ளைகளை அழைத்து "அதோ பாருங்கள் ஒரு தார்த்தாரியன் குதிரை மேல் போகிறான். உங்களால் அவனை முன்னேறிப் பிடிக்க முடியுமா பாருங்கள்; ஆனால் என் குதிரையைவிட அவனுடைய குதிரை மிகவும் வேகமாகப் போகும்; வேண்டாம்." என்றான். அந்தத் தார்த்தாரியன் இவர்களைக் கவனித்தான். ஆனால் பதின்மூன்று பேர்களாக இருக்கும் இவர்களைக் கண்டதும் அவன் மறைந்துவிட்டான். எனினும் புல்பா, தன் பாதையை மாற்றி டெனிப்பர் நதியில் கலக்கும் தாட்டார்கா என்ற சிறு நதியில் குதிரைகளோடு நீந்திச் சென்று அக்கரை அடைந்து எதிரிகளுக்குத் தாம் போகும் பாதையின் அடையாளம் தெரியாமல் செய்துவிட்டான். ஒருவேளை அவர்கள் மறைந்திருந்து பாதையில் மடக்கிவிட்டால் என்ன செய்வதென்ற பயம்.

மூன்று நாட்களுக்குப் பிறகு அவர்கள் சேரவேண்டிய இடத்திற்கு அருகே வந்துவிட்டனர். காற்று மிகவும் குளிர்ந்திருந்தது. ஆகவே டெனிப்பர் நதி வெகு சமீபத்தில் தான் இருக்கிறது என்று உணர்ந்துகொண்டனர். அவர்கள் நடக்க நடக்க, காற்று இன்னும் குளிர்ந்திருந்தது. கடைசியில் பரந்த நிலத்தை வளைத்துக்கொண்டு, கடலைப்போல் குமுறிக்கொண்டு டெனிப்பர் நதி புரண்டு ஓடுவதைக் கண்டனர். மிக விஸ்தீரணமுள்ள அதனுள் பல சிறு தீவுகள் மண்டிக் கிடந்தன. ஆனால் அந்த நதி அவைகளையும் மீறி இன்னும் பரந்து பாய்ந்து ஓடிக்கொண்டிருந்தது. அந்த நதிக் கரையில் அவர்கள் வந்து நின்று குதிரைகளிலிருந்து இறங்கி ஒரு படகில் ஏறி, மூன்று மணி நேரத்திற்குப் பிறகு கோர்ட்டிட்ஸா என்ற தீவின் கரையில் வந்து இறங்கினர். அந்த நாடோடிக் குடி யிருப்பு அப்போது அங்குதான் அமைந்திருந்தது.

அங்கு படகுக்காரர்களுடன் ஒரு கூட்டம் வாதாடிக் கொண்டிருந்தது. நமது கோஸக்குகள் தங்கள் குதிரைச் சேணத்துத் 'தங்குவாரை' இறுக்கினர்; புல்பா தனது பெல்டுகளை அழுத்திக் கட்டினான். கம்பீரமான தோற்றத்துடன் புல்பா தன் மீசைகளை உருவிக்கொண்டிருந்தான். அவனுடைய பிள்ளைகளும், ஆசையோடு அங்கு என்ன நடக்கிறதென்று ஆர்வத்தோடு காத்திருந்தனர். சிறிது நேரம் அங்கே நின்றுவிட்டு அவர்கள் இன்னும் கொஞ்ச தூரம் கடந்து அரை மைல் தூரத்திலிருக்கும் ஒரு சிறு கிராமத்தை அடைந்தனர். அந்தக் கிராமத்திற்குள் நுழைந்ததும், காது செவிடுபடுவதுபோல ஒரே சப்தம் கேட்டது. இருபது முப்பது கொல்லுப்பட்டறைகளில் ஐம்பது கொல்லர்கள் தங்கள் சுத்திகளால் அங்கு ஏதோ அடித்துச் சரிப்படுத்திக் கொண்டிருந்தனர். தெருக்களை ஒட்டிய சிறு தாழ்வாரத்தில் குதிரைகளைத் தேய்க்கும் வேலைக்காரர்கள் பலர் தங்கள் பலம் பொருந்திய கரங்களில், மாட்டுத் தோலை வைத்துப் பிசைந்து அதை மெதுவாக்கிக்கொண்டிருந்தனர். தொழிலாளர்கள் அம்பாரமாகக் கொட்டிக் கிடக்கும் இரும்பு எஃகுத் துண்டங்கள் அருகே அமர்ந்துகொண்டிருந்தனர். அதன்

அருகே துப்பாக்கி மருந்து செய்யும் உபகரணங்களும் கிடந்தன. ஒரு அர்மீனியன் தன் விலையுயர்ந்த கைத் துண்டை மேலே மாட்டிவிட்டுத் தன் வேலையைச் செய்து கொண்டிருந்தான். அங்கொரு தார்த்தாரியன் கொத்திய மாமிசத் துண்டை நெருப்பிலிட்டு வாட்டிக்கொண்டிருந் தான். ஒரு யூதன் தன் தலையை வெளியே நீட்டிக் கொண்டு பீப்பாயிலிருந்து மதுவை எடுத்து ஊற்றிக் கொண்டிருந்தான். ஆனுல் இவர்கள் பார்த்த முதல் ஆசாமி ஒரு சபோரோஷிய கோஸக். அவன் நட்ட நடுத் தெரு வில், கால்களையும் கரங்களையும் அகலப் பரப்பிக்கொண்டு நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருந்தான். புல்பாவினுல் நின்று இந்தக் காட்சியைக் காணுமல் இருக்க முடியவில்லை.

"என்ன அழகான காட்சி, என்ன ஆண்மையான தோற்றம் இவனுக்கு" என்று வியந்தான்.

உண்மையிலேயே அங்கு படுத்திருந்தவனின் உருவம் ஒரு வீரமிக்க பலசாலியினதுதான். அங்கு படுத்திருந்த கோஸக் தன் சர்வாங்கமும் நன்கு நிலத்தில் பட நீட்டிக் கொண்டு ஒரு சிங்கத்தைப் போலப் படுத்திருந்தான். அவ னது கற்றைத் தலை மயிர் அவனது தலைக்குப் பின்னே தள்ளப்பட்டிருந்தது. அந்தப் பாதையின் பெரும் பாகத்தை அவனது உடல் அடைத்துக்கொண்டது. விலை யுயர்ந்த துணிகளால் ஆன கால்சட்டைகளில், தார் படிந்து கிடந்தது.

இந்தக் கோஸக்கைத் தன் ஆசை தீரப் பார்த்துவிட்டு புல்பா, ஒரு சிறிய வீதியினுள் நுழைந்தான். அந்த வீதி யில்,பல இனத்தைச் சேர்ந்தவர்களும், வியாபாரிகளும், தொழிலாளர்களுமாக நிறைந்து காணப்பட்டனர். அந் தக் கிராமமே, ஒரு சிறு சந்தையைப் போலக் காட்சி தந்தது. உள்ளபடியே இந்தச் சிறு கிராமம்தான் அந்தக் குடி யிருப்பிலிருந்தவர்களுக்கு உணவும் ஆடையும் தர உதவியது. சுடுவதும், மதுப் போட்டியில் ஈடுபடுவதுமாக இருக்கும் இந்தக் கோஸக்குகளுக்கு வேறு வழி இல்லை.

அந்தச் சிறு கிராமத்தைக் கடந்து இன்னும் சிறிது தூரம் சென்றதும், பல கோஸக்குகளின் வீடுகள் அங்கு

சிதறிக்கிடந்தன. இந்த வீடுகளின் கூரைகள், புற்பற்றை யால் ஆனது. சில வீடுகள் தார்த்தாரிய முறையிலும் அமைந்திருந்தன. ஆனால் அந்தக் கிராமத்தில் பார்த்தது போன்ற வீடுகள் இங்கு ஒன்றுகூடக் கிடையாது. சில வீடு களைச் சுற்றிப் பீரங்கிகள் நிறுத்தப்பட்டிருந்தன, தாழ்ந் திருந்த கொத்தளம் ஒன்று யாருடைய காவலுமின்றி அங்கு கலனாகிக் கிடந்தது. அங்கு பாதையில் நடந்து கொண்டிருந்த கோஸக்குகள், தங்கள் புகை பிடிக்கும் சுங்கான்களை வாயில் வைத்துக்கொண்டே இவர்களை ஒருவித சலனமும் இன்றிப் பார்த்துவிட்டுப் போய்க் கொண்டே இருந்தனர். புல்பாவும் அவனது பிள்ளைக ளும் இவர்களைக் காணும்போதெல்லாம் மரியாதைக்காக "என்ன சௌக்கியமா?" என்று கேட்பார்கள். அவர்களும் மரியாதைக்குப் பதிலளித்துவிட்டுச் சென்றுவிடுவார்கள். அந்த இடமெங்கும் பலவித மானவர்கள் கும்பல் கும்ப லாகக் கூடி நின்றுகொண்டிருந்தனர். யுத்தங்களில் புடம் போட்டுப் பல தொல்லைகளை வெற்றி கண்ட அவர்கள் முகங்கள் எஃகுபோலத் தோன்றின. இதுதான் செட்ச். உக்ரேன் எங்கும் பரவி இருக்கும் கோஸக் வீரத் திற்கும், சுதந்திர உணர்விற்கும் பிறப்பிடம்.

நமது பிரயாணிகள், அங்கு வழக்கமாகக் கோஸக் ஆலோசனைக்குழு கூடும் ஒரு பெரிய மைதானத்திற்குள் நுழைந்தனர். ஒரு சபோரோஷியன், கவிழ்க்கப்பட்டிருந்த ஒரு பீப்பாயின் மேல் அமர்ந்துகொண்டு, தன் சட்டை யைக் கழற்றி, அதிலிருந்த கிழிசல்களைத் தைத்துக்கொண் டிருந்தான்; அவர்கள் இன்னும் கொஞ்ச தூரம் சென்ற தும், ஒரு இளம் கோஸக், ஆட, பலர் பாட்டுப் பாடிக் கொண்டு வர, ஒரு கும்பல் இவர்களைச் சுற்றிக்கொண் டது. அந்த நடனமிடும் சிறுவன் தன் கைகளையும் கால் களையும் சர்வ அனுவசியமாகச் சுழற்றியும் வளைத்தும் ஆடிக்கொண்டிருந்தான். அவன் தலையில் ஒரு ஓரத்தில் குல்லாய் ஒன்று சரிந்து தொங்கிக் கொண் டிருந்தது. இசைபாடும் தன் தோழர்களைப் பார்த்து இன்னும் சற்று வேகமாகப் பாடுங்கள் என்று கேட்டுக் கொண்டே இருந்தான் அந்தச் சிறுவன். அங்கிருந்த மற்

ஒரு இளம் கோஸக்கான போமா என்பவனிடம் வருகின்ற எல்லோருக்கும் ஒரு கோப்பை மதுவை ஊற்றிக் கொடுக்கும்படி கூறினன். அந்தச் சிறுவனும் அனை வருக்கும், நிறைய மதுவை ஊற்றிக் கொடுத்தான். இன்னும் வயதான நான்கு கோஸக்குகள் தங்கள் பலம் பொருந்திய கால்களால், பூமியை அழுத்தி உதைத் துக் கொண்டும், திடீரென்று முன்னே பாய்ந்தும், சடாரென்று கீழே உட்கார்ந்து பின்னே ஓடியும் நடன மிட்டுக்கொண் டிருந்தனர். அவர்கள் கால்களில் அணிந்திருந்த வெள்ளிப் பூணிட்ட ஜோடுகளில் ஏற்பட்ட விதவிதமான நாட்டிய தாளங்களின் ஓசை யினல் அந்தப் பிராந்தியமே அதிருவதுபோல் இருந்தது. இந்தக் கூட்டத்திலே எல்லோரையும்விடச் சற்று அதிக மாகச் சப்த மிட்டுக்கொண்டும், ஆடிப் பாடிக்கொண்டும் ஒருவன் இருந்தான். அவன் உடம்பில் சட்டை கிடை யாது. ஆனல் ஆட்டுத் தோலால் செய்யப்பட்ட ஒரு கோட்டை மட்டும் அணிந்திருந்தான். அவனுடைய அடர்ந்த தலைமயிர் அனுயாசமாக ஆடிக்கொண் டிருந்தது. வியர்வை அவன் உடலெங்கும் முத்து முத்தாகக் கொட்டிக் கொண்டிருந்தது. புல்பா இதைப் பார்த்து,

"அந்தக் கோட்டை அவிழ்த்து எறிந்துவிடு, உனக் குத்தான் அப்படி வியர்க்கிறதே" என்ருன்.

"என்னல் முடியாது" என்று அந்தச் சபோரோஷியன் பதிலுக்குக் கத்தினன்.

"ஏன்?"

"என்னல் முடியாது, அது என் வழக்கம். நான் எதையாவது கழற்றுவதா யிருந்தால், என்னுடைய 'ஓட்கா'வுக்காகத்தான் கழட்டுவேன்."

அவன் சொன்னது போலவே, அவன் வசம் நல்ல சட்டையோ, குல்லாயோ, பூ வேலைப்பாடுகள் நிறைந்த கைக்குட்டைகளோ—எதுவும் இல்லை. எல்லாம் அவன் சொன்னதைப்போல் வழக்கமான இடத்திற்குப் போய்விட்டன.

இந்த நடனக் கூட்டத்தில் ஜனங்கள் அதிகமாகிக் கொண்டே இருந்தனர். அங்கு பாடப்படும் பாட்டின் தலை கிரங்க வைக்கும் இசை, மனத்தைக் கிளறி ஒரு வித வெறியைக் கிளப்பிவிடும் நடனம் இவற்றில் சேராமலிருக்க யாராலும் முடியாது. உலகத்திலேயே இதைப் போன்ற ஒரு வெறி உணர்ச்சி மிக்க சுதந்திர நடனத்தை எங்கும் காணமுடியாது. இந்த மகத்தான நடனத்தைக் கண்டுபிடித்தவர்கள் அதற்கிட்ட பெயர் 'கோஷஸோக்.'

"நான் குதிரைமேல் இல்லாமல் இருந்தால் இந்த நடனத்தில் நானும் பங்கெடுத்துக்கொண் டிருப்பேன்" என்றான் புல்பா.

பல போர்களிலே வீரமிக்க செயல்கள் புரிந்து, அந்தச் செட்சில் உள்ளவர்களால், மரியாதையாகவும் கௌரவமாகவும் மதிக்கப்படும் பல வயது முதிர்ந்த கோஸக்குகள் அந்தக் கூட்டத்தில் தென்பட்டனர். நரைத்த தலையை உடைய அவர்கள், பலமுறை தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட் டிருக்கின்றனர். புல்பா அவர்களில் பலரைத் தெரிந்துகொண்டான். அதன் பிறகு ஓஸ்டாப்பும், ஆன்றியும் அவர்களோடு தம் தந்தை பேசுவதையும், அதற்கு அவர்கள் பதில் சொல்வதையும்தான் கேட்டுக்கொண் டிருந்தனர். "ஓ, நீயா பெக்ரிஷ்டா, வணக்கம் கோஷோலோப்;......கடவுள் உன்னை எங்கிருந்து கொண்டுவந்து சேர்த்தார் புல்பா; நீ எப்படி இங்கு வந்தாய் டோலோட்டோ; நீயா கிரிடியாகா; எப்படி இருக்கிறாய் குஷ்டி! உன்னை நான் திரும்பப் பார்க்கக் கூடும் என்றே நினைக்கவில்லை ரெமென்;" என்று புல்பாவோடு பலர் பேசவும் குசலம் விசாரிக்கவும், ஒருவரை ஒருவர் சேர்த்துப் பிடித்துக்கொண்டு முத்தமிட்டுக் கொள்ளவும் ஆரம்பித்தனர். கிழக்கு ருஷ்யாவிலிருந்து வந்திருக்கும் களம் பல கண்ட வீரர்களைப் பற்றியும், தன்னோடு போரிட்ட தோழர்களைப் பற்றியும் பல விவரங்களைக் கேட்டான் புல்பா. மேலும் புல்பா குறிப்பாக "காஷ்யன் என்னவானான்? போரோடவ்கா எங்கே? கோலோப்பியருக்கு என்ன நேர்ந்தது? பிட்ஸிஸோக்

எப்படி இருக்கிறுன்?'' என்று பலரைப் பற்றிக் கேட்ட தற்கு அவனுக்குக் கிடைத்த பதில் இதுதான்: போரோ டவ்காவைத் தூக்கிலிட்டு விட்டார்கள்; கோலோப்பி யாவை கிஸிகிர்மென் என்ற இடத்தில் உயிரோடு நெருப்பி விட்டு விட்டார்கள்; பிட்ஸிஸோகின் முண்டத்தை உப்பி விட்டு ஒரு ஜாடியில் கான்ஸ்டான்டி நோபிளுக்கு அனுப்பி விட்டார்கள். இந்த விவரங்களைக் கேட்ட புல்பா கவலை தோய்ந்த முகத்துடன், ''ஆனுல் அவர்கள் அனைவரும் நல்ல கோஸக்குகள்'' என்று கூறினுன்.

## 3

அந்தச் செட்சில் புல்பாவும் அவனது இரண்டு பிள்ளைகளும் மூன்று வாரங்களைக் கழித்து விட்டனர். ஓஸ்டாப்பும் ஆன்றியும் அங்கு ராணுவப் படிப்பில் அதிக மாக ஈடுபடவில்லை. அங்கிருந்தவர்களும் தங்கள் நேரத்தை ராணுவ வேலைகளில் ஈடுபட்டு வீணுகக் கழிக்க விரும்பவில்லை. அங்கிருக்கும் யுவர்கள் அனைவரும் நேரடியான யுத்தங்களில் ஈடுபட்டு யுத்த தந்திரங்களை அங்கேயே கற்றுக் கொண்டவர்கள். போர்களுக்கும் அங்கொன்றும் குறைச்சலில்லை. யுத்த காலங்கள்போக, மற்றக் காலங்களில் போர்ப் பழக்கங்களில் ஈடுபட்டு அவதிப்பட அவர்கள் விரும்புவதில்லை. போர்ப் பழக்கம் அற்று விடாமலிருக்க எப்போதாவது சிறிதுநேரம் குறி பார்த்துச் சுட்டும், வேகமாகக் குதிரைகள்மீது சவாரி செய்தும் பழகுவார்கள். மீதி நேரங்களைக் கேளிக்கை களில் கழிப்பார்கள்—தங்கு தடையில்லாத அவர்கள் சக்திக்கு எடுத்துக் காட்டே இந்தக் கேளிக்கைகள்தான்.

அந்தப் பிரதேசம் எப்போதும் திருவிழா நாட்களைப் போலவே காட்சியளிக்கும். சதா காலமும் சப்தமும் கேளிக் கைகளும் நிறைந்து எப்போது ஆரம்பித்தது என்றும் எப்போது முடியும் என்றும் சொல்ல முடியாதபடி ஒரே ஆட்டமும் பாட்டமுமாக இருக்கும். சிலர் மட்டும், தங்கள் தொழில்களில் ஈடுபட்டு இருப்பார்கள். மற்ற வர்கள், விடிந்ததிலிருந்து இருட்டும்வரை, குடிக்கும்

போட்டியில் ஈடுபட் டிருப்பார்கள். தங்களுக்கு வசதி இருந்தால் தங்கள் பைகளில் உள்ள கடைசிக் காசு செலவாகும் வரை குடிக்கும் போட்டியில் அமிழ்ந்து கிடப்பார்கள். தங்களை மறந்த உற்சாகத்தோடு இப்படி இவர்கள் குடித்துக் களிப்பதிலே ஒரு முக்கியமான அம்சமும் இங்கு குறிப்பிடத் தகுந்தது. இந்தக் கூட்டத்தார் தங்கள் கவலைகளை மறக்கக் குடித்துவிட்டு ஆடுகின்ற குடிகாரர்கள் அல்ல. அடக்கமற்ற அவர்களுடைய கேளிக்கைகளில் தங்களை மறந்து சந்துஷ்டி அனுபவிக்கும் குணத்தைத்தான் இது வெளிப்படுத்துகிறது. இங்கு வருகின்ற ஒவ்வொருவனும், தனது பழைய கால நினைவுகளை அறவே மறந்துவிட்டு, நடந்து போனவற்றைப் பற்றிச் சிறிதுகூடக் கவலைப்படாமல்—அவர்கள் பாஷையில் சொல்வதென்ருல்—தங்கள் பழைய நிகழ்ச்சிகளின் முகத்தில் காறி உமிழ்ந்துவிட்டுத் தம்மை மறந்த லயத்தில் ஒன்றிக் கேளிக்கைகளில் அமிழ்ந்து விடுவார்கள். அவர்களுக்கென்று தனியாக ஒரு வீடோ வாசலோ இல்லாமல், தம் சுதந்திர உள்ளத்தில் தோன்றுகின்ற இயற்கையான இன்ப எழுச்சிகளுக்கு ஈடுகொடுத்து அமர்க்களமாய் இன்பம் அனுபவிப்பார்கள். இதனுல்தான் அவர்களிடம் அந்த இரும்பு நெஞ்சமும், துணிச்சலான மனப் போக்கும் பெருகி வளர்ந்தது. இந்தக் குணங்கள் வேறு எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும் வளராதல்லவா? இந்தச் சபோரோஷியர்களின் வாய்மூலம் வெளிப்பட்ட பலவிதமான கதைகளையும், செய்திகளையும் கேட்டால், யாரும் சந்தோஷத்துடன் மனம் விட்டுச் சிரிக்காமலிருக்க முடியாது. மனத்திண்மை உள்ள சபோரோஷியனுல் கூட, தன் சக்தியனைத்தையும் உபயோகித்துத் தடுத்துப் பார்த்தாலும் தன் மீசையாவது அசைந்துவிடும்படி சிரித்துவிடுவான். பிற ருஷ்ய சகோதரர்களிட மிருந்து இன்னும்கூட வேறுபடுத்திக் காட்டும் அந்த நீண்டமீசைகளைத் தெற்கு ருஷ்யர்கள் வளர்த்திருப்பார்கள். கேளிக்கையும், குடிபோதை நிறைந்தவர்களாயு மிருந்தாலும், அவர்கள் கவலையால் ஒன்று சேர்ந்த நெல்லிக்காய் மூட்டைகள் அல்ல. ஒரே வகுப்பில் படித்த மாணவர்களைப்போன்ற ஒற்றுமை நிறைந்தவர்கள். ஆனுல், தங்கள் ஆசிரியர்கள் காட்டும் பாதையில் முன்

னேருமல், அவர் கூறுகின்ற அர்த்தமற்ற வெறும் அலங்கா ரச் சொற்களைக் கேட்டு நடக்காமல், தங்கள் குதிரைகளில் ஏறி அமர்ந்து கொண்டு, பள்ளிகளில் பந்தாடும் மைதானங்களுக்குப் போவதற்குப் பதிலாகக் காவலற்ற எல்லைகளைக் கடந்து ஒரு தார்த்தாரியனே, அல்லது பச்சை நிறத் தலைப்பாகை அணிந்த துருக்கியனே தலைகாட்டும் இடத்தை நோக்கிச் சென்று போரிட்டு வெற்றியுடன் திரும்புவார்கள். மேலும் பலவந்தமான வற்புறுத்தலுக்கு அடிபணிந்து ஒற்றுமையோடிருக்கும் பள்ளி வாழ்க்கை போல அல்லாமல், தாங்களாகவே தங்கள் வீடு வாசல், தாய் தந்தையர்களை விட்டு விலகித் தங்கள் கழுத்துக்களைச் சுற்றிய தூக்குக் கயிற்றுக்கும் பயப்படாமல், அந்தப் பயங்கரத்திலிருந்தும் தப்பித்துக் கொண்டு வாழ்கின்றவர்கள். தங்கள் வாழ்வை ஒரே கேளிக்கை மிகுந்த இன்ப உலகமாக்கிக் கொண்டு தங்களிடம் ஒரு சல்லி கூடச் சேமித்துக் கொள்ளாமல், தங்கள் பரம்பரை வழக்கப்படி கடைசிச் சல்லி உள்ளவரை சந்தோஷத்தோடிருந்துவிட்டு நிம்மதியாகக் காலங்கழிப்பவர்கள்; தங்கள் பைகளில் ஒரு சல்லி இருந்தாலும் அதைப் பெரிதாக மதிப்பவர்கள்; அவர்களுடைய பைகளைத் திறந்து தலை கீழாகக் கவிழ்த்தாலும்-யூதர்களின் 'கைத்திற'னல்—ஒரு சல்லியும் இராது. கல்லூரியின் கட்டுத்திட்டங்களுக்கு ஈடுகொடுக்க முடியாமல், அங்கிருந்து ஒரு சிறு வார்த்தையைக் கூட மறந்தும் ஞாபகத்தில் பதித்துக் கொண்டு வராதவர்கள் அவர்கள்; ஆனல் இவர்கள் மத்தியில் கூட, ரோமானியக் குடியரசு பற்றியும், ஹோரஸைப் பற்றியும் ஸிஸிரோவைப் பற்றியும் அறிந்தவர்கள் பலர் இருக்கின்றனர். போலந்து அரசனின் படைகளில் சேர்ந்து பல போர்களில் தங்கள் வீரத்தைக் காட்டிப் பெருமைப் பட்டவர்கள் பலர் இருந்தனர். இவர்களுக்கு நாம் எங்கே சண்டை செய்கிறேம் என்பதுபற்றிக் கவலை இல்லை. எப்படியாவது எங்காவது போரில் ஈடுபட வேண்டும் என்பது இவர்கள் கொள்கை. போரில் ஈடுபடாதவன் ஒரு கௌரவமான ஆண்பிள்ளையின் தன்மை பெற்றவன் அல்ல என்பதும் இவர்கள் சித்தாந்தம். தாங்களும் இந்தச் செட்சில் பங்கெடுத்துக்கொண்டு

போர்ச் செயல்களில் ஈடுபட்டோம் என்று வெறும் ஓட்டைப் பெருமையடித்துக் கொள்ள வருபவர்களும் உண்டு. இங்கில்லாதவர்கள் வேறு எங்கும் இல்லை. யுத்தப் பிரியர்கள்; சொற்பத் தொகை உள்ளவர்கள்; தங்கள் ஆடைகளைக்கூட விற்றுவிட்டுப் போரிட விரும்புபவர்கள் முதலியவர்களைக்கொண்ட விநோதமான குடியரசு. இவர்களே அந்தச் சகாப்தத்தின் குழந்தைகள். இந்தக் கூட்டத்தில் சேர முடியாதவர்கள் ஒரே ஒரு பகுதியினர்தான். பெண்கள் பின்னுல் சுற்றுபவர்களே அவர்கள். ஏனென்ருல் இந்தப் பகுதியின் கிராமத்தைக் கூட எட்டிப் பார்க்க அஞ்சினர் பெண்கள்.

தங்களை யார் எவர் என்று விசாரிக்கப்படாத ஜனத்திரள் ஒன்று நேரே அந்தக் கூட்டத்தின் தலைவனிடம் சென்று தங்கள் எண்ணத்தை வெளியிடுவதையும், பிறகு தங்கள் வீட்டுக்குத் திரும்பிப் போவதுபோலத் திரும்புவதையும் கண்டு ஓஸ்டாப்பும் ஆன்றியும் ஆச்சரியப்பட்டனர். புதிதாகச் சேர விரும்புபவர்கள் கோஷிவோய் என்ற அந்தக் கூட்டத்தின் தலைவன் முன் சென்று நின்றனர்.

"இளைஞனே, வருக, நீ கிருஸ்துவிடம் நம்பிக்கை வைத்திருக்கிருயா?" என்று தன்முன்வந்து, நின்றவர்களைப் பார்த்துக்கேட்பான் அந்தத் தலைவன்.

"நம்பிக்கை வைத்திருக்கிறேன்" என்று புதிதாக வந்தவன் பதில் கூறுவான்.

"புனிதத் திரு மூர்த்திகளையும் நம்புகிருயா?"

"நம்புகிறேன்."

"மாதா கோயிலுக்குத் தவருமல் போகிருயா?"

"போகிறேன்"

"நீ எப்படி வணங்குவாய்?"

புதிதாக வந்தவன் தன் கரங்களால் சிலுவை அடையாளத்தைச் செய்து காட்டினுன்.

"சரி, நீ விரும்பும் எந்த விடுதியிலாவது தங்கிக் கொள்" என்று அந்தத் தலைவன் கூறிவிடுவான், அந்தச் செட்சில் உள்ளவர்கள் அவ்வளவு பேரும் ஒரே கோவிலில் பிரார்த்தனை செய்வார்கள். அவசியம் நேர்ந்தால், தங்கள் கடைசிச் சொட்டு ரத்தத்தையும் கொட்டி அம்மதத்தின் புனிதத் தன்மையைக் காப்பாற்றத் தயங்கமாட்டார்கள். இவ்வளவு நம்பிக்கையுள்ள இவர்கள், உபவாசங்களையோ பிற சம்பிரதாயங்களையோ பின்பற்றுவதில்லை. இவர்கள் மத்தியிலே வாழ்ந்து கொண்டு வியாபாரம் செய்யும் துணிச்சல், பண ஆசை பிடித்த அர்மீனியர்களுக்கும் யூதர்களுக்கும் தார்த்தாரியர்களுக்கும் மட்டுமே உண்டு. ஏனென்றால், இந்தச் சபோரோஷிய வாசிகள், தங்களிடம் பணம் இருந்தால் எவ்வளவு கொடுப்பதென்று யோசிக்காமல், பைக்குள் கையை விட்டு எவ்வளவு வருகிறதோ அவ்வளவையும் அவர்கள் முன் வீசி எறிந்துவிடுவார்கள். ஆனால் இவர்களுடன் வியாபாரம் செய்கிறவர்கள், வெஸ்வியஸ் மலைச்சாரலில் வசிப்பவர்கள் போன்றவர்கள், கையில் உள்ள பணமனைத்தும் செலவழிந்து விட்டால், இந்த மூர்க்கர்கள், அந்த வியாபாரிகளுடைய கடைகளை உடைத்து அங்கிருப்பவைகளில் தங்களுக்குத் தேவையானவற்றை இனமாகவே எடுத்துக் கொள்வார்கள்.

அந்தச் செட்சில் அறுபது குரன்கள்* இருக்கின்றன. ஒவ்வொன்றும் ஒரு சுதந்திரக் குடியரசு போன்றது. அங்கிருப்பவர்கள் எவரும் தங்களுக் கென்று தனியாக வீடோ சொத்தோ சேர்த்துக் கொள்ள விரும்பியதே இல்லை. எல்லாம் அந்தக் குரன்களின் தலைவனிடமே இருந்தன. கோதுமையிலிருந்து பிற உணவு வகைகள் வரை, அடுப்பெரிக்கும் விறகுகூட அவனிடம் தான் இருந்தன. இதற்காகவே அவனை பாட்கோ (தந்தை) என்றும் அழைப்பது வழக்கம். இவர்களுடைய உணவு, பணம் கூட அவன் வசம்தான் இருக்கும். அந்தச் செட்சில் வசிப்பவர்

* குரன் (Kurn)-பலர் ஒன்றாகச் சேர்ந்து தங்கும் கூட்டு விடுதி. இவ்வித விடுதிகளில் வாழும் குழுக்கள் கூட்டாகச் சேர்ந்தே போர்களிலும் ஈடுபடும்.

கள் தாங்கள் சம்பாதிப்பதை எல்லாம் அவனிடம் கொடுத்துவிடுவார்கள். இந்தக் குரன்களுக்கிடையே அடிக்கடி பூசல்கள் ஏற்படுவதும் உண்டு. அந்த மாதிரி சந்தர்ப்பங்களில், வெகு சீக்கிரம், வாய்ச்சண்டையை விட்டுவிட்டு, கைச்சண்டையில் இறங்கிவிடுவார்கள். இருசாராரும் மைதானத்தில் இறங்கிப் போரிட்டு, எந்தப் பகுதியாவது வெற்றிபெற்ருல் தவிர, பூசலை நிறுத்தமாட்டார்கள். அதன் பிறகு எல்லோருமாகக் கூடி, வழக்கமான மதுபானப் போட்டியில் கலந்துகொள்ளு வார்கள். இதைப்போன்ற இளைஞர் உள்ளத்தை ஈர்க்கும் பல சுவையான சம்பவங்கள் நிறைந்தவை இந்த செட்ச்.

தங்களை மறந்து, வீட்டை, கல்லூரியை, தங்கள் உள்ளங்களை இதுவரை பிடித்தாட்டிக் கொண்டிருந்த சிந்தனைகளை எல்லாம் மறந்து சந்துஷ்டி தரும் இந்தக் கேளிக்கைக் கடலில் மனம் லயித்து மூழ்கினர் அந்த இளைஞர்கள். இந்தப் புதிய வாழ்க்கை அவர்களுக்கு மிகவும் பிடித்துவிட்டது. கவலையற்ற ஆர்வத்தோடு இன்பம் பொங்க இந்தக் கூட்டத்தில் கலந்துகொண்டனர். அங்கு நிலவி வந்த சாதாரண நிர்வாகச் சம்பிரதாயங்கள் அவர்களுக்குப் பிடித்துவிட்டன. ஆனல் இவ்வளவு சுதந்திரக் குடியரசாக இருந்தாலும் அதன் சட்டதிட்டங் கள் மிகக் கடுமையாய் இருப்பதாக அவர்களுக்குப் பட் டன. திருட்டுக் குற்றம் சாட்டப்படுவது—அது எவ்வளவு சாதாரணமானதாக இருந்தாலும்—கோஸக் இனத்திற்கு மிகவும் அகெளரவமாகக் கருதப்பட்டது. அப்படிப் பட்ட குற்றம் செய்தவனைக் கொஞ்சங்கூட இரக்கமில் லாமல், 'அவமானக் கம்பத்தில்' கட்டிவிட்டு, அவன் அருகே ஒரு தடியை வைத்துவிடுவார்கள். அந்தப்பக்க மாகப் போவோர் அனைவரும், அந்தத் தடியால் அவனை ஒரு அடியாவது அடிக்காமல் போகக்கூடாது என்று வேறு நியதி இருந்தது. ஆகவே இந்தப் பரிதாபத்துக் குரியவன் அந்தக் கம்பத்திலேயே கட்டப்பட்டுத் தடியடி களால் துடிதுடித்துச் சாகும் வரை கிடப்பான். தான் பட்ட கடனைத் திருப்பிக் கொடுக்காதவனை பீரங்கியின் வாயில் கட்டி வைத்துவிடுவார்கள். அவனுடைய தோழர்

கள் யாராவது அவனுக்குப் பதிலாக, பணயப் பணம் கட்டினால் தவிர அவன் விடுவிக்கப்படமாட்டான். ஆன்றிக்கு இந்தத் தண்டனைகளைவிட, கொலைக் குற்றத்திற்குத் தரப்படும் தண்டனைதான் மிகக் கொடுமை நிறைந்ததாகப் பட்டது. கொலைக்குற்ற வாளியின் கண்ணெதிரிலேயே குழி தோண்டி, முதலில் அவனை உயிரோடு உள்ளே தள்ளி அவன்மேல் அவனால் கொலையுண்டவனின் சவப்பெட்டியைத் தள்ளிக் குழியை மூடிவிடுவார்கள். இப்படிப்பட்ட கொடுமையான காட்சியைக் கண்ட ஆன்றிக்கு—அது நடந்து வெகுநாட்களான பிறகுங்கூட-அந்தப் பரிதாபத்துக் குரியவனின் பயங்கரக் கொலையும், அந்தச் சவப்பெட்டியும், அவன் கனவில் தோன்றி, அவனை வாட்டியெடுத்தன.

மிக விரைவில், இந்த இரு சகோதரர்களும் மற்ற கோஸக்குகளுடன் மிக ஒற்றுமையாய் நடந்துகொள்ள ஆரம்பித்தனர். தங்கள் குரனைச் சேர்ந்த தோழர்களுடனும், சமயத்தில் பிற குரனைச் சேர்ந்தவர்களுடனும் சேர்ந்துகொண்டு கணக்கற்ற மைல்கள் வரை பரந்து கிடக்கும் அந்தத் திறந்த வெளியெங்கும் சென்று பலவிதமான பறவைகளையும், மான்களையும், ஆடுகளையும் வேட்டையாடிக்கொண்டு வருவார்கள். இது தவிர, ஏரிகள், நதிகள், சிற்றாறுகள் என ஒவ்வொரு குரனுக்கும் ஒவ்வொன்று ஒதுக்கி விடப்பட்டிருக்கும். அந்தந்த இடங்களுக்குச் சென்று தங்கள் வலைகளை வீசித் தங்களுக்குத் தேவையான உணவு வகைகளைச் சேமித்துக் கொடுப்பார்கள். இதைப்போன்ற செயல்கள் மூலம், ஒரு உண்மையான கோஸக்கின் சக்தி வெளிப்படாவிட்டாலும், எல்லாத்துறைகளிலும் அவர்கள் காட்டிய கெட்டிக்காரத்தனத்தாலும், அவர்களுக்கிருக்கும் அதிர்ஷ்டத்தாலும், அங்கிருப்போர் அனைவராலும் நன்கு மதிக்கப்பட்டனர். அவர்கள் இருவரும் நல்ல தைரியமும், குறி தவறாது சுடும் ஆற்றலும் பெற்றிருந்தனர். டெனிப்பர் நதியில் எதிர் நீச்சுப் போட்டு அக்கரையை அடைந்த வெற்றி ஒன்றிற்காகவே அவர்களை கோஸக்குகள் தங்கள் மத்தியிலே சேர்த்துக்கொண்டனர்.

புல்பா அவர்களுக்கு இதைவிட வீரமிக்க பல துறைகளை மனத்தில் வைத்துக்கொண்டிருந்தான். சோம்பேறித்தனமான இந்த வாழ்க்கை அவன் இயற்கைக்கு முற்றிலும் மாறானது. அவன் உண்மையான தீரச் செயல்களைக் காட்டும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்தான். இந்தச் செட்சி விருப்பவர்களை எப்படி, வீரப் போராட்டத்திற்குத் தூண்ட முடியும் என்று அவன் யோசித்து வந்தான். கடைசியில் ஒருநாள் அந்தத் தலைவனைக் கண்டு நேரடியாகவே,

''கோஷிவோய், நம்மைப்போன்ற சபோரோஷி வாசிகள் போர் முனைக்குப்போக வேண்டியவர்கள் அல்லவா, நாம் வெகு நாட்களாகச் சும்மா இருக்கிறோமே ?'' என்று கேட்டான்.

அந்தக் கோஷிவோய், மிகச் சாதாரணமாகத் தன் சுங்கானை வாயிலிருந்து எடுத்து, எச்சிலைத் துப்பிவிட்டு,

''நாம் போவதற்கு எந்த இடமும் இல்லையே'' என்றான்.

''போவதற்கு இடமில்லையா! நாம் தார்த்தாரியர்களை எதிர்த்துப் போகலாம். இல்லாவிட்டால், துருக்கியர்களை எதிர்த்துப் போகலாமே.''

''நாம் இந்த இருவரையும் எதிர்த்துப் போகமுடியாது'' என்று மிக அமைதியாகப் பதில் கூறிவிட்டுத் தன் சுங்கானை மறுபடியும் தன் உதடுகளில் வைத்துக்கொண்டான்.

''நாம் ஏன் போகமுடியாது?''

''சமாதானமாக இருக்கப்போவதாக நாம் அந்தச் சுல்தானுக்கு வாக்குக் கொடுத்துவிட்டோம்.''

''ஆனால் அவன் ஒரு நாஸ்திகன். நம் கடவுளும், புனித மார்க்க உபதேசங்களும், நாஸ்திகர்களை எதிர்த்துப் போர் புரியும்படி நமக்குக் கட்டளை யிட்டிருக்கின்றனவே.''

''நமக்கு அப்படிப் போக உரிமை இல்லை. நாம் நமது மதத்தின்மீது சத்தியப் பிரமாணம் செய்யாமலிருந்தால்

பரவாயில்லை—ஆனால் இப்போது நமக்கு அந்த உரிமை இல்லை.''

''ஏன் போகமுடியாது, உரிமை இல்லை என்று நீ சொல்வது எனக்குப் புரியவில்லை. நான் என் இரு பிள்ளைகளை இங்கே அழைத்து வந்திருக்கிறேன். அவர்களுக்கு யுத்தத்தைக் காட்ட நான் மிகுந்த ஆவலாய் வந்தால், நீ நமக்கு உரிமை இல்லை என்று சொல்லுகிறாயே? அப்படி என்றால் சபோரோஷிய வாசிகள் சண்டைக்கே போக முடியாதென்றா கூறுகிறாய்?''

''ஆம், அப்படித்தான் நிலைமை இருக்கிறது.''

''அப்படியென்றால் நம் கோஸக்குகள் சக்தி அனைத்தும் வீணாகப் போகவேண்டியதுதானா? ஒவ்வொருவனும், ஒரு வீரச் செயலையும் புரியாமலும் தன் தாய்நாட்டுக்கும், கிருஸ்துவ மதத்திற்கும் தன் சேவையைச் செய்யாமல், ஒரு நாயைப்போலச் சாகவேண்டும் என்கிறாயா? அப்படியென்றால் நாம் எதற்காகத்தான் வாழவேண்டும்; நீ மிகவும் கெட்டிக்காரன் என்பதற்காகத்தான் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறாய். ஆகவே, நீயே சொல்லு. எந்த இழவுக்காக நாம் இனிமேல் வாழ்வது?''

அந்தத் தலைவன் இதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவன் எப்போதுமே சற்றுப் பிடிவாத குணமுள்ளவன். சிறிதுநேரம் மௌனமாக இருந்துவிட்டுக் கடைசியில், ''நீ என்ன சொன்னாலும் யுத்தத்திற்கு நாம் போக முடியாது'' என்று கூறினான்.

''நீ சொல்வதிலிருந்து யுத்தமே ஏற்படாதென்று தெரிகிறது'' என்றான் புல்பா மறுபடியும்.

''ஆமாம்.''

''ஆகவே அதைப்பற்றி யோசித்துப் பார்ப்பதில் ஒன்றும் பயனில்லை.''

''பயனில்லைதான்''

''பிசாசுப்பயலே, கொஞ்சம் பொறுத்திரு'' என்று புல்பா தனக்குள்ளே சொல்லிக்கொண்டு, அந்தத் தலை

வன்மீது தன் ஆத்திரத்தைத் தீர்த்துக்கொள்ள முயற்சித்தான்.

உடனே, மற்ற கோஸக்குகளைக் கூட்டி அவர்களுடன் ஆலோசனை செய்தான். அவர்களுக்குப் போதை ஏற்படும் வரை நன்ருகக் குடிக்கவைத்தான். போதையில் தங்களை மறந்த அந்த கோஸக்குகள் நேரே தங்கள் ஆலோசனைக் குழு கூடும் இடத்திற்குச் சென்றனர். குழுவைக் கூட்ட அவர்கள் ஒரு காலியான பீப்பாயை ஒரு கம்பத்தில் கட்டி அதை அடிப்பார்கள். ஆனால் அந்தத் தம்பட்டத்தை அடிக்கும் ஒருவனிடம் தான் அதன் கம்புகள் இருக்கும். ஆனால் அவனை அங்கே காணமுடியவில்லை. ஆகவே அவர்கள் ஒரு மரக்கிளையை எடுத்துக்கொண்டு அந்தப் பீப்பாயை அடித்தனர். இந்த ஓசையைக் கேட்டதும் முதலில் அங்கு வந்தவன் அந்தத் தப்பட்டைக்காரன்தான். அவன் உயரமாக வளர்ந்தவன். ஒற்றைக்கண்ணனாக இருந்தாலும் பார்ப்பதற்குப் பயங்கரமான தூக்கக்கண்ணனாய் விளங்கினான்.

"யார் அவ்வளவு தைரியமாக அந்தத் தம்பட்டத்தை அடித்தது" என்று கத்தினான்.

"உஷ், உனக்கு நாங்கள் உத்திரவிடும்போது அந்தக் குச்சிகளைக்கொண்டு இந்தத் தப்பட்டையை அடிக்க வேண்டியது உன் கடமை, ஊம் அடி" என்றனர் அந்தக் கூட்டத்தினர்.

மீறினால் அதன் விளைவு என்ன ஆகும் என்பதை நன்குணர்ந்த அவன், தன் பைக்குள்ளிருந்த குச்சிகளை எடுத்து அதை அடிக்க ஆரம்பித்தான். இந்தச் சப்தத்தைக் கேட்ட சபோரோஷ வாசிகள், ஒவ்வொருவராக அங்கே குழுமிவிட்டனர். மூன்று முறை நிறுத்தி நிறுத்தி அடித்ததும் எல்லோரும் அங்கே வந்து ஒரு வட்டமாக அமர்ந்தனர். கோஷிவோய் என்ற அந்தத் தலைவன் தன் அதிகாரச் சின்னமாய் விளங்கும் தன் செங்கோலைக் கையிலெடுத்துக்கொண்டு முன்னே வர, நீதிபதி ஒருவன் ராணுவ முத்திரைகளையும், தஸ்தாவேஜிகள் எழுதுவோன் மைப்புட்டி சகிதமாயும், ஒரு தண்டல்காரன்

தன் கரத்தில் ஒரு தடியுடனும் பின்தொடர அங்கு வந்து சேர்ந்தான். தம் தலைவனைக் கண்டதும், குரன் தலைவர்கள் தங்கள் குல்லாய்களைக் களைந்துவிட்டுத் தம் தலைவனுடன் சேர்ந்து, அங்கு பெருமையோடு தங்கள் சட்டைகளை மடித்து விட்டுக்கொண்டு நிற்கும் கோஸக்குகளுக்குத் தலைவணங்கி மரியாதை செய்தனர்.

"இந்தக் குழு கூடவேண்டிய காரணம் என்ன? நீங்கள் என்ன விரும்புகிறீர்கள் கனவான்களே?" என்று கேட்டான் தலைவன்.

ஒரே கூச்சலும் வசவுகளும் அவன் பேச்சை அடக்கிவிட்டன.

"அந்தச் செங்கோலைக் கீழே வை; உடனே கீழே வை, உன்னைப் போன்றவன் எங்களுக்குத் தலைவனாக இருக்கவேண்டாம்" என்று அந்தக் கூட்டத்திலிருந்து ஒரு பகுதி கோஸக்குகள் கர்ஜித்தனர். ஓரளவுக்குக் குடிக்காமல் இருந்த மற்ற குரனைச் சேர்ந்தவர்கள் இதை ஆட்சேபித்தனர். பிறகு இரண்டு சாராருக்கும் இடையே பிணக்கு ஏற்பட்டு ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டனர். கோஷமும் சப்தமும் இப்போது எங்கும் பரவியது.

அந்தத் தலைவன் பேச முயன்று பார்த்தான். ஆனால் வேண்டுமென்றே மூர்க்கத்தனத்துடன் வம்புக்கு வந்திருக்கும் கூட்டத்தில் தன் அதிகாரம் ஒன்றும் செல்லாதென்பதையும், அப்படி ஏதாவது செய்தால், தன்னை அங்கேயே கொன்றுவிடுவார்களென்பதையும் அறிந்த அந்தத் தலைவன், பேசாமல் அந்தச் செங்கோலை அங்கே வைத்துவிட்டுச் சந்தடி இல்லாமல் அந்தக் கூட்டத்தை விட்டு மறைந்துவிட்டான்.

அதன் பிறகு, அந்த நீதிபதி தஸ்தாவேஜி எழுதுபவன், தண்டல்காரன் மூவரும், கூடி "நாங்கள் கூட எங்கள் சின்னங்களை வைத்துவிட வேண்டுமென்பது தங்கள் கட்டளையா?" என்று கேட்டு மிகவும் தாழ்மையோடு தங்கள் மைப்புட்டி, முத்திரை, தடி இவைகளை அங்கேயே வைத்துவிடத் தயாராய் நின்றனர்.

"வேண்டாம், நீங்கள் தொடர்ந்து இருக்கலாம்" என்றனர் அந்தக் கூட்டத்தார்: "அந்தத் தலைவனைத் தான் செருப்பால் அடிக்கவேண்டும் என்று இருந்தோம். அவன் ஒரு கிழவி, நாங்கள் ஒரு ஆண்மகனைத் தலைவனாகத் தேர்ந்தெடுக்க விரும்புகிறோம்" என்றனர்.

"யாரைத் தலைவனாக ஏற்றுக்கொள்ள விரும்புகிறீர்கள்?"

"குகிபென்கோவைத் தேர்ந்தெடுங்கள்" என்று ஒரு பகுதியினர் கத்தினார்கள்.

"குகிபென்கோ, எங்களுக்கு வேண்டாம், அவன் ஒரு சிறு குழந்தை; அவன் உதடுகளில் இன்னும் கூட அவனுடைய தாய்ப்பாலின் வாடை வீசுகிறது" என்று மற்றொரு பகுதியினர் அவனை எதிர்த்தனர்.

"ஷில்லோ நமது தலைவனாக வரட்டும்; ஷில்லோவைத் தேர்ந்தெடுங்கள்" என்றனர் சிலர்.

"ஷில்லோ ஒரு கோழை; தார்த்தாரியர்களைப் போலவே, அவனும் ஒரு திருடன்; ஆகவே அவன் நம்மைப் போன்ற ஒரு கோஸக் அல்ல; அவனை விரட்டுங்கள்."

"போரோடட்டியைத் தலைவன் ஆக்குங்கள்."

"எங்களுக்கு அவன் வேண்டாம், அந்த அயோக்கியன் நாசமாகப் போகட்டும்."

"கிர்தியாகா வேண்டும் என்று கூவுங்கள்" என்று சிலருக்குச் சொல்லிக் கொடுத்தான் புல்பா.

"கிர்தியாகா! கிர்தியாகா!" என்று குரல் கொடுத்தனர் சிலர்.

"போரோடட்டி! போரோடட்டி!"

"கிர்தியாகா! கிர்தியாகா!"

"ஷில்லோ!"

"ஷில்லோ ஒழிக!"

"கிர்தியாகா!"

தங்கள் பெயர்களைப் பிரேரேபிக்க, தாங்களே ஏதாவது ரகசியமாகத் தந்திரங்கள் செய்திருப்போம் என்று அந்தக் கூட்டம் கருதாமலிருக்க, பெயர்களைக் கேட்டவுடனே, அவர்கள் எழுந்து நின்றனர்.

"கிர்தியாகா! கிர்தியாகா!" இந்தப் பெயர்தான், அதிகமாகக் கேட்டது.

"போரோடடி!"

இந்தப் போட்டியை அவர்கள், தத்தம் முஷ்டியின் பலத்தால் முடிவு கட்ட ஆரம்பித்தனர். கடைசியில் கிர்தியாகா வெற்றி பெற்றுன்.

"போய் கிர்தியாகாவை உடனே அழைத்து வா."

ஒரு டஜன் கோஸக்குகள் அந்தக் கூட்டத்தை விட்டு வெளியே ஓடினர். அவர்களால் சரிவர நடக்கக் கூட முடியவில்லை. அவ்வளவு குடிபோதை! கிர்தியாகாவைக் கண்டு அவனுடைய தேர்தலைப் பற்றிச் சொல்ல விரைந்தனர்.

கிர்தியாகா, நடந்ததெதுவும் தெரியாததுபோலத் தனது குரனில் நீண்ட நேரமாக உட்கார்ந்து கொண்டிருந்தான்.

"உங்களுக்கு என்ன வேண்டும் கனவான்களே," என்று வந்தவர்களைப் பார்த்துக் கேட்டான்.

"உன்னைத் தலைவனுகத் தேர்ந்தெடுத்திருக்கிறேும், கிளம்பு" என்றனர்.

"என்மேல் கருணை காட்டுங்கள் கனவான்களே, இதைப் போன்ற பெருமைக்கு நான் சிறிதும் தகுதியுடையவனல்ல. இதைப் போன்ற பதவிக்குரிய அறிவு எனக்கில்லை. ஆகவே நான் எப்படித் தலைவனுக இருக்க முடியும்? நமது படையில் வேறு எந்தக் கெட்டிக்காரனையும் கண்டுபிடிக்க முடியவில்லையா?" என்றுன் கிர்தியாகா.

"நாங்கள் சொல்லுகிறேும், நீ வா!" என்று அந்த சபோரோஷியர்கள் கத்திஞர்கள்.

வந்திருந்தவர்களில் இருவர் அவனை இரண்டு பக்கமும் பிடித்துக் கொண்டனர். அவன் பின் வாங்குவதற்காக, அவர்கள் பிடித்ததும் கீழே உட்காருவதும் முரண்டு செய்வதுமாக இருக்கவே அவனை அப்படியே பிடித்துத் 'தரதர' வென்று இழுத்துக்கொண்டே, உதையும் குத்தும் முழங்க "பிசாசுப் பயலே, ஏன் இப்படித் தயங்குகிறாய்? உனக்குப் பெருமையைத் தந்தால் அதை ஏற்றுக்கொள், நாயே" என்று வைது கொண்டே வந்தனர்.

ஒருவழியாக கிர்தியாகா அந்தக் கூட்டத்திற்கு இழுத்து வரப்பட்டான்.

அவனை இழுத்துக் கொண்டு வந்தவர்கள், அந்தக் கூட்டத்தைப் பார்த்து: "கனவான்களே, இந்தக் கோஸக்கை உங்கள் தலைவரை ஏற்றுக் கொள்ளச் சம்மதிக்கிறீர்களா?" என்று கேட்டனர்.

"சம்மதம்" என்று அந்தக் கூட்டம் கோஷித்தது. அந்த மைதானமே இந்தக் கோஷத்தால் கிடு கிடுத்து விடும் போலிருந்தது.

அந்தக் கூட்டத்திலிருந்த ஒரு சூரன் தலைவன் 'செங்கோலை' எடுத்துப் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவனிடம் நீட்டினான். சம்பிரதாயப்படி முதல் இரண்டு முறையும் மறுதளித்தான். மூன்றும் முறையாகக் கொடுத்தபோது ஏற்றுக் கொண்டான். உடனே, அந்தக் கூட்டம் தனது ஏகோபித்த சம்மதத்தைத் தெரிவித்தது. அதன் பிறகு அந்தக் கூட்டத்திலிருந்து நான்கு வயோதிகர்கள் அந்தத் தலைவனிடம் வந்தனர். அவர்கள் தலை முடியும், மீசையும் சிறிதே நரைத்திருந்தன. (உண்மையில் இவர்கள் பத்தியிலே மிக வயதானவர்கள் ஒருவரும் இல்லை. இயற்கையாகத்தான் ஒருவருமே சாவதில்லையே!) அவர்கள் நால்வரும் தங்கள் கைகளில் கொஞ்சம் மண்ணை எடுத்து அந்தப் புதுத் தலைவனுடைய தலையில் தூவினர். அவனுடைய முகமும் மீசையும் மண்ணால் மூடப்பட்டது. ஆனால் கிர்தியாகா கொஞ்சம்கூட அசையாமல் நின்றிருந்துவிட்டுப் பிறகு தன்னைத் தேர்ந்தெடுத்ததற்காக அவர்களுக்கு நன்றி தெரிவித்தான்.

ஒருவிதமாக அந்தத்தேர்தல் அமர்க்களத்துடன் முடிந்தது. இந்தத் தேர்தலின் முடிவு புல்பாவை மகிழ்வித்தது போல வேறு எவரையும் மகிழ்வித்திருக்குமா என்பது சந்தேகம். புல்பா தன் எண்ணத்திற்கு ஒத்துவராத அந்தப் பழைய தலைவன்மீது தன் பழியைத் தீர்த்துக் கொண்டான். மேலும், கிர்தியாகா புல்பாவின் பழைய தோழன். பல போராட்டங்களில், கடலிலும் தரையிலும் அவர்கள் இருவரும் ஒன்ருகச் சண்டை செய்தவர்கள். போராட்ட காலத்தின் இன்னல்களையும் தொல்லைகளையும் ஒன்ருகச் சகித்தவர்கள். இந்தத் தேர்தலைக் கொண்டாட அந்தக் கூட்டத்தினர் பல பிரிவாகப் பிரிந்தனர். அதன் பிறகு அங்கு ஏற்பட்ட அமளியை, ஒஸ்டாபும் ஆன்றியும் இதுவரையில் கண்டதே இல்லை. 'ஓட்கா', கடைகளையும், பிற மதுபானங்கள் விற்கும் கடைகளையும் தாக்கி அங்கிருந்த பலவிதமான மதுபானங்களைத் தங்கள் இஷ்டம் போல் இலவசமாக எடுத்துக் கொண்டனர். கடைக்காரர்கள் தங்களை உயிரோடு விட்டார்களே என்று திருப்தி அடைந்தார்கள். கொண்டாட்டம் அன்று இரவு முழுவதும் ஒரு களேபரமாக இருந்தது. பாட்டுக்களும் கோஷங்களும் ஒரே அமளி! அளவுக்கு மிஞ்சிய குடி போதையினுல் எல்லோரும் போர்ப் பாடல்களைப் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டுமிருந்தனர். வானத்தில் உச்சியில் வெண்ணிலா தவழ்ந்து கொண்டிருந்தபோதும் இவர்கள் கும்பல் கும்பலாகக் கூடிக்கொண்டு ஆட்டம் போட்டனர். ஒருவன் போதை மிகுதியினுல் மற்றவனைச் சேர்த்தணைத்துக் கொண்டு, ஆனந்தத்தால் ஆடுவதும், மற்ருெருவன் சபோரோஷியர்களின் பழம் வீரத்தைப் பற்றிய பாடல்களைப் பண்டுரா வயலின் போன்ற இசைக் கருவிகளை மீட்டுக்கொண்டும், ஒருவன் பாட மற்றவர்கள் அவனைச் சுற்றித் தாளம் போட்டுக் கொண்டுமிருந்தனர். நேரம் போகப் போக, இந்தச் சக்தி மிகுந்தவர்களையும் போதை ஆட்டி வைக்க ஆரம்பித்தது. ஒருவன் தள்ளாடித் தள்ளாடி நகர்ந்து கீழே வீழ்வதும் மற்ருெருவன், படுக்கச் சரியான இடமாகத் தேடி அலைவதுமாக இருந்தனர்; கடைசியில், ஒவ்வொருவராகப்

போதையில் தங்களை மறந்து அப்படியே சாய்ந்தனர். அங்கு ஆழ்ந்த அமைதி குடிகொண்டது.

## 4

மறுநாள் புல்பா, புதியதலைவனைச் சந்தித்து எப்படியாவது இந்தச் சபோரோஷியர்களை ஏதாவது ஒரு போராட்டத்தில் ஈடுபடுத்திவிடும் எண்ணத்தால் அவனைத் தூண்டிக்கொண்டிருந்தான். கெட்டிக்காரனும், தந்திரமிக்கவனுமான அந்தவயோதிகத் தலைவன் இந்தசபோரோஷியர்களைப்பற்றி நன்கு அறிந்தவன். ஆகவே மிக ஜாக்கிரதையாகப் பேச ஆரம்பித்தான்: நாம் எந்தக் காரணத்தை முன்னிட்டும், நமது சமாதான உடன்படிக்கையை மீறக்கூடாது என்று கூறிவிட்டு, "ஆனால் ஒரு வழி இருக்கிறது. உடன்படிக்கையை மீறாமலேயே நாம் ஏதாவது செய்ய முடியும் என்று நினைக்கிறேன். ஆகவே நமது மக்களை மைதானத்தில் கூட்டு. ஆனால் என்னுடைய உத்திரவின் பேரில் கூடியதாக இருக்கக்கூடாது. அவர்களாகவே வந்துகூடியதாக இருக்கவேண்டும். இதை எப்படி ஏற்பாடு செய்வதென்று உனக்குத்தான் நன்கு தெரியுமே. அதன் பிறகு நானும் எனது குரன் தலைவர்களும் ஒன்றும் தெரியாததுபோல அங்கு ஓடி வருகிறோம்." என்றான்.

அவ்வளவுதான். இந்த உரையாடல் முடிந்த ஒரு மணிநேரத்திற்கெல்லாம் தப்பட்டையின் முழக்கம் அங்கு கேட்டது. அவர்களுடைய குடிபோதை இன்னும் தீராமலிருந்தும் இந்த ஓசையைக் கேட்டதும் அங்கு கூடினர். பத்து லட்சத்துக்கு மேற்பட்ட குல்லாய்கள் அந்த மைதானமெங்கும் காட்சி அளித்தன. அந்த பிரம்மாண்டமான கூட்டத்தில் பலர் 'குசுகுசு' வென்று பேசிக்கொண்டிருந்தனர், "யார்...எதற்காக...ஏன் இந்தக் குழு" என்று பலவிதமாகக் கேள்விகள் கேட்க ஆரம்பித்தனர். ஆனால் ஒருவரும் இதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. கூட்டத்தின் மற்றொரு மூலையிலிருந்து சலிப்படைந்த குரலில் "யுத்தம் இல்லை—நமது கோஸக் வீரர்களின் சக்தி விரயமாகிக் கொண்டிருக்கிறது—உலகத்தில்

நீதி இல்லை'' ஒரு சாரார் இப்படி முணுமுணுத்தனர். இதையே வேருெரு பகுதியினர் எதிரொலித்தனர். இதைக் கேட்டுக் கொண்டிருந்த மற்ருெரு சாரார் "ஆம் உண்மை! உலகத்தில் நீதிக்கே இடமில்லாமல் தான் போய்விட்டது" என்று குறைபட்டுக் கொண்டனர். குரன்களின் தலைவர்கள் இதைப்பற்றி எல்லாம் தங்களுக்கு ஒன்றும் தெரியாததுபோல் காட்டிக்கொண்டனர். ஒரு வழியாகக் கோஷிவோய் அந்தக் கூட்டத்திலிருந்து எழுந்து நின்று,

''சபோரோஷியக் கனவான்களே, உங்களிடம் சில வார்த்தைகள் சொல்ல அனுமதி வேண்டுகிறேன்.''

''சொல்லித் தொலை'' என்று கத்தியது அந்தக் கூட்டம்.

''கண்யமிக்க கனவான்களே என்னுடைய பேச்சின் சாராம்சம் எல்லாம் இதுதான்.......ஒரு வேளை என்னை விட உங்களுக்கே அதைப்பற்றி நன்ருகத் தெரியும்...... நமது சபோரோஷியர்கள் இங்கே மதுக்கடை வைத்திருக்கும் யூதர்களுக்கும், நமது சொந்த சகோதரர்களுக்கும் மிகவும் கடன்காரர்களாகி விட்டார்கள். இப்போது அவர்களுக்குக் கடன் கேட்டாலும் கொடுப்பவர்கள் இங்கு யாரும் இல்லை. அதுமட்டுமல்லாமல் என்னுடைய பேச்சின் சாராம்சம் என்னவென்ருல் நம்மிடையே பல இளம் வீரர்கள் இருக்கிருர்கள். அவர்களுக்கு யுத்தம் என்ருலே என்னவென்று தெரியாது. மேலும் எந்த யுத்தத்திற்குப் போய் ஒரு நாஸ்திகனையாவது கொல்லாதவன் என்ன சபோரோஷியன்?''

''பரவாயில்லையே, நன்ருகப் பேசுகிருன்'' என்று நினைத்தான் புல்பா.

''ஆனுல், கனவான்களே, நாம் ஏற்கனவே ஒத்துக் கொண்டபடி, சமாதானத்தை உடைக்க வேண்டும் என்ற எண்ணத்தால் இப்படிப் பேசுகிறேன் என்று நீங்கள் நினைக்கக் கூடாது. கடவுள் அப்படி ஒரு நிலை ஏற்படாமல் காப்பாற்றுவராக! நமது உண்மையான நிலைமையைத் தான் உங்களுக்கு எடுத்துக் காட்ட விரும்புகிறேன். நமது

ஆண்டவனுக்கு நாம் அமைத்திருக்கும் கோவிலைப் பாருங்கள். நமக்கெல்லாம் அது ஒரு அவமானம்! அந்தக் கோவிலின் வெளிப்புறம்தான் அப்படி க்ஷீணித்துப் போய் இருக்கிறதென்றால், உள்ளே இருக்கும் ஆண்டவனின் படங்களுக்கு ஒரு வெள்ளி பிரேம் கூட அடித்துப்போட நம்மால் முடியவில்லை! அந்தக் கோவில் ஆண்டவனின் சக்தியால்தான் இத்தனை ஆண்டுகளாகத் தாக்குப் பிடித்துக் கொண்டிருக்கிறது. நம் கோவிலுக்கு இருக்கும் சொத்தெல்லாம், நமது கோஸக்குகள், தங்கள் வாழ்நாட்களில் குடித்ததுபோக, மிஞ்சிய சொத்தை 'வில்லாக' எழுதி வைத்தவைதான். நான் இப்படியெல்லாம் பேசுவதெல்லாம் நாம் நாஸ்திகர்களை எதிர்த்துப் போருக்குப் போகவேண்டும் என்று உங்களைத் தூண்டுவதற்காக அல்ல. சுல்தானுக்கு நாம் சமாதானமாக இருப்போம் என்று வாக்குறுதி செய்து தந்திருக்கிறோம். நாம் அந்த வாக்குறுதியை மீறினால் பெரும் பாவத்திற்காளாவோம். ஏனென்றால் நம் மதத்தின் மீது ஆணையிட்டிருக்கிறோம்.''

''இந்தக் குப்பையையெல்லாம் ஏன் உளறுகிறான், இதன் பொருள் என்ன?'' என்று ஆச்சரியப்பட்டான் புல்பா.

''ஆகவே கனவான்களே, நாம் யுத்தத்தை ஆரம்பிக்க முடியாது. நமது பரம்பரை கௌரவத்தின் பெருமை நம்மை அப்படிச் செய்ய விடாது. ஆனால் என்னுடைய சிறிய மூளையில் ஒரு யோசனை உதித்தது. நாம் நமது இளம் வீரர்களைப் படகுகளில் அனுப்பி அனடோலியா கரையில் கொள்ளையடிக்கும்படி செய்யலாம். இதற்கு என்ன சொல்லுகிறீர்கள் கனவான்களே?''

''எங்களை நடத்திச் செல்லுங்கள், எங்களை நடத்திச் செல்லுங்கள்!'' என்று அந்தக் கூட்டத்தின் பல பகுதிகளிலிருந்து குரல் கேட்டது.

''நம் மதத்திற்காக, எங்கள் உயிர்களைக்கூடத் தத்தம் செய்யத் தயாராய் இருக்கிறோம்'' என்றன அந்தக் குரல்கள்.

கோஷிவோய் இந்தப் பதிலைக் கேட்டுப் பயந்து விட்டான். அவன் சபோரோஷி முழுவதும் ஆயுதபாணி யாகக் கிளம்புவதை எதிர்பார்க்கவில்லை. சுல்தானுக்குக் கொடுத்த வாக்குறுதியை மீற அவன் விரும்பவில்லை.

"தயவு செய்து மறுபடியும் சில வார்த்தைகள் சொல்ல என்னை அனுமதியுங்கள்."

"போதும்! உன்னுடைய முதற் பேச்சின் ருசியைக் குறைத்துவிடாதே."

"நீங்கள் அப்படி விரும்பினால், சரி. உங்கள் முடிவுக்குக் கட்டுப்பட்ட அடிமைதானே நான். மேலும் மக்களின் குரலே ஆண்டவனின் குரல் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். நமது புனிதமான மார்க்க நூலும் அதையேதான் வலியுறுத்துகின்றன. மக்களனைவரும் சேர்ந்து சொல்லுகின்ற ஆலோசனைதான் எல்லாவற்றையும் விட மேலானது. கனவான்களே, நான் நினைத்தது வேறு. நமது இளம் வீரர்களின் இந்த இன்பகரமான பொழுதுபோக்கை சுல்தான் வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கமாட்டான். அவனும் நமக்குச் சரியான தண்டனை கொடுக்கத் தயாராய் இருப்பான். ஆகவே அவனுடைய எதிர்த்தாக்குதலுக்கு நாம் தயாராக இருக்கவேண்டும். அதற்குப் புதியதொரு படையைத் தயார் செய்யவேண்டும். எந்தவிதமான எதிர்த்தாக்குதலையும் சமாளிக்கும் படையாக அது அமையவேண்டும். நமது விடுதிகளை விட்டுவிட்டு அப்படி வெளியே போயிருக்கும் சமயம் பார்த்து இந்தத் தார்த்தாரியர்கள் வந்து நமது விடுதிகளை நாசம் செய்யலாம். இந்தத் துருக்கிய நாய்கள், எஜமான் வீட்டிலிருக்கும்போது வராமல், வெளியே போயிருக்கும் சமயம் பார்த்து நம் பின்னங் கால்களைக் கடிக்கவரும். அதுவும் லேசாகக் கடிக்காமல், வலி தாங்க முடியாமல் நாம் திணறும் வகையில் கடிக்கும். உண்மையைச் சொல்வதென்றால் நம் அனைவருக்கும் வேண்டிய அளவு நம்மிடம் படகுகள் கிடையாது. நம் அனைவருக்கும் தேவையான அளவு துப்பாக்கி வெடிமருந்தும் கைவசமில்லை. என்னைப் பொறுத்தவரையில் போராட்

டத்திற்குத் தயார். உங்கள் முடிவைக் கேட்டு அதன்படி நடக்கின்ற அடிமைதானே நான்.''

அந்தத் தந்திரசாலியான தலைவன் அதன் பிறகு மௌனமானான். அந்தக் கூட்டம் பல பிரிவுகளாகப் பிரிந்து இந்த விஷயத்தைப் பற்றி விவாதித்தது. குரன்களின் தலைவர்கள் ஒருங்கே கூடி இந்த விஷயத்தை ஆலோசித்தனர். நல்லவேளையாக அப்போது பலர் குடி போதையில் இல்லாமல், நேர்மையான யோசனைகளை ஏற்றுக்கொள்ளும் நிலையில் இருந்தனர்.

உடனே ஒரு பிரிவினர் டெனிப்பரின் எதிர்க் கரையில், தண்ணீருக்கடியில், கொடிகளால் மறைக்கப்பட்டுப் பாதுகாப்பிலிருக்கும் சேனையின் பொக்கிஷத்தையும், எதிரிகளிடமிருந்து அபகரித்த ஆயுதங்களையும் கொண்டு வரும்படி பணிக்கப்பட்டனர். சிலர் படகுகளை எடுத்துச் செப்பனிட்டுத் தங்கள் போராட்ட பிரயாணத்திற்காக அதைத் தயார் செய்ய விரைந்தனர். ஒரே கணத்தில் அந்த நதிக்கரை எங்கும் ஜனத்திரள். தச்சர்கள் தங்கள் சுத்தியலோடு அங்கு நிறைந்துவிட்டனர். சூரியனின் வெப்பத்தால் கருகிப்போன முகமும், பரந்த தோளிணைப்புகளும் பலம் பொருந்திய கால்களையுமுடைய வயோதிக சபோரோஷியர்கள் பலர் முழங்கால் தண்ணீரில் நின்று கொண்டு பருத்த பலம் பொருந்திய கயிறுகளால் அந்தப் படகுகளைத் தண்ணீருக்குள் இழுத்துக்கொண்டிருந்தனர். அவர்களில் பலர் நரைத்த மீசையுடனும் கருத்த மீசையுடனும் இருந்தனர். எல்லோரும் தங்கள் கால் சட்டைகளை மடித்து விட்டுக் கொண்டிருந்தனர். இன்னும் சிலர், புதிதாக மரங்களை வெட்டி, அவைகளை இங்கே இழுத்துக்கொண்டு வந்தனர். ஒரு சிலர் படகுகளை வரிசையாக நிறுத்தி வேண்டிய இடத்தில் புதுப் பலகைகளை வைத்து அடித்துக்கொண்டிருந்தனர். சிலர் படகுகளைத் தலைகீழாகக் கவிழ்த்துவிட்டுப் படகுகளின் அடிபாகத்தில் தார் அடித்துக்கொண்டும், தண்ணீரில் நன்கு மிதப்பதற்காகப் பழைய சணலையும், முறுக்கேற்ருத கயிறுகளையும் சேர்த்துப் படகுகளின் ஓரத்தில் பிணைத்துக்கொண்டிருந்தனர். பலவிதமான

கொடிகளால் அந்தப் படகுகளைப் பிணைத்துக் கடல் அலைகளில் அடித்துக்கொண்டு போக விடாமல் செய்துகொண்டிருந்தனர். நதிக்கரை யோரமெல்லாம் நெருப்பு மூட்டி, பெரிய பித்தளைப் பாண்டங்களில் தாரை உருக்கிக்கொண்டிருந்தனர். வயதானவர்களும், அனுபவமிக்கவர்களும் இளைஞர்களுக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தனர். அந்தப் பிரதேசமே உயிர் பெற்றெழுந்தாற்போல ஒரே கோஷமும் சப்தமுமாக விளங்கியது.

இந்தச் சமயத்தில், ஒரு பரிசல் கரையை நோக்கி வந்துகொண்டிருந்தது. அந்தப் பரிசலில் இருந்தவர்கள் தூரத்திலிருக்கும்போதே, தங்கள் கரங்களை ஆட்டிக் கொண்டு வந்தனர். அவர்கள் அனைவரும் கிழிந்த கந்தல்களையும், வெறும்சட்டையையும் அணிந்து, சிறிய சுங்கானை வாயில் வைத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் இருந்த நிலைமையில் ஒன்று அவர்கள் பயங்கரமான விபத்துக்குள்ளாகி எல்லாவற்றையும் இழந்துவிட்டிருக்கவேண்டும். இல்லாவிட்டால், தங்களிடமிருந்த தனைத்தையும் குடித்துக் களியாட்டத்தில் ஒழித்துவிட்டிருக்கவேண்டும். அந்தக் கூட்டத்தினரில் குள்ளமாகப் பரந்த தோள்களை உடைய ஒருவன் முன்னே வந்து மற்ற அனைவரையும்விட அதிகமாகத் தன் கரங்களை ஆட்டிக்கொண்டு ஏதோ உரக்கக் கத்தினன். ஆனல் கரையில் இருந்த ஜனங்கள் செய்த ஆர்ப்பாட்டத்தினல் அவன் என்ன சொல்கிருன் என்றே விளங்கவில்லை,

அந்தப் பரிசல் கரையை நெருங்கியதும் கோஷிவோய், "என்ன விஷயம், ஏன் இப்படி அலங்கோலமான நிலையில் வருகிறீர்கள்?" என்று கேட்டான்.

எல்லா வேலைக்காரர்களும் தங்கள் வேலைகளை நிறுத்தி விட்டுத் தங்கள் சுத்தியல்களைக் கையில் வைத்துக் கொண்டே அங்கே ஓடி வந்தனர்.

அந்தப் பரிசலிலிருந்த அந்தக் குட்டையான கோசக்,

"மிகவும் பயங்கரமான விஷயம்!" என்று கத்தினன்.

"என்ன? என்ன!"

"சபோரோஷியக் கனவான்களே, நான் கொஞ்சம் பேச அனுமதிப்பீர்களா?"

"பேசு! பேசு!"

"இல்லாவிட்டால் நமது பொதுக் குழுவைக் கூட்டலாமா?"

"நாங்கள் அனைவரும் இங்கேதான் இருக்கிறோம், விஷயத்தைச் சொல்லு!" மக்கள் அந்தப் பரிசலைச் சூழ்ந்துகொண்டனர்.

"நமது குடியிருப்புகளில் நடக்கின்ற விஷயங்களைப் பற்றி உங்களுக்கு ஒன்றுமே தெரியாதா?"

"அங்கு என்ன நடக்கிறது?" என்று ஒரு குரனின் தலைவன் கேட்டான்.

"என்ன? என்ன நடக்கிறதென்பதைக்கூடக் கேட்க விடாமல் தார்த்தாரியர்கள் உங்கள் செவிகளைக்கூட நன்கு புடைத்துவிட்டார்களா என்ன?"

"சரி, சரி, அங்கு என்ன நடக்கிறதென்பதைச் சொல்லு?"

"நாம் பிறந்து பெயர் வைக்கப்பட்ட நாட்களாய்க் காணாத விஷயங்கள் அங்கு நடக்கின்றன."

"அங்கு என்ன நடக்கிறதென்று விவரமாகச் சொல்லடா நாய் மகனே?" என்று பொறுமை இழந்து ஆத்திரத்தோடு ஒருவன் கத்தினான்.

"நமது புனிதமான கோவில்கள்கூட நமக்குச் சொந்தமில்லை என்ற நிலைமை வந்துவிட்டது!"

"ஏன் நமக்குச் சொந்தமில்லை?"

"ஏனா? அந்தக் கோவில்களை எல்லாம் யூதர்களுக்கு வாடகைக்கு விட்டுவிட்டார்கள். அவர்களுக்கு முன்பணம் தராவிட்டால், நாம் அங்கு பிரார்த்தனைகூடச் செய்ய முடியாது."

"இவனுக்குப் பயித்தியம்தான் பிடித்துவிட்டது."

"நாசமாய்ப்போன அந்த நாய் மகனுன யூதன் தனது அழுக்குப்படிந்த கரங்களால் தீண்டாமல், நமது ரொட்டிகளை ஆண்டவனுக்குப் படைக்க முடியாது."

"சகோதரர்களே, இவன் பொய் சொல்லுகிருன், அழுக்குப் படிந்த யூதன் தனது அடையாளங்களை நமது ஈஸ்டர் ரொட்டிகளின் மீது போடமுடியாது."

"அதுமட்டுமல்ல, இன்னும் கேளுங்கள். †ரோமன் கத்தோலிக்க பாதிரிகள், வண்டிகளில் அமர்ந்துகொண்டு உக்ரேன் எங்கும் சுற்றி வருகிருர்கள். ஆனுல் நமக்கேற் பட்டுள்ள அவமானம் அந்த வண்டிகளில் இல்லை. அந்த வண்டிகளை ஓட்டக் குதிரைகளைக் கட்டுவதற்குப் பதிலாக இப்போது நமது ‡பழைய கிருஸ்துவர்களை வண்டியில் கட்டி, ஊர்வலம் வருகின்றனர். அதுமட்டுமல்ல. நமது பாதிரிகளின் அங்கிகளை யூதப் பெண்கள் தங்கள் உள் ளங்கிக்காக உபயோகிக்கின்றனர். கனவான்களே, இது தான் இன்று உக்ரேன் எங்கும் நடக்கிறது. நீங்கள் இன்னும் இங்கே இருந்துகொண்டு மதுப் போட்டிகளில் கலந்துகொண்டு ஆனந்தமாக இருக்கிறீர்கள். தார்த்தாரி யர் உங்களுக்குக் கொடுத்த அடியில் உங்கள் கண்களையும் காதுகளையும்—ஏன் எல்லாவற்றையுமே இழந்துவிட்டவர் கள்போ விருக்கிறது. உலகத்தில் என்ன நடக்கிற தென்பதை உங்களுக்குத் தெரியவில்லை."

"நில்! நில்!" என்று இதுவரை தரையையே நோக்கிக் கொண்டிருந்த கோஷிவோய் ஆரம்பித்தான். எல்லா சபோரோஷியர்களுமே தங்கள் வழக்கப்படி, இதைப் போன்ற அபாயகரமான சந்தர்ப்பங்களில் ஆழ்ந்து யோசிப்பதற்காகத் தங்களுடைய தலைகளைக் கவிழ்த்துக்

---

† போலந்து தேசத்தவர் அப்போது கத்தோலிக்கப் பிரிவைச் சேர்ந்திருந்தனர்.

‡ உக்ரேனியர் கிரேக்க பிரிவினைச் சேர்ந்திருந்தனர். அதற்கு ஆங்கிலத்தில் Orthadox Church என்று பெயர்.

கொள்வார்கள். மேலும் இதைப்போன்ற பயங்கரமான சந்தர்ப்பங்களில், தங்கள் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத் திக் கணநேரத்தில் தோன்றுகின்ற ஆத்திரத்திற்குக் கட் டுப்பட்டு விடாமல், குமைந்து குமைந்து தங்கள் ஆத்திரத் தின் உச்சத்தை அடைந்த பிறகுதான் செயலில் இறங்கு வார்கள்.

கோஷிவோய் மறுபடியும் அவனைப் பார்த்து, "கொஞ் சம் பொறு, இவ்வளவு அக்ரமங்கள் நடந்துகொண் டிருந்தபோது நீங்கள் எல்லாம் என்ன செய்துகொண் டிருந்தீர்கள்?—உங்கள் அப்பனைப் பிசாசு கொண்டுபோக!— நீங்கள் எல்லாம் என்னதான் செய்துகொண்டிருந்தீர்கள்? உங்களிடம் ஒரு வாள்கூடவா இல்லாமல் போய்விட்டது, இத்தகைய அநியாயங்களை நீங்கள் எப்படிச் சகித்துக் கொண்டிருந்தீர்கள்?"

"எப்படிச் சகித்துக்கொண்டிருந்தோமா? ஐம்பதா யிரம் போலந்தியர்கள் எதிர்த்து வரும்போது நீங்களாய் இருந்தால்மட்டும் எதிர்த்து என்ன செய்திருக்க முடியும்? மேலும்—எங்களுடைய குறையை மறைப்பதில் பயன் இல்லை—நம்மவர்களில் சில நாய்கள் எதிரிகளின் மதத் தைச் சேர்ந்தபின் நாங்கள்தான் என்ன செய்யமுடியும்?"

"நீங்கள்தான் அப்படியென்றால்—உங்களுடைய தலை வர்களும், கர்னல்களும் எங்கே ஒழிந்தனர்?"

"எங்கள் தலைவர்களுக்கு நேர்ந்த கதியிலிருந்து ஆண் டவன்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்."

"ஏன், என்ன நேர்ந்தது?"

"எங்கள் தலைவர்களைப் பித்தளைத் தட்டுகளில் பொசுக்கி, வார்ஸாவில் வைத்திருக்கிறார்கள். எங்கள் கர்னல்களின் தலைகளையும் கரங்களையும் துண்டித்து ஊர் ஊராக அவைகளைக் கொண்டுபோய் எல்லோருக்கும் காட்டுகிறார்கள். இதுதான் எங்கள் கர்னல்களின் கதி!"

அந்தக் கூட்டமே உயிர் பெற்றெழுந்தது. புயலுக்கு முன் இருக்கும் ஒரு ஆழ்ந்த அமைதி அங்கு கொஞ்சநேரம்

குடி கொண்டிருந்தது. அதன் பிறகு அந்த நதிக் கரையே பேசுவதுபோல் எல்லா மூலைகளிலிருந்தும் பேச்சுக் குரல் கேட்டது.

"யூதர்கள் நம் மாதா கோவில்களை வாடகைக்கு எடுத்துக் கொள்வதா? நமது மதப் பாதிரிகளை, ரோமன் கத்தோலிக்கப் பாதிரிகள் தங்கள் வண்டிகளில் பூட்டி அவமானப் படுத்துவதா? நம் ருஷ்ய மண்ணிலேயே இந்த அக்ரமங்களை அவர்கள் நடத்த அதை நாம் கைகட்டிப் பார்த்துக் கொண்டிருப்பதா? நமது தலைவர்களையும் கர்னல்களையும் இவ்வளவு கீழ்த்தரமாக அவர்கள் நடத்துவதை இன்னுமா நாம் பார்த்துக் கொண்டிருப்பது? இல்லை, இனிமேல் இதைப் போன்ற செயல்கள் நடக்கக்கூடாது, நடக்கவும் விடக் கூடாது!"

அந்தக் கூட்டத்தின் எல்லாப் பக்கங்களி லிருந்தும் இதைப் போன்ற சொற்கள் வெளி வந்தன.

சபோரோஷியர்களின் ஆத்திரத்தில் வெளியானசொற்கள் அவை. ஆனால் அவர்கள் இப்போது தங்களுடைய சக்தியை நன்கு உணர்ந்தவர்கள். கேளிக்கை மிகுந்த பலவீனர்களின் கூக்குரல் அல்ல அது. வெகு சீக்கிரம் ஆத்திரப்பட்டு அதனால் தங்கள் பொறுப்புகளை மறக்கும் கூட்டம் அல்ல அது. நின்று நிதானித்துத் தங்கள் முன்னுள்ள பிரச்னையின் முக்கியத்துவத்தை உணர்ந்த ஒரு சக்திவாய்ந்த பலம் பொருந்திய கூட்டம்.

"எல்லா யூதர்களையும் தூக்கிலிடுங்கள்!" ஆத்திரத்தால் பொறுமிக் கொண்டிருந்த அந்தக் கூட்டத்திலிருந்து ஒரு குரல் ஆக்ரோஷத்துடன் வெளிப்பட்டது.

"நமது பாதிரிகளின் அங்கிகளால், யூதச்சிகளுக்கு ஆடை செய்யும் அவர்களுக்கு ஒரு பாடம் கற்றுக்கொடுங்கள்! நமது புனிதமான ரொட்டிகளின் மேல் தங்கள் அடையாளங்களைப் போடாமலிருக்க அவர்களுக்குப் புத்தி புகட்டுங்கள்! அந்த நாஸ்திகர்களை எல்லாம் இந்தடெனிப்பரில் போட்டு மூழ்கடியுங்கள்!"

கூட்டத்தின் எங்கோ ஒரு மூலையிலிருந்து வெளிவந்த அந்த வாசகம், அந்தக் கூட்டத்திலிருந்த ஒவ்வொருவனுடைய உள்ளத்திலும் மின்னலைப் போல் சென்று தாக்கியது. வெறிகொண்ட ஜனங்கள் யூதர்கள் வசிக்கும் பகுதியைநோக்கி ஓடினர். ஒவ்வொரு யூதனையும் கொன்று குவிக்க எல்லோரும் ஓடினர்.

அந்தப் பரிதாபத்துக்குரிய இஸ்ரேலின் மக்கள் தங்கள் தைரியமனைத்தையும் இழந்து உயிருக்கும் பயந்து, சிலர் காலியான மதுப் பீப்பாய்களுக்குள்ளும் பிற பித்தளைப் பாத்திரங்களுக்குள்ளும் இன்னும் சிலர், தங்கள் மனைவிமார்களின் பாவாடைகளுக்குள்ளும் சென்று ஒளிந்து கொண்டனர். ஆனால் அந்தக் கோஸக்குகள் அவர்களை எங்கிருந்தாலும் தேடிக் கண்டு பிடித்து விட்டனர்.

அச்சத்தால் நடுநடுங்கும் யூதக்கூட்டத்தின் மத்தியிலிருந்த மூங்கிலைப் போல் ஒல்லியான ஒரு யூதன், பயத்தால் நடுநடுங்கும் குரலோடு "பெருமைக் குரிய கனவான்களே" என்று அபயக் குரல் கொடுத்தான்: "பெருமைக்குரிய கனவான்களே, நான் சொல்லுகின்ற ஒரே ஒரு வார்த்தையைக் கேளுங்கள். ஒரே ஒரு வார்த்தை! நீங்கள் இதற்கு முன் என்றுமே கேட்டிராத உண்மை ஒன்றைச் சொல்ல என்னை அனுமதியுங்கள். மிகவும் முக்கியமான விஷயம், அதன் முக்கியத்துவத்தை நான் எந்த விதத்தாலும் விவரிக்க முடியாது" என்று கெஞ்சினான்.

புல்பா என்றுமே, குற்றவாளி தான் சொல்ல வேண்டியதைச் சொல்லும் உரிமையை மறுப்பவன் அல்ல. ஆகவே "அவர்கள் சொல்வதைச் சொல்லட்டும்" என்றான்.

"பெருமைக்குரிய கனவான்களே" என்று மறுபடியும் அந்தக் கிழ யூதன் ஆரம்பித்தான்: "தங்களைப் போன்ற கனவான்களை நாங்கள் எங்குமே பார்த்ததில்லை— கடவுள் சாட்சியாக எங்குமே கண்டதில்லை. இவ்வளவு கருணையுள்ள, வீரம் செறிந்த நல்ல மனிதர்களை இந்த

உலகமே என்றும் கண்டதில்லை.'' அவனுடைய சொற்கள் அச்சத்தால் தயங்கித் தயங்கி வெளிவந்தன : ''தங்களைப் போன்ற சபோரோஷியர்களைப் பற்றி நாங்கள் எப்படிக் கேவலமாக நினைக்க முடியும்? உக்ரேனில் வாடகை வியாபாரம் செய்யும் யூதர்கள் எங்களினத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல; அவர்கள் யூதர்களே அல்ல. அந்தப் பிசாசுக்குத்தான் தெரியும் அவர்கள் யாரென்று? அவர்கள் மிகவும் கேவலமானவர்கள்; காறித் துப்புவதற்குக் கூட லாயக்கற்றவர்கள். இங்கிருப்பவர்கள் எல்லோரும் அப்படித்தான் அவர்களைப்பற்றிக் கூறுவார்கள். அப்படித்தானே ஸ்குலோமா, உண்மைதானே ஸ்குமல்?''

''கடவுள் சாட்சியாக உண்மைதான்!'' என்றனர் அந்த இருவரும். அவர்கள் இருவரும் சாம்பலைப்போன்று வெளுத்துப் போய் பயத்தால் கூட்டத்தின் மத்தியிலே இருந்தனர். அவர்கள் ஆடைகள் அலங்கோலமாக இருந்தன.

''தங்களுடைய எதிரிகளுடன் நாங்கள் இதுவரை எந்தத் தொடர்பும் வைத்துக் கொண்டதில்லை'' என்று மறுபடியும் அந்தக் கிழ யூதன் ஆரம்பித்தான்: ''அந்தக் கத்தோலிக்கர்கள் யார் என்று கூட நாங்கள் இதுவரை கேட்டுக் கொண்டதில்லை — சாத்தான் அவர்களுக்கு உறக்கமில்லாமல் செய்யட்டும் — சபோரோஷியர்களும் நாங்களும் சகோதரர்கள்—''

''என்ன, சபோரோஷியர்களும் நீங்களும் சகோதரர்களா?'' என்று அந்தக் கூட்டத்திலிருந்த ஒருவன் ஆத்திரத்தோடு கத்தினன்: ''அது ஒரு நாளும் ஏற்படாதடா நாசமாய்ப்போன யூதனே. ஏன் நிற்கிறீர்கள் கனவான்களே, டெனிப்பரில் இவர்களைத் தூக்கி எறியுங்கள். அந்த நாஸ்திகர்கள் அனைவரையும் அந்த நதியில் எறிந்து மூழ்கடியுங்கள்'' என்றான்.

இந்த வார்த்தைகள் அவர்களுக்கு ஒரு சமிக்ஞை போலிருந்தது. எல்லோரும் யூதர்களைப் பிடித்து டெனிப்பரின் அலைகளில் தூக்கி எறிந்தனர். அபயக் குரல்கள் அந்த நதிக்கரை எங்கும் ஒலித்தன. ஆனால் துணிந்து

விட்டச போரோஷியர்கள் இந்தப் பரிதாபகரமான ஓலங்களைச் சட்டை செய்யவில்லை. அந்த யூதர்களின் கால் ஜோடுகளும் மேல் ஜோடுகளும் மற்ற ஆடைகளும் ஆகாயத்தில் பறப்பதைக் கண்டு சந்தோஷ ஆரவாரம் செய்தனர். தன் தலையில் தானே மரணத்தைத் தருவித்துக் கொண்ட அந்தத் துயரமிக்க பேச்சாளன் பாவம் தனது கோட்டுகளைப் பிடித்துக் கொண்டிருந்தவர்களிடமிருந்து உருவிக்கொண்டு புல்பாவின் கால்களைப் பிடித்தபடி பரிதாபகரமான அபயக் குரலில், "பெருமைக்குரிய மகாப் பிரபு, உங்கள் சகோதரரை நான் நன்கு அறிவேன்; காலஞ்சென்ற டோர்கோ என்ற அவர் வீரத்திற்கே ஒரு அணிகலன் போன்றவர். அவர் துருக்கியர்களிடம் அடிமைப் பட்டிருந்தபோது நான்தான் எண்ணூறு சிக்குயின்ஸ்* பணயப் பணம் கொடுத்து அவரை விடுவித்தேன்."

"அப்படி என்றால் என் சகோதரனை நீ அறிவாயா?" என்றான் புல்பா.

"கடவுள் சாட்சியாக நான் நன்கு அறிவேன். அவர் மிகவும் கருணையுள்ள கனவான்."

"உன் பெயரென்ன?"

"யான்கெல்"

"சரி," என்றான் புல்பா. சிறிது நேரம் யோசித்துவிட்டுத் தன் கோஸக்குகளை நோக்கி, "இந்த யூதர்களை நாம் தூக்கிலிட, பின்னால் நமக்கு நிறைய நேரமிருக்கும், ஆகவே இவனை நான் அதுவரை வைத்துக்கொள்ளுகிறேன்," என்றான்.

புல்பா அந்த யூதனை, தனது வண்டிகள் இருக்கின்ற இடத்தில் சேர்த்து அங்கிருக்கும் தனது கோஸக்குகளைப் பார்த்து, "இவனை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள். நீயும் இங்கேயே இந்த வண்டிக்குள் படுத்துக்

*அந்தக் காலத்தில் வழக்கிலிருந்த ஒரு நாணயத்தின் பெயர்.

கொள், வெளியே தலை காட்டாதே" என்று உத்திரவிட்டான்.

பிறகு புல்பா, கோஸக்குகள் அனைவரும் கூடி இருக்கும் மைதானத்திற்கு வந்தான். அங்கு எல்லா கோஸக்குகளும் வந்து கூடி இருந்தனர். நதிக்கரையையும், படகுகளையும் விட்டு விட்டுத் தரைப் படைக்கான தளவாடங்களைத் தேட ஆரம்பித்தனர். இப்போது அவர்கள் கடற் படையை உபயோகிக்கப் போவதில்லை என்று தெரிந்த உடன் குதிரைகளைத் தேடிச் சேர்க்க முனைந்தனர். படையைத் தயார் செய்வதிலும் அதற்கான வண்டிகளை ஏற்பாடு செய்வதிலும் ஒவ்வொருவரும் முனைந்துவிட்டனர். வயோதிகன் முதல் இளைஞன்வரை எல்லோருமே இந்தப் போராட்டத்தில் கலந்துகொள்ளத் துடித்தனர். குரன்களின் தலைவர்களும் கோஷிவோயும் தங்கள் ஒப்புதலைத் தந்துவிட்டனர். ஆகவே சபோரோஷியர்கள் அனைவரும் ஏகோபித்த முடிவுடன் தங்கள் படையை நேரே போலந்தின்மேல் நடத்தித் தங்களுக்கு ஏற்பட்ட அவமானத்திற்கும் தங்கள் மதத்திற்கு ஏற்பட்ட களங்கத்திற்கும் பழிக்குப் பழி வாங்கி போலந்தின் ஒவ்வொரு நகரத்தையும் கிராமத்தையும் கொள்ளையடித்துத் தங்கள் வீரப் பரம்பரையின் புகழொளியை உலகமெங்கும் மறுபடியும் பரப்பக் கிடைத்த இந்தச் சந்தர்ப்பத்தை அவர்கள் நழுவவிட விரும்பவில்லை. எல்லோரும் தங்கள் தங்கள் ஆயுதங்களைத் தயார் செய்துகொண்டு புறப்பட ஆயத்தமானார்கள். கோஷிவோய் இப்போது ஓரடி உயரமாக வளர்ந்துவிட்டதுபோலத் தோன்றினன். சட்ட வரம்பிற்குட்படாத போதை வெறியர்களின் உத்திரவுகளுக்குக் கீழ்ப்படியும் ஒரு சாதாரணத் தலைவன் அல்ல அவன். இப்போது அவன் அந்தக் கூட்டத்தின் ஏக போகத் தலைவன். அவன் மூர்க்கத்தனம் மிகுந்தவனாயினும் அவர்களை எப்படி நடத்திச் செல்வது என்பதைத் தெரிந்தவன். தங்கள் மனம்போல, கேளிக்கைகளில் அமிழ்ந்து கிடந்த அந்தக் கூட்டம் இப்போது கட்டுப்பாடு மிகுந்த ஒரு ஒழுங்கான ராணுவ ரீதியில், தங்கள் தலைவன் அணிவகுப்பைப் பார்வையிட்டுத் தன் அதிகாரத் தோரணையில்

உத்திரவு பிறப்பிக்கும்போது மரியாதையுடன் தங்கள் சிரங்களைத் தாழ்த்திக்கொண்டு நிமிர்ந்து பார்க்க முயற்சிக்காமல் அமைதியாக நின்றிருந்தது. அவர்கள் தலைவன் நின்று நிதானமாக ஆர்ப்பாட்டம் செய்யாமல் தன் அமைதியான குரலில் தன் வார்த்தைகளை ஜாக்கிரதையாகத் தேர்ந்தெடுத்து வெற்றிகரமான பல போர்களை நடத்திச்சென்ற பழம்பெரு மூதறிஞனைப்போல பொறுப்புடன் பேசினான்.

"எல்லோரும் ஜாக்கிரதையாக இருங்கள். எல்லாவற்றையும் ஜாக்கிரதையுடன் வைத்துக்கொள்ளுங்கள். உங்கள் ஆயுதங்களைச் சோதனை செய்துகொள்ளுங்கள். உங்கள் வண்டிகளில் தார்ச் சட்டிகளை நிரப்பி வையுங்கள். உங்களுடன் அதிகமான துணிகளை எடுத்துக்கொள்ள வேண்டாம்; ஒரு சட்டை இரண்டு ஜோடி கால் சட்டைகள் ஒரு சட்டி நிறையக்கோதுமை-இவைகள் போதும். எவனும் இதற்குமேல் அதிகமான சுமைகளை எடுத்துக்கொள்ளக் கூடாது.

"வண்டியில் நமக்கு த்தேவையான அனைத்தும் ஏராளமாக இருக்கும். ஒவ்வொரு கோஸக்கும் இரண்டு குதிரைகள் வைத்திருக்கவேண்டும். நமக்கு மொத்தம் இருநூறு ஜோடிக் காளைகளாவது வேண்டும். எல்லாவற்றையும் விட மிகவும் முக்கியமானது ஒழுக்கமும் கட்டுப்பாடும். நம்மவரிடையே சிலர் இருக்கிறார்கள். அவர்கள் கரங்களில் கடவுள் செயலால் செல்வம் கிடைத்துவிட்டால் விலையுயர்ந்த வெல்வெட்டுகளையும் பட்டுத் துணிமணிகளையும் கிழித்துச் சின்னபின்னமாக்கித் தங்கள் கால்களுக்குமேல் ஜோடுகளாக உபயோகிப்பார்கள். அவர்கள் யார் என்று எனக்குத் தெரியும். இந்தப் பைத்தியக்காரப் பழக்கத்தை விட்டுவிடுங்கள். பாவாடைகளை விட்டுவிடுங்கள். நல்ல ஆயுதங்களாகவிருந்தால் எடுத்துக் கொள்ளுங்கள். தங்கமும் வெள்ளியும் கிடைத்தால்—இவைகள் அதிகமாகக் கிடைக்கும் என்பது என் நம்பிக்கை—அவைகளை விட்டு விடாதீர்கள். மற்றொன்று உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். படையெடுத்துப் போகின்ற பாதையில் எவரேனும் குடித்துவிட்டு ஆடினால் அவனுக்கு முடிவு அங்கேயே நேர்ந்துவிடும். நமது சேனையின் பெருமைக்

குரிய வீரனுயிருப்பினும், அவன் யார், எவனென்று பாராமல் ஒரு நாயைப்போல அவன் கழுத்தை வண்டியோடு சேர்த்துக் கட்டி அங்கேயே சுட்டுக்கொன்று விடுவேன். வல்லூறுகள் அவன் பிரேதத்தைப் பிய்த்துப் பிடுங்குமாறு அப்படியே விட்டுவிடுவேன். போருக்குச் செல்கின்றபோது குடித்துவிட்டு ஆடுகின்றவன கிருஸ்தவ முறைப்படி சவ அடக்கம் கூடக் கிடைக்கப் பெருதவனுகி விடுவான். இளைஞர்களே நீங்கள் எல்லாவிதத்திலும் உங்கள் பெரியவர்களைப் பின்பற்றி நடக்கவேண்டும். உங்களை ஒரு குண்டு தாக்கினுலோ அல்லது ஒரு வாளின் முனையினுல் தலையிலோ, வேறெங்கோ காயம் ஏற்பட்டால் அதைப்பற்றிக்கொஞ்சங்கூடக்கவலைப்படக்கூடாது. ஒரு கோப்பை ஓட்காவில் சிறிது துப்பாக்கி மருந்தைக் கலந்து குடித்துவிடுங்கள்.

"உங்களுக்குக் காய்ச்சல் ஏற்படாது. காயம் அதிகமாக இல்லாவிட்டால் சிறிது மண்ணைக் கையில் எடுத்துக் கொண்டு அதில் எச்சிலைத் துப்பிக்கலந்து அந்தக் காயத்தின் மேல் தேய்த்துவிடுங்கள். அந்தக் காயம் மறைந்துவிடும். சரி, இப்போது நம் காரியத்தைக் கவனியுங்கள். அவசர அவசரமாக எதையும் செய்ய வேண்டாம். எல்லாவற்றையும் ஒழுங்காகச் செய்யுங்கள்."

அவர்கள் தலைவனுடைய உத்திரவு இது. அவன் தன் பேச்சை முடித்தவுடன் எல்லா கோஸக்குகளும் தங்கள் காரியங்களைச் செய்ய விரைந்தனர். அந்தக் குடியிருப்பு முழுவதுமே உயிர் பெற்றெழுந்ததுபோலச் சுறுசுறுப்பாக விளங்கியது. ஒரு கோஸக்குகூடக் குடித்தவனைப்போல நடந்துகொள்ளவில்லை. இதுவரை குடி என்பதையே இன்னதென்று தெரியாதவர்களைப் போல இருந்தார்கள்.

சிலர், வண்டிகளின் சக்கரங்களைப் புதுப்பிப்பதும் அவைகளின் அச்சுக்களைப் பழுதுபார்ப்பதும் வண்டிகளில் ஆயுதங்களையும், உணவுவகைகளைக் கொண்ட கோணி மூட்டைகளை ஏற்றிக் கொண்டுமிருந்தார்கள்; இன்னும் சிலர் குதிரைகளையும், காளைகளையும் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தனர். குதிரைகளின் குளம்படி

ஓசையும் துப்பாக்கிகளைச் சுட்டுப் பழகிக்கொண் டிருந்த ஓசையும் எல்லா பாகங்களிலிருந்தும் கேட்டன. வாட்கள் ஒன்றோடொன்று உரசும் சப்தமும், காளைகளின் ஓலமும் வீதிகளில் ஓட்டப்படும் வண்டிகளின் ஓசையும் வண்டியோட்டிகளின் அதட்டலும், கோஸக்குகளின் கோஷமும் எல்லாம் சேர்ந்து ஒரே அமர்க்களமா யிருந்தது.

வீரர்களின் அணிவகுப்பு அந்தத் திறந்த வெளி யெங்கும் நீண்டு வளைந்து நின்றது. அந்தப் படையின் ஆரம்பத்திலிருந்து முடிவு வரை ஒருவன் பார்க்க வேண்டுமென்றால் நீண்ட நேரம் ஓடினால்கூடக் காண முடியாத அவ்வளவு நீளம் வளர்ந்திருந்தது. அந்தப் பிரதேசத்திலிருந்த ஒரு சிறிய மாதா கோவிலில் பாதிரி வழியனுப்புப் பிரார்த்தனை செய்து ஒவ்வொருவர் மீதும் புனித நீரைத் தெளித்தார். எல்லோரும் சிலுவையை முத்தமிட்டனர். அணிவகுப்புப் புறப்பட்டது. "போய் வருகிறோம் தாயே, ஆண்டவன் உன்னை எல்லாத் தொல்லைகளிலிருந்தும் காப்பாற்றுவானாக!" என்று அந்தக் கூட்டமே ஒரே குரலில் விடைபெற்றுக் கொண்டது.

கிராமத்தைக் கடந்து வரும்போது, புல்பா யான்கல் என்ற அந்த யூதனைப் பார்த்தான். அவன் ஒரு சிப்பாயிக்குத் தேவையான வெடி மருந்து பித்தளைத் தகடுகள் பிறவற்றை வைத்துக்கொண்டு வியாபாரம் செய்துகொண்டிருந்தான். "இந்த யூதன் ஒரு சைத்தானாகத்தா னிருக்க வேண்டும்" என நினைத்துக்கொண்டே அவன் அருகே சென்று "முட்டாளே ஏன் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறாய், யாராவது உன்னைச் சுட்டுக் கொல்ல வேண்டுமா?" என்று கேட்டான்.

இதைக் கேட்ட யான்கல் ஏதோ ரகசியம் சொல்வது போல புல்பாவின் அருகிலே வந்து:

"பிரபு அவர்களுக்கு நான் ஒரு ரகசியம் சொல்கிறேன் அதை யாரிடமும் தயவு செய்து சொல்ல வேண்டாம். என்னுடைய சொந்த வண்டி உங்கள் வண்டிகளோடு சேர்ந்து வருகிறது. அதில் கோஸக்குகளுக்கு வேண்டிய எல்லா விதமான சரக்குகளும் வைத்திருக்கிறேன். வழியில்

உங்களுக்குத் தேவையான எல்லாச் சரக்குகளையும் மிகவும் குறைந்த விலையில் கொடுத்து உதவுவேன். வேறெந்த யூதனும் இதுவரை விற்காத முறையில் மிகவும் குறைந்த விலையில் விற்பேன்!''

புல்பா, அந்த யூதனின் வியாபார தந்திரத்தை வியந்தபடியே, அவனை விட்டு அந்த அணிவகுப்போடு சேர்ந்துவிட்டான்.

## 5

தென்மேற்குப் போலந்து முழுதும் அச்சத்திற்கிரையாகி அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்தது. ''சபோரோஷியர்கள்; சபோரோஷியர்கள் வருகிறார்களாம்'' என்ற வதந்தி அந்தப் பிரதேசம் எங்கும் காட்டுத் தீ போலப் பரவியது. தப்பி ஓடிப்பிழைக்க வசதியுள்ளவர்கள், ஓடத் தலைப்பட்டனர். ஸ்திரமான, வாசஸ்தலமோ நிலையான வீடு வாசல்களோ இல்லாமல் எந்த நேரமும் உயிருக்குத் தப்பி ஓடிப் பிழைக்கவேண்டிய நிர்ப்பந்தமான ஒழுங்கற்ற அந்த நாட்களில், மக்கள் தங்களுக்கென்று நிலையான வீடு வாசல்களோ, கோட்டை கொத்தளங்களோ அமைத்துக்கொண்டு வாழ்ந்ததில்லை. நல்ல வீடுகளைக் கட்டுவதற்கான பணத்தையும் நேரத்தையும் ஏன் வீணுகச் செலவு செய்வது? தார்த்தாரியர்கள் படையெடுத்து வந்தால், அவைகளை அழித்துவிடத்தானே போகிறார்கள் என்ற நம்பிக்கையற்ற சூழ்நிலையில் வாழ்ந்த அந்த மக்கள் இந்தச் சேதியைக் கேட்டதும் உயிருக்குத் தப்பி ஓட ஆரம்பித்தனர். ஏரையும் மாடுகளையும் விற்றுவிட்டு அதற்குப் பதிலாகக் குதிரையையும் துப்பாக்கியையும் வாங்கிக்கொண்டு சேனையில் சேர்ந்தனர். சிலர் தங்கள் கால் நடைகளையும் எவ்வளவு தூக்கிச் செல்ல முடியுமோ அவ்வளவு சாமான்களையும் தூக்கிக்கொண்டு பாதுகாப்பான இடங்களைத் தேடிச் சென்று மறைந்துகொள்ள ஆரம்பித்தனர். ஒரு சிலர் எதிரிகளை எதிர்த்துப் போரிட ஆயுதங்களைச் சேகரித்தனர். மேலெழுந்த வாரியாகப் பார்ப்பவர்களுக்குத் தலைக்கனம் மிகுந்த ஒழுங்கற்ற கூட்டம் போலத் தோன்றினாலும் உள்ளே போராட்டத்திற்குரிய மனப்போக்கும் கட்டுப்

பாடும் மிகுந்த ஒரு பயங்கர்மான போர் வெறிகொண்ட இந்தச் சபோரோஷியர்களைப் பற்றி அவர்கள் நன்கு அறிந்தவர்கள். ஆகவே இந்தச் சக்தி வாய்ந்த வெறியர் களை எதிர்த்துப் போரிட முடியாது என்று பயந்து ஓடிய வர்கள் தான் அதிகம்.

குதிரைகள் மேல் அதிகமான சுமையை ஏற்றி அவை களுக்குத் தொல்லை கொடுக்காமல், அந்தக் கோஸக் வீரர்கள் நடந்தே வந்தனர். ஒருவர் கூடக் குடிப்பதே இல்லை. அந்தப் பக்கங்களில் மனித சஞ்சாரமற்ற காடு கள் மிகவும் அதிகம். இந்த வீரர்களின் அணிவகுப்பு, பகற் பொழுதை அதைப் போன்ற காடுகளில் கழித்து விட்டு, இரவில் மட்டும் நடந்து முன்னேறியது. எதிரி களின் படை பலம் பற்றிய விவரம் அறிந்து வர, தங்களுக்கு முன்னே உளவாளிகளையும் ஒற்றர்களையும் அனுப்பி வைத்தார்கள். இந்தச் சபோரோஷிய சேனை, எதிரிகள் கொஞ்சம்கூட எதிர்பாராத பிரதேசங்களில் படையெடுத்து அங்கே பெரும் மரண தாண்டவத்தை நடத்திவிடும். கிராமங்களுக்குத் தீவைத்து, அங்கிருக்கும் குதிரைகளையும் ஆடு மாடுகளையும் விரட்டிவிடுவார்கள். இல்லாவிட்டால் அந்த இடத்திலேயே வெட்டி வீழ்த்தி விடுவார்கள். அதைப் போராட்டம் என்று சொல்வதை விட பயங்கரமான இரத்த வெறியர்களின் விருந்தென்றே சொல்லவேண்டும். பாதி மிருகப் பிராயமுள்ள அந்தப் பயங்கர நாட்களில், இந்தச் சபோரோஷியர்கள் காலடி வைத்துத் திரும்பிய இடங்களைப் பார்த்தால்—பயங்கர மான அக்ரமங்களைப் பார்த்தால்— மயிர்க்கூச்செறியும். இதைப் போன்ற சம்பவங்கள் அந்தக்காலத்தில் சர்வ சாதாரணம்! குழந்தைகளைக் கொன்று குவிப்பார்கள். பெண்களின் மார்பகங்களை அறுத்தெறிவார்கள். சிலரைக் கால்களிலிருந்து தலைவரை தோலை உரித்துவிட்டு, அதன் பிறகு விடுதலை செய்வார்கள். இதைப் போன்ற மிருகத் தனமான முறையில்தான் அந்தக் கோஸக்குகள் தங்கள் ஆத்திரத்தையும் பழியையும் முழுக்க முழுக்கத் தீர்த்துக் கொள்வார்கள்.

இவர்கள் வருவதை அறிந்த ஒரு மத ஸ்தாபனத்தின் தலைமை பிஷப், இரண்டு பாதிரிகளை அனுப்பி, அந்தக் கோஸக்குகள் மிகவும் ஒழுங்கீனமாக நடந்துகொள்வதாகவும் அரசருடன் நேசப்பான்மையுடன் மற்ற கோஸக்குகள் இருக்கும்போது, அந்த அரசனுக்கு விரோதமாக இந்த அக்ரமங்களைச் செய்வது சரியில்லை என்றும், சாதாரண ஒழுங்குக்கும் புறம்பான செய்கை என்றும் சொல்லும்படி அனுப்பினர்.

அந்தப் பாதிரிகள் சொல்வதைக் கேட்ட அந்தக் கோஷிவோய் "நீங்கள் அந்தப் பிஷப்பிடம் சென்று, என் சார்பாகவும், இந்தச் சபோரோஷியர்கள் சார்பாகவும், அவர்கள் எங்களைக் கண்டு பயப்படத் தேவையில்லை என்றும் நாங்கள் எங்களுடைய சுங்கானுக்கு நெருப்பு அவசியமானதால் தீவைக்கிறோம் என்றும் சொல்லுங்கள்" என்று சொல்லி அனுப்பினன்.

அதன் பிறகு சிறிது நேரத்திற் கெல்லாம் அந்த மகோன்னதமான மதஸ்தாபனத்தின் கட்டிடம் நெருப்புக் கிரையாகி அதன் ஜன்னல்கள், சுற்றிப் படரும் செந்தீ நாக்குகளின் அனற் பிழம்பில் பொசுங்கிச் சின்னபின்னமாகியது.

ஓரளவுக்குப் பாதுகாப்பளிக்கக் கூடிய ராணுவம் இருக்கும் நகரங்களைத்தேடிப் பாதிரிகளும், பெண்களும், யூதர்களும் அகதிகளாய்ச் சென்று அங்கு தஞ்சம் புகுந்தனர். சில சமயங்களில், சர்க்கார் நீண்ட நாட்களுக்குப் பிறகு சிலதுருப்புகளை அனுப்பும். ஆனல் இந்தத் துருப்புகளின் வீரர்கள் இந்தச் சபோரோஷியர்களைக் கண்டவுடன் அலறிப் புடைத்துக் கொண்டு, பயத்துடன் அவர்களைக் கண்டு போரிட்ட முதற்களத்திலேயே தலைகால் தெரியாமல் ஓடிவிடுவார்கள். ஆனல் இந்தச் சமயத்தில் வேறு பல போர்களில் தங்கள் வீரத்தைக்காட்டி விருதுகள் பெற்ற அரசனின் காப்டன்கள் பலர் கூடி இந்தச் சபோரோஷியர்களை எதிர்க்கத் திட்டமிட்டனர்.

திருடுதல், கொள்ளையடித்தல், பலமற்ற எதிரிகளுடன் போராடுதல் போன்ற செயல்களை விரும்பாத

இளம் கோஸக்குகள் தங்களுடைய வீர தீரங்களைத் தங்கள் பெரியோர்களுக்குக் காட்ட இந்தச் சந்தர்ப்பத்தை மிகவும் விரும்பி வரவேற்றனர். இவர்கள் தனிப்பட்ட முறையில் பெருமையோடு அட்டகாசமான ஆடையணிகளுடன், வேகமாகப் பாய்ந்தோடும் தங்கள் குதிரைகளில், தங்கள் தொப்பிகளின் ஜாலராக்கள் காற்றில் பறக்க ஓடிவரும் போலந்து வீரர்களை மடக்கிப் போராட ஆரம்பித்தனர். அந்த வாலிப கோஸக்குகளுக்கு யுத்தக் கலையைக் கற்பது ஏதோ விளையாட்டுப் போலத் தோன்றியது. அவர்கள் ஏற்கனவே, பல குதிரைகளை அலங்கரிக்கும் அணிகளையும் பலவிதமான வேலைப்பாடுகள் மிகுந்த வாட்களையும் கைப்பற்றி இருந்தனர். ஒரே மாதத்திற்குள் இந்தச் சின்னஞ் சிறு வீரர்கள் ஆண்மையின் எல்லையைத் தாண்டி முழு மனிதர்களாகி விட்டனர். வாலிபத்தின் மென்மை படர்ந்திருந்த அவர்கள் முகங்களில் இப்போது முழுபலத்தின் சக்தியும் தேஜசும் தேங்கி இருந்தது. போரின் முன்னணியிலேயே தன் இரு பிள்ளைகளும் முன் சென்று சாதிக்கும் தீரச் செயல்களைக் கண்டு புல்பா மிகவும் சந்தோஷப்பட்டான். போரின் பயங்கரப் பாதையிலே முன்னேறி, அதன் கரடு முரடான உச்சியை எட்டிப் பிடித்து விடுவதற்கே பிறந்தவன் போலத் தோன்றினன் ஒஸ்டாப். இருபது இருபத்திரெண்டே வயதுள்ள அவனுடைய சக்திக்கு அப்பாற்பட்ட திறமையுடனும், மிகவும் அமைதியுடனும் தன் முன்னுள்ள பயங்கரத்தை நிறுத்து நிறை பார்த்து அதற்குத் தகுந்த முறையில் தன்னுடைய தந்திரங்களைப் பிரயோகிப்பான். அப்படிச் செய்யும்போது, அவன் சிறிதுகூடத் தயக்கமோ, அச்சமோ காட்டுவதில்லை. எல்லா முயற்சிகளிலும் அவன் தனக்குப் பெருமையையே தேடிக் கொண்டான். அவனுடைய ஒவ்வொரு செயலிலும், இப்போது, பழக்க மிகுந்த ஒரு வீரனின் சாயலையும், வருங்காலத்தில் தலைமை வகிக்கத்தகுந்த திறமையையும் இப்போதே வெளிப்படுத்தினன். அவன் உடலெங்கும் வீரத்தின் மூச்சு அனலாகக் காய்ந்தது. அவனுடைய வீரச் செயல்களால் அவனுடைய பண்பு முதிர்ந்து பெரு வீரனுகக் காட்சி அளித்தான்.

புல்பா இவனது செயல்களைக் கண்டு புளகாங்கிதத்தோடு "இவன் ஒரு நல்ல கர்னலாக மிளிறுவான், ஏன், இவனுடைய தலைவனையே இவன் வென்று விடுவான்" என்று சொல்லிக் கொண்டான்.

குண்டுகளின் ரீங்காரமும் வாட்களின் இசையும் ஆன்றியை அப்படியே மயக்கிவிட்டன. தன்னுடைய சக்தியையும், எதிரியின் சக்தியையும், அளவெடுத்துக் கணக்கிட்டு எடை போட்டுச் சிந்திப்பதென்பதைப் பற்றியே அறியாதவன். அவன் தன்னுடைய உள்ளத்தில் தோன்றி இருக்கின்ற போர் வெறியின் சுழற்சியில் சிக்கி இருந்தான். ஒருவனுடைய சிந்தனை அனலாகி, அவன் கண் முன்னே, எல்லாமே சுழலும்போது—தலைகள் பறக்கும்போது—குதிரைகள் வெட்டுண்டு சரிந்து விழ, அவன தலைபோகும் வேகத்தில், படைக்குள்ளே புகுந்து தன்மேல் விழும் வெட்டுக் காயங்களைப் பொருட்படுத்தாமல், இடது புறமும் வலது புறமும் வெட்டிச் சாய்த்துக் கொண்டே முன்னேறுகின்றபோது ஏற்படும் ஒருவித வெறியில் தன்னை மறந்து போரிட ஆரம்பித்தான். முன் யோசனையுள்ள பழைய வீரர்கள் எவரும் முன்னேற அஞ்சும் சந்தர்ப்பங்களில் கூட ஆன்றி சிறிதும் யோசிக்காமல் மூர்த்தண்யமாக எதிர்த்துப் போரிடுவான். இப்படி இவன் போரிடுவதைக் கண்டவர் எல்லோரும் மெச்சினார்கள். போர்க்களங்களிலேயே தங்கள் வாழ்வை யெல்லாம் செலவழித்த பல பழம் பெரும் வீரர்கள் கூட இவனுடைய மூர்க்கத்தனமான போராட்ட வெறியைக் கண்டு வியந்தனர். புல்பா கூடத் தன் மகனின் தீரச் செயலைக் கண்டு பாராட்டினான். "ஆண்டவன் அவனைக் காப்பாற்ற வேண்டும். ஓஸ்டாப்பைப்போல இவன் போராடாவிட்டாலும் இவனும் ஒரு நல்ல வீரன்தான்" என்று தனக்குத் தானே வியந்து பாராட்டினான்.

இவர்களுடைய பட்டாளம், டேரே டுப்னோ என்ற நகரின் மேல் படையெடுக்க முடிவு செய்தது. அந்த நகரத்தில் பொக்கிஷங்கள் நிறைய இருப்பதாகவும் அந்த நகரவாசிகளில் பலர் மிகுந்த செல்வந்தர்களென்றும் இவர்களுக்கு வதந்தி மூலம் தெரிய வந்தது. ஆகவே

இந்தச் சபோரோஷியப் படை நேரே அந்நகரை நோக்கி முன்னேறிற்று. ஒன்றரை நாளில் அவர்கள் அந்த நகரை அடைந்தனர். ஆனால் அந்த நகர வாசிகள், இவர்களை எதிர்த்துப் போராடிக் கடைசிவரை அவர்களுக்குப் பணிவதில்லை என்ற தீவிரமான முடிவுக்கு வந்திருந்தனர். போராடியே வீதிகளிலும் திறந்த வெளிகளிலும் வீட்டு வாசல்களிலும் செத்தாலும் சாகலாமே தவிர, எதிரிகளை வீட்டுக்குள்ளே எந்தக் காரணம் பற்றியும், நுழையவிடக் கூடாது என்று திடமாக இருந்தனர். நகரைச் சுற்றி வெறும் மண்ணாலான ஒரு கொத்தளம் இருந்தது. இந்தக் கொத்தளம் தாழ்ந்திருக்கும் இடங்களில் ஒரு கற் சுவரோ அல்லது ஒரு வீடோ அதற்குப் பதிலாகக் கட்டப்பட்டிருந்தன. நகரத்தைக் காப்பாற்றும் பொறுப்பை நன்குணர்ந் திருந்தார்கள். அந்தக் கொத்தளத்தை எதிர்த்துப் போராட ஆரம்பித்தனர். ஆனால் கொத்தளத்தின் மேலிருந்து குண்டு மாரி பொழிந்தது. நகர வாசிகள் இந்த முறை ஒரு தீர்மானத்திற்கு வந்து விட்டவர்கள் போலத் துணிச்சலுடன் காரியத்திலிறங்கி விட்டனர். கொத்தளத்தின் மேலிருந்து கொண்டு அவர்கள் தங்கள் நகரைக் காப்பாற்ற அவர்களாலான உதவியைச் செய்தனர். அவர்கள் முகங்களிலே தெரிந்த ஆத்திரம் அவர்கள் எப்படியும் இந்தப் படையெடுப்பை முறியடிக்க வேண்டும் என்ற ஆர்வத்தைக் காட்டியது. அந்த நகரத்துப் பெண்களும் சும்மா இருக்க விரும்பவில்லை. அவர்களும் கொத்தளத்தின் மீதிருந்து கொண்டு கைகளுக்குக் கிடைக்கும் எல்லாவற்றையும் அந்தச் சபோரோஷியர்கள் மீது வீசி எறிந்தனர். காலிப் பீப்பாய்கள், கற்கள், கொதிக்கும் தண்ணீர், மூட்டை மூட்டையாய் மணல் இவைகளை வீசினர். சபோரோஷியர்கள் இதனால் மேலும் முன்னேற முடியாமல் தவித்தனர். கொத்தளங்களை முற்றுகையிட்டுப் படையெடுப்பதென்பது அவர்களுக்குப் பிடிக்காத யுத்த தந்திரம். அவர்களுக்கு அதில் போதிய பயிற்சியும் இல்லை.

ஆகவே அவர்களுடைய தலைவன் படையை வாபஸ் வாங்கும்படி உத்திரவிட்டான். "பரவாயில்லை சகோதர

கனவான்களே, நாம் இப்போது பின் வாங்குவோம். ஆனல் அந்த நகரத்திலிருக்கும் எவனையாவது நான் வெளியே விட்டால், நான் ஒரு கிருஸ்தவனில்லை. நான் ஒரு நாஸ்திக தார்த்தாரியன் ஆவேன்! அந்த நாய்கள் உள்ளேயே பசியால் வாடிச் சாகட்டும்'' என்றுன்.

அந்தப் படை பின்வாங்கி அந்த நகரைச் சுற்றி வளைத்துக் கொண்டது. வேறு ஒன்றும் செய்ய இயலாமல் போகவே அக்கம் பக்கங்களிலுள்ள பிரதேசங்களைக் கொள்ளையடித்துச் சூறையாடியது. கிராமங்களைக் கொள்ளையடித்துத் தீ வைத்தது. வயல்களில் பூத்துக் குலுங்கும் கதிர்களை அழித்தது. மேலும் அந்த வருஷம் பிற வருஷங்களைவிட அமோகமாகச் செழித்து வளர்ந்திருந்தது. கோதுமைப் பயிரின் கதிர்கள், முற்றித் தலை சாய்ந்து விவசாயிகளின் உழைப்பிற்குப் பரிசேபோலக் காற்றில் ஆடிக்கொண் டிருந்தன. அவற்றைக்கூட இந்தப் படையினர், தங்கள் குதிரைகளை விட்டு மேய வைத்தனர்; அந்த நகரவாசிகள் தங்களின் உணவுக்கு மூலாதாரமான பயிர்கள் அழிக்கப்படுவதை அச்சத்தோடு பார்த்துக் கொண்டிருந்தனர். பிறகு தங்கள் வண்டிகளை இரண்டு வளையங்களாகப் பிரித்து அந்த நகரைச் சுற்றி நிறுத்தி விட்டு, தங்கள் குரன்களைப்போல அமைத்து, அமைதியாகத் தங்கள் சுங்கான்களை வாயில் வைத்துக் கொண்டு அந்தக் கொத்தளத்தைக் கவனித்தபடியே இருந்தனர். நேரத்தைக் கழிக்க, தங்களுக்குள், ஆயுதங்களைப் பிற பொருள்களுக்குப் பரிவர்த்தனை செய்வதும், தத்தி விளையாடிப் பொழுதைப் போக்குவதும், ஆத்திரத்தோடு அந்த நகரத்தையே கவனித்துக் கொண்டிருப்பதுமாக இருந்தனர். இரவு வேளைகளில் காவற் படையினருக்கு உதவியாகப் பெரிய தீப் பந்தங்களை ஏற்றி வைத்தனர். ஒவ்வொரு குரனிலும் பெரிய பெரிய பித்தளைப் பாத்திரங்களில், சமையற்காரர்கள் கஞ்சி காய்ச்சிக் கொண்டிருந்தனர். படைக் காவற்காரர்கள் இரவு முழுவதும் எரியும் தீக் குண்டங்கள் அருகே விழிப்போடு நின்றிருந்தனர்.

ஆனல் இந்தச் சபோரோஷியர்களுக்குப் பல நாட்களாக வேலை எதுவுமில்லாமல், சோம்பித் திரிந்ததாலும்,

யுத்தம் இல்லாததாலும், அதே சமயம் குடிப்பதும் இல்லாமல்போகவே எரிச்சலாக இருந்தது. அவர்களுடைய தலைவன் மது ரேஷனை இரட்டிப்பாக்கினன். யுத்தம் இல்லாமல் இருக்கும்போது இதைப்போல மதுவைச் சற்று அதிகமாகக் கொடுப்பது வழக்கம். ஆனல் இதைப்போன்ற சோம்பலான வாழ்வு இளம் வீரர்களுக்கு ஒத்துப்போகவில்லை. குறிப்பாகப் புல்பாவின் பிள்ளைகளுக்குப் பிடிக்கவே இல்லை. ஆன்றிக்கு இந்த வாழ்க்கை கட்டோடு பிடிக்கவில்லை.

புல்பா இதைக் கண்டு, "நம்மைப்போன்ற கோஸக்குகள் எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ள வேண்டும். இன்னும் நீ படைத்தலைவன் கூட ஆகவில்லையே, இதற்குள் இப்படி அவசரப்பட்டால்? மேலும், பயங்கரமான யுத்தகளத்திலே, உள்ளம் தளராமல் போரிடுபவன் தான் வீரன் என்று நினைக்காதே. சும்மா இருக்கும் போதும் எந்தவிதமான கஷ்டங்கள் ஏற்பட்டாலும் பொறுமையோடு சகித்துக்கொள்பவன்தான் அதைவிடப் பெரிய வீரன்" என்று கூறினன்.

ஆனல் கொந்தளிக்கும் இளமையும் வயோதிகமும் எப்போதும் ஒத்துப்போகாதல்லவா? அவர்கள் இருவருமே இரண்டு விதப் போக்குடையவர்கள். ஒரே விஷயத்தை அவர்கள் இருவரும் மாறுபட்ட கண்ணேட்டத்தோடு பார்த்தனர்.

இதன் நடுவே, புல்பாவின் பட்டாளம் டோங்காக் தலைமையில் வந்து இந்தச் சேனையோடு சேர்ந்துகொண்டது. அந்தப் பட்டாளத்தோடு, இன்னும் இரண்டு சேனையும் ரெஜிமெண்டின் பிற உத்தியோகஸ்தர்களும் வந்திருந்தனர். இப்போது மொத்தம் நாலாயிரம் கோஸக்குகள் அங்கு இருந்தனர். இவர்கள் தவிர, யாரும் கூப்பிடாமலே, நடந்த விஷயத்தைக் கேள்விப்பட்டுத் தாங்களாகவே பல கோஸக்குகள் வந்து சேர்ந்துவிட்டனர்.

புதிதாக வந்த ரெஜிமெண்டின் ஆபீஸர்கள் புல்பாவின் இரண்டு பிள்ளைகளுக்கும், அவர்களுடைய தாயிட

மிருந்து அவளது ஆசியையும் கீவ் நகரத்திலுள்ள மேஸி கோர்ஸ்க் கோவிலிலிருந்து இரண்டு சிலுவைகளையும் கொண்டுவந்திருந்தனர். அந்தச் சிலுவையை இரு சகோதரர்களும் தங்கள் கழுத்தில் கட்டிக்கொண்டனர். இருவருக்கும் தங்களை அறியாமலே தாயிடம் நினைவு சென்றது. அந்தத் தாயின் ஆசி என்ன விளைவைத் தரும்? வருங்காலத்தில் அந்த ஆசிகள் என்னென்ன கொண்டுவரப்போகிறது? யுத்தத்தில் எதிரிகளை முறியடித்து, வெற்றியும் நிறைந்த சம்பத்தும் புகழும் புடைசூழத் தங்கள் பெருமையைச் சாஸ்வதமாக பண்டுரா வாத்தியத்தோடு பாடல்களில் அமைத்துப் பாட, தங்கள் தந்தையர் நாட்டுக்குப் போக, இந்த ஆசி பயன்படுமா? இல்லை......? வருங்காலத்தை யாரால் அறிய முடியும்? சதுப்பு நிலத்தின் மேலே, இலையுதிர்காலத்து மேகம் படர, அதற்குள்ளே பறவைகள் பல, தங்கள் இறக்கைகளை அடித்துக்கொண்டு கண்ணை மூடிக்கொண்டு ஒன்றை ஒன்று பாராமல் தங்கள் இறக்கைகளை மட்டும் அடித்துக் கொண்டு—இராஜாளி, புறுவைக் காணுமலும், புறு இராஜாளியைப் பாராமலும்—ஒவ்வொன்றும், மரத்தினின்றும் எவ்வளவு தூரம் போக முடியும் என்று அறியாமலே பறந்துகொண்டிருப்பதைப் போல......

ஓஸ்டாப் தன் வேலைகளை முடித்துக்கொண்டு தன் குரனுக்குச் சென்றுவிட்டான். ஆன்றியின் உள்ளத்தை ஏதோ ஒருவிதத் துன்பச் சுமை அவனை அறியாமலே அழுத்திக்கொண்டிருந்தது. கோஸக்குகள் அனைவரும் தங்கள் மாலை உணவை முடித்துக்கொண்டனர்; மாலை மறைந்து, ஜூலை மாதத்து இரவு ரம்யமாகக் காற்றில் தவழ்ந்தது; ஆனல் இந்த இன்பமயமான காட்சியில் தன்னை மறந்த ஆன்றி தன் குரனுக்கும் செல்லாமல், தூங்குவதையும் மறந்து அங்கேயே நின்றிருந்தான். எண்ணித் தொலையாத பலவிதமான நட்சத்திரங்கள் வானத்தில் மின்னிக் கொண்டிருந்தன. அந்தத் திறந்த வெளி எங்கும், வண்டிகள் நிறைந்து காணப்பட்டன. எதிரிகளிடமிருந்து கைப்பற்றிய பல வகை உணவு வகைகளும் பிறவும் அந்த வண்டிகளில் இருந்தன. அந்த

வண்டிகளின் கீழே ஒவ்வொரு தார்ச் சட்டி தொங்கிக் கொண்டிருந்தது. அந்த வண்டிகளை ஓட்டிச் சபோரோஷி யர்கள் நீட்டி விரித்துப் படுத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் பல விதமாகத் தூங்கிக்கொண்டிருந்தனர். சிலர் தங்கள் தலைகளைச் சணல் மூட்டைகள் மீதும், சிலர் தங்கள் தொப்பிகள் மீதும், சிலர் தனது தோழன் பக்கங்கள் மீதும் சாய்த்துக்கொண்டு தூங்கிக்கொண் டிருந்தனர். ஒவ்வொரு கோஸக்கிடமும் தவிர்க்க முடி யாத சில சாமான்கள் இருக்கும். அவை தீப்பெட்டி, குட்டையான பித்தளைப் பூணிட்ட சுங்கான், வாள், சுங்கானைச் சுத்தப்படுத்தும் பிரஷ் ஆகியவை தூங்கும் போதும் அவர்களுடனேயே அவைகள் இருந்தன. வயலின் சரிவுகளிலே இருக்கும் பெரிய மண் குன்றுகள் போல வெள்ளை நிறச் சதைப் பிண்டங்கள் போல அந்த வெளி எங்கும் தங்கள் கால்களை மடக்கிக்கொண்டு படுத்திருந் தனர். அந்தப் பிரதேசமெங்கும் தூங்குகின்றவர்களின் குரட்டைச்சத்தம் விநோதமான சப்தங்களுடன் ஒலித் தன. இந்தச் சப்தத்திற்கு மாற்றுப்போல, தங்களைக் கட்டி வைத்திருக்கிறார்களே என்று ஆத்திரப்படுவது போலக் குதிரைகள் கனைத்துக்கொண்டிருந்தன. இதன் நடுவில், ஜுலை மாதத்து இரவு இன்னும் மனோரம்யமாக மாறிற்று. தீக்கிரையாகி, இன்னும் அனல் கக்கிக்கொண் டிருந்த பக்கத்து ஜில்லாக்களின் ஜுவாலை அந்த ஜுலை மாதத்து இரவின் அழகிற்கு, ஒருவித பயங்கரமான அழகைக் கொடுத்தது. அங்கோரிடத்தில் தீப்பிழம்பு, நேரே வானத்தை நோக்கி மெள்ளப் பாய்ந்துகொண்டிருந் தது. மற்றொரு இடத்தில் பற்றி எறிய முடியாத ஒன்றின் மேல் தீக்கொழுந்துகள் பட்டுத் தெறித்துச் சூறாவளி யாக மாறிச் சீறிப் பாய்ந்து நட்சத்திரங்களையே தீண்டி விடுவது போல் மேலேறிக்கொண் டிருந்தது. அப்படி மேலேறிய அக்னியின் துண்டிக்கப்பட்ட தீ நாக்குகள் வானத்தின் உயரத்திலே சென்று மறைந்துவிட்டன. அங்கொரு பயங்கரமான பாதிரி தனது அச்சந்தரும் அழகை வெளிக் காட்டுவதுபோல, தீயின் ஜுவாலை வீசும் போதெல்லாம் தீயினால் பொசுங்கிய கருமை படர்ந்த அந்த மாதாகோவில் காட்சியளித்தது. அந்தக் கோவிலின்

தோட்டம் பற்றி எரிந்துகொண் டிருந்தது. புகையினால் கவ்வப்பட்ட மரங்களின் அசைவினால் ஏற்படும் சப்தம் அங்கு கேட்டுக்கொண் டிருந்தது. அந்தப் புகை மாறி, தீப் பிடித்ததும் அந்த மரங்களில் கொத்துக் கொத்தாகப் பழுத்துத் தொங்கிக் கொண்டிருந்த பழங்களையும் தீ பற்றிக்கொண்டு, அவைகளுக்கு உக்ரமான ஒருவித மஞ்சள் நிறச் சோபையைத் தந்தது. அங்குமிங்குமாகத் தொங்கிக் கொண்டிருந்த மஞ்சள்நிறப் பழங்களைத் தங்க நிறத்திற்கு மாற்றிற்று. இதன் நடுவே, தீப்பற்றி எரியும் கட்டிடங்களிலும், மரக்கிளைகளிலும் ஒரு யூதனோ அல்லது பரிதாபத்துக்குரிய ஒரு பாதிரியோ தீயோடு வெந்துகொண் டிருக்கும் கரிய உருவமும் தெரிந்தது. இந்தத் தீக்குண்டத்தின் உயரே, மிக உச்சியில் பறக்கும் பறவைகளின் சிறு கருகிய உருவம் அக்னிக் கழனியிலே சிறு சிலுவைகளைப்போலக் காட்சி தந்தன. முற்றுகை யிடப்பட்டுள்ள நகரம் ஆழ்ந்த உறக்கத்திலிருப்பதுபோலத் தோன்றியது. தூரத்தில் எரிகின்ற தீயின் ஜோதியில் அந்த நகரத்து ஸ்தூபிகள், கூரைகள், கட்டைச் சுவர்கள் முதலியன அமைதியாக மினு மினுத்துக்கொண் டிருந்தன.

ஆன்றி கோஸக்குகளின் வண்டிகளைப்பார்வையிட்டுக் கொண்டே நடந்தான். காவற் படையினருக்காக ஏற்றப் பட்ட தீ மெள்ள அணைந்துகொண் டிருந்தது. காவற் காரர்களே ஆழ்ந்த தூக்கத்திலிருந்தனர். அவர்கள் வயிறு புடைக்க அன்று கஞ்சியை, ஒரு உண்மையான கோஸக் கின் மனம்போன போக்கில் குடித்திருந்தனர். இந்த மாதிரியான அஜாக்கிரதையைக் கண்டு ஆச்சரியப்பட்ட ஆன்றி "நல்ல வேளையாக, நமது எதிரி பலசாலி அல்ல. ஆகவே, நாம் பயப்படவேண்டிய அவசியம் இல்லை" என்று சமாதானப் படுத்திக் கொண்டான். கடைசியில் ஒரு வழியாக ஒரு வண்டிக்குள் ஏறித் தன் கரங்களைத் தலைக்குக் கீழே வைத்துக்கொண்டு படுத்தான். ஆனால் அவனுக்கு அப்போதும் தூக்கம் வரவில்லை. நீண்டநேரம் வானத்தையே பார்த்துக்கொண் டிருந்தான். அவன்முன் திறந்த வானம் முழுமையும் நன்கு தெரிந்தது. நிர்மல

மான சுத்தமான காற்று வீசிக்கொண் டிருந்தது. நட்சத்திரக் கூட்டங்கள் வானத்திற்குள்ளே செல்வதற்காக அமைத்ததுபோல ஒரு பால்நிறப் பாதையை அமைத்துக் கொண்டிருந்தன. அங்கும் ஒரே ஒளிவெள்ளம். ஆன்றி சிறிதுநேரம் தூங்குவதும் பிறகு விழித்துக் கொள்வது மாக இருந்தான். அவன் கண்களுக்கு முன்னே வானம் மறைந்து மறைந்து தோன்றியது.

இந்தச் சமயத்தில் ஒரு விநோதமான மனித முகம் அவன் முகத்துக்கெதிரே திடீரென்றுதோன்றியது. தூக்க மயக்கத்தில் தோன்றிய ஏதோ கற்பனை உருவம் என்று முதலில் நினைத்து அது உடனே மறைந்துவிடும் என்று நம்பிக் கொண்டிருந்த ஆன்றியின் விரிந்த கண்களில் ஒட்டி உலர்ந்துபோன ஒரு முகம் தன்மேல் கவிழ்ந்து கொண்டு தன் கண்களையே கூர்ந்து கவனித்துக்கொண் டிருப்பதைக் கண்டான். முக்காடிட்டுக்கொண் டிருந்த தலையிலிருந்து கருத்த நீண்டு கலைந்து தொங்குகின்ற அளக பாரமும் சவக்களை படிந்த மங்கலான முகமும் கண்களில் தோன்றிய ஒளியும், நீண்டு அளவெடுத்தாற்போல் அமைந்திருந்த முகத்தோற்றமும் நிச்சயம் அது ஒரு சிறுத்தையைப்போல் காட்சியளித்தது. தன்னை அறியாமலே தன் கைத் துப்பாக்கியைக் கலக்கத்தோடு எடுத்துக் கொண்டே "யார் நீ? பேயாக இருந்தால் போய்விடு. மனித உருவம்தான் என்றால் உன்னுடைய வேடிக்கைக்குத் தவறான நேரத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறாய். மரியாதையாகப் போய்விடு. இல்லாவிட்டால், ஒரு குண்டில் உன்னைக் கொன்று விடுவேன்" என்றான்.

இதற்கெல்லாம் பதிலாக அந்த உருவம் தன்னுடைய விரலைத் தன்உதடுகளின்மேல் வைத்துச் சப்தம் போடாமல் இருக்கும்படி வேண்டுவதுபோல ஜாடை காட்டியது. அவன் தன் கரங்களைத் தாழ்த்திக்கொண்டு, அந்த ஆவி போன்ற உருவத்தை இன்னும் கூர்ந்து நோக்கினான். அந்த உருவத்தின் நீண்ட கேசம், கழுத்து, பாதிவரை தெரிந்த மார்பகங்கள் இவைகளைக் கண்டு அது ஒரு பெண் உருவம் என்பதை அறிந்துகொண்டான். ஆனால் அவள் இந்தப் பக்கங்களைச் சேர்ந்தவளாகத் தெரியவில்லை. பல

மிழந்த அவள் முகம் களை இழந்து மங்கலாகத் தோன்றியது. அவளுடைய, உட்குழிந்த கன்னங்களை மீறித் தாடை எலும்புகள் வெளியே நீட்டிக்கொண்டிருந்தன. வில்லைப் போல் வளைந்திருந்த அவளது புருவங்கள், அவளுடைய குறுகிய கண்களுக்கு மேலே அமைந்திருந்தன. அவளை எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகக் கவனித்தானே அவ்வளவுக் கவ்வளவு எங்கேயோ பார்த்தது போன்ற நினைவு ஏற்பட்டது. கடைசியில் அவனால் பொறுக்க முடியாமல் "நீ யார்? உன்னை எங்கோ பார்த்துப் பழகியது போல எனக்குத் தோன்றுகிறது" என்று கேட்டான்.

"இரண்டு வருடங்களுக்கு முன் கீவ் நகரத்தில்."

"இரண்டு வருடங்களுக்கு முன்......கீவ் நகரத்திலா?..." என்று ஆன்றி அந்த வார்த்தைகளையே மறுபடியும் திரும்பச் சொல்லி, தனது கல்லூரி வாழ்வை நினைவுபடுத்திக் கொண்டான். அதற்கு மேல் அவளை அவன் அவ்வளவாகக் கவனிக்க வேண்டிய அவசியமிருக்கவில்லை. உடனே, ஆச்சரியத்தோடு "அந்த வேவோடின் மகளுடைய தாதி...தார்த்தாரியப் பெண் அல்லவா நீ?" என்று கேட்டான்.

"உஷ்!" என்று மறுபடியும் அவள் தன் கரங்களைக் கோர்த்துக் கொண்டு அவனை மீண்டும் அமைதியாகப் பேசும்படி வேண்டிக் கொண்டாள். யாரேனும் கவனிக்கிறார்களா என்று சுற்றுமுற்றும் பார்த்தாள்.

"நீ ஏன் இங்கு வந்தாய்—எதற்காக?" என்று மெல்லிய குரலில், அவன் உணர்ச்சி வசப்பட்டு, கேட்டான்.

"உன்னுடைய எஜமானி எங்கே? அவள் உயிரோடு சுகமாக இருக்கிறாளா?" என்று கேட்டான்.

"அவள் இங்குதான், இந்த நகரத்தில் இருக்கிறாள்."

"என்ன இந்த நகரத்திலா? அவள் ஏன் இந்த நகரத்தில் வசிக்க நேர்ந்தது?" என்று ஆத்திரத்தில் சற்று உரக்கவே கேட்டுவிட்டான்.

“எங்கள் எஜமானர் கடந்த ஒன்றரை ஆண்டுகளாக இந்த டுப்னோ நகரத்திற்கு வேவோடாக இருக்கிறார். அதனால் . ...”

“அவளுக்குத் திருமணம் ஆகிவிட்டதா? சொல், நீ தான் என்ன விநோதமாக இருக்கிறாய்! அவள் இப் போது எப்படி இருக்கிறாள்?”

“அவள் இரண்டு நாட்களாகச் சாப்பிடவில்லை.”

“ஏன், ஏன் சாப்பிடவில்லை?”

“நகரத்து வாசிகள் யாருமே பல நாட்களாகச் சாப் பிட ஒரு துண்டு ரொட்டி கூட இல்லாமல் பட்டினியாகக் கிடக்கிறார்கள்; மண்ணைத் தவிர வேறு எதுவுமே சாப்பிட கிடைக்காமலிருக்கிறார்கள்.”

ஆன்றி பேச நாவெழாமல் அப்படியே நின்று விட்டான்.

“என் எஜமானி உங்களைச் சபோரோஷியர்கள் மத்தி யிலே நகர சபைக் கட்டிடத்திலிருந்து கண்டு பிடித்தாள். அவள்தான் என்னை இங்கு அனுப்பி “நீ போய் அந்தக் கனவானிடம் என்னைப்பார்க்க வரும்படி கேட்டுக்கொள். என்னை மறந்துவிட்டிருந்தால், ஒரு துண்டு ரொட்டியை யாவது என் வயோதிகத் தாய்க்காகக் கொடுக்கச் சொல்; என்னால் அவள் இப்படிச் சாவதைப் பார்த்துக் கொண் டிருக்க முடியவில்லை. அதைவிட, நானே அவளுக்கு முன் செத்துவிட்டால் நல்லது; அவரது கால்களைப் பிடித்துக் கொண்டு வேண்டிக்கொள். அவருக்கும் ஒரு வயோதி கத் தாய் இருக்கிறாள், அவளுக்காகவாவது ஒரு துண்டு ரொட்டியைத் தரச் சொல்” என்று சொல்லி அனுப் பினாள்” என்றாள்.

இதைக் கேட்ட அவன் உள்ளத்திலே பலவிதமான உணர்ச்சிகள் போட்டி போட்டுக் கொண்டு கொந் தளித்தன.

“நீ எப்படி இங்கு வந்தாய், எப்படி இந்த இடத்தைக் கண்டுபிடித்தாய்?”

"சுரங்க வழி மூலம் வந்தேன்"

"அப்படி ஒரு சுரங்க வழி இருக்கிறதா?"

"இருக்கிறது"

"எங்கே?"

"என்னைக் காட்டிக் கொடுக்க மாட்டீர்களே?"

"என்னுடைய புனிதமான சிலுவையின் மேல் ஆணை!"

"அதோ அங்கே தெரிகிறதே அந்தப் பள்ளத்தருகே சென்றால் ஒரு சிறு ஓடை இருக்கும்; அதில் வளர்ந்திருக்கும் புதரிடையே அது இருக்கிறது."

"அந்தப் பாதை நேரே, நகரத்திற்குள் கொண்டு போய் விடுமா?"

"அது நேரே, நகரத்து மாதாகோவிலுக்குள் சென்று விடும்."

"அப்படி யென்றால், நாம் உடனே போகலாம் வா?"

"ஆனால் கிருஸ்துவின் பேராலும் புனித மேரியின் பேராலும் கேட்கிறேன், முதலில் ஒரு துண்டு ரொட்டி கொடுத்துதவுங்கள்."

"நல்லது, உனக்கு வேண்டிய மட்டும் கிடைக்கும். நீ இங்கேயே நின்றிரு; அதைவிட நீ இந்த வண்டிக்குள் ஏறி யார் கண்ணிலும் படாமல் படுத்துக் கொள்—உன்னை யாரும் பார்க்கமாட்டார்கள்; எல்லோரும் தூங்குகிறார்கள்; நான் சீக்கிரமே வந்துவிடுவேன்."

அவன் உடனே தன்னுடைய குரனை அடைந்து உணவுப் பண்டங்கள் இருக்கும் இடத்திற்குச் சென்றான். அவன் உள்ளம் அச்சத்தால் வேகமாக அடித்துக் கொண்டது. அவனுடைய பழையகால நினைவுகள் எல்லாம்—இந்த முரட்டு வாழ்க்கையின் விளைவால் கீழே தள்ளப் பட்ட நினைவுகள்— இப்போது மற்றைய நினைவுகளைத் தள்ளிவிட்டு மேலெழுந்தன.

மறுபடியும், கருங்கடலின் ஆழத்திலிருந்து வெளி வருவது போல அந்தக் கர்வமுள்ள பெண் அவன் முன் காட்சி அளித்தாள். அவன் கண்களுக்கு முன்னே அந்தப் பெண்ணின் வனப்பு மிகுந்த கரங்கள்; அவளுடைய கண்கள்; சிரிக்கின்ற உதடுகள்; அவள் மார்பகங்கள் மீது படர்ந்து கிடக்கும் கருமையான அடர்த்தி நிறைந்த கூந்தலின் சுருள்கள்; அவளுடைய கன்னிப் பருவத்தின் அழகெல்லாம்பொங்க அளவெடுத்து அமைந்திருக்கும் அங்கங்களின் துடி துடிப்பு மறுபடியும் காட்சி தந்தன. இந்தக் காட்சிகள் அவன் மனதிலிருந்து இத்தனை நாட்களாக மறைந்திருக்கவில்லை. அந்த இடத்தை இதை விட சக்தி வாய்ந்த உணர்ச்சிகள் ஆக்ரமித்துக் கொண்டிருந்தன. எத்தனையோ இரவுகள் இந்த நினைவுகள் அந்த இளம் கோஸக்கின் உள்ளத்தை, மலரச் செய்ததுண்டு. பல இரவுகள் திடீரென்று விழித்தெழுந்து ஏனென்றே தெரியாமல் மறுபடியும் உறக்கம் வராமல் தவித்திருக்கிறான்.

அவன் நடந்து கொண்டிருக்கும்போதே அவன் உள்ளம் இன்னும் வேகமாக அடித்துக் கொண்டது. அவளைப் பார்க்கப் போகிறோம் என்ற நினைவே அவன் முழங்கால்களை நடுங்க வைத்தது. அவன் வண்டிகளருகே வந்து சேர்ந்ததும், எதற்காக அங்கு வந்தோம் என்பதையே மறந்துவிட்டான். சிறிது நேரம் ஒன்றும் புரியாமல், தன் புருவங்களை விரல்களினால் சொறிந்துகொண்டிருந்தான். திடீரென்று அவள் இந்நேரம் பட்டினியால் செத்துக்கொண்டிருப்பாள் என்ற நினைவு உண்டாகியதும் அவனுக்குத் தலையிலிருந்து கால்கள் வரை அப்படியே நடுக்கம் ஏற்பட்டது. உடனே ஒரு வண்டிக்குள் நுழைந்து கருமையான பெரிய பெரிய ரொட்டித் துண்டுகளை வாரி அடுக்கினான். உடனே மற்றொரு நினைவும் அவனுக்கு ஏற்பட்டது. இதைப்போன்ற ரொட்டிகள், சாதாரண சபோரோஷியர்களின் உடலுக்குச் சரி. ஆனால் அவளைப் போன்ற மெல்லிய மிருதுவான உடம்புக்கு இது அவ்வளவு சரிப்பட்டு வராதே என்று சிறிது நேரம் யோசித்தான். அன்று பகல் கோஷிவோய், சமயற்காரர்கள் மூன்று வேளைக்கு ஆகக்கூடிய வெள்ளைக் கோதுமையை

எல்லாம் போட்டு ஒரே வேளைக்குக் கூழ் சமைத்துவிட்டதைக் கண்டு கோபித்துக் கொண்டது அவன் நினைவுக்கு வந்தது. ஆகவே நிச்சயம் அங்கே பாத்திரங்களில் இன்னும் மிச்சம் இருக்கும் என்று நினைத்துத் தன்னுடைய குரனின் சமையற்கட்டுக்குள் சென்று பார்த்தான். போகும்போதே தன் தந்தை உபயோகிக்கும் கூழ் பாத்திரத்தையும் எடுத்துக் கொண்டான். அங்கு பத்துப் பானைகள் பிடிக்கும் இரண்டு பெரிய பித்தளைப் பாத்திரங்களின் நடுவே அந்தச் சமையற்காரன் நீட்டிப் பரப்பிக்கொண்டு தூங்கிக் கொண்டிருந்தான். அந்தப் பித்தளைப் பாத்திரங்களின் கீழே இன்னும் அனல் சிறிது மங்கிக்கொண்டிருந்தது. அந்தப் பாத்திரங்களின் உள்ளே எட்டிப் பார்த்த ஆன்றி அப்படியே ஸ்தம்பித்துப் போனான். அந்த இரண்டுமே காலியாகக் கிடந்தன. இந்த இரண்டு பாத்திரங்களையும் காலி செய்வதற்கு, மனித முயற்சிக்கு அப்பாற்பட்ட சக்தி இருக்க வேண்டும். மேலும் தன்னுடைய குரனில் இருப்பவர்கள் மற்றைய குரன்களை விடக் குறைந்த தொகையினர்; அவன் மற்ற குரன்களின் பாத்திரங்களைப் போய்ப் பார்த்தான்—அங்கேயும் எல்லாம் காலியாகக் கிடந்தன. 'சபோரோஷியர்கள் அனைவரும் குழந்தைகளைப் போல; கொஞ்சமாக இருந்தால் அவைகளைச் சாப்பிட்டு விடுவார்கள்; அதிகமாக இருந்தால், அவர்கள் மிச்சமாக விடுவதே இல்லை' என்ற பழமொழி அவனுக்கு அப்போது நினைவுக்கு வந்தது.

இப்போது என்ன செய்வது? அந்தநகரத்து ரொட்டிக் கிடங்கைச் சூறையாடியபோது கைப்பற்றிய கோதுமை ரொட்டி அவனுடைய தந்தையின் ரெஜிமெண்டில்தான் எங்காவது இருக்க வேண்டும். அவன் நேரே தன் தந்தையின் வண்டிக்கருகே சென்றான். ஆனால் அங்கே அதைக் காண முடியவில்லை. ஒஸ்டாப் அந்தக்கோணி மூட்டையைத் தன் தலையணையாக வைத்துக்கொண்டு அந்தப் பிரதேசமே, அதிர்ந்து விழுந்துவிடுவதுபோல் உரத்த சப்தத்தில் குரட்டைவிட்டுக்கொண்டிருந்தான். ஆன்றி அந்தச் சாக்கு மூட்டையைப் பிடித்து இழுத்து ஒரு பக்கமாகக் குலுக்கினான். ஒஸ்டாப்பின் தலை கீழே தரையில் விழுந்

தது. அவன் உடனே எழுந்து உட்கார்ந்துகொண்டு கண்ணைத் திறக்காமலேயே, தன் உரத்த குரலில், "அவனைப் பிடியுங்கள், அந்தப் போலந்து பிசாசைப் பிடியுங்கள்; அந்தக் குதிரையையும் பிடியுங்கள்" என்றுகத்தினான்.

"பேசாமலிரு. இல்லாவிட்டால் கொன்றுவிடுவேன்" என்று பயத்தால் அந்தச் சாக்கு மூட்டையை ஓங்கிக் கொண்டே கூறினான் ஆன்றி. ஆனால் அவன் அப்படி ஒன்றும் செய்ய வேண்டிய அவசியமே இருக்கவில்லை. ஒஸ்டாப் தன் சப்தத்தை உடனே நிறுத்திக்கொண்டு, மறுபடியும் படுத்துக்கொண்டு குரட்டைவிட்டான். அந்த வேகத்தில் புல்கூட வளைந்து கொடுத்தன. ஆன்றி சிறிது நேரம் ஜாக்கிரதையாக, ஒஸ்டாப்பின் தூக்கத்தின் உளறல் யாரையேனும் எழுப்பிவிட்டதா என்று கவனித்தான். அடுத்த குரனில் ஒரு நீண்டு வளர்ந்த தலைமட்டும் எழுந்து சுற்று முற்றும் பார்த்துவிட்டு மறுபடியும் சாய்ந்துவிட்டது. இரண்டு மூன்று நிமிஷம் அங்கேயே தாமதித்து விட்டு அந்தச் சுமையுடன் கிளம்பினான். அந்தத் தார்த்தாரிய மாது மூச்சுவிடக்கூட அஞ்சியவளாய்ப் பதுங்கிக்கொண்டு அங்கு படுத்திருந்தாள்.

"எழுந்து வா! எல்லோரும் உறங்குகிறார்கள்; பயப்படாதே; என்னால் தூக்க முடியாவிட்டால் இந்தச் சுமைகளில் ஒன்றை உன்னால் தூக்கிக்கொண்டு வரமுடியுமா?" என்று கேட்டுக்கொண்டே, அந்த மூட்டையைத் தன் தோளின் மேல் சாய்த்துக்கொண்டு, வழியில் மற்றொரு வண்டியிலிருந்து இன்னொரு மூட்டை தினை மாவையும் இழுத்துக்கொண்டான். அந்தத் தார்த்தாரிய மாதிடம் கொடுப்பதற்காக மற்றொரு பெரிய ரொட்டித் துண்டையும் எடுத்துக்கொண்டு, இந்தப் பாரத்தைத் தாங்கமாட்டாதவனாய்க் குனிந்தபடியே பயப்படாமல் தூங்குகின்ற சபோரோஷியர்கள் மத்தியிலே நடந்து சென்றான்.

"ஆன்றி!" தன்னைக் கடந்து செல்லும் போது புல்பா குரல் கொடுத்தான்.

ஆன்றியின் உள்ளத் துடிதுடிப்பே நின்றுவிட்டது. அவன் அப்படியே நின்றுவிட்டான். தலையிலிருந்து

கால்கள்வரை அச்சத்தால் உதறலெடுக்க, நடுங்குங் குர லில் "என்ன!" என்றான்.

"உன்னோடு ஒரு பெண் இருக்கிறாளே, என்ன விஷ யம்? நான் எழுந்ததும், உன் தோலை உரித்து உனக்கே கறி சமைத்துப் போடுகிறேன் இரு. பெண்கள் எப்போதுமே நன்மைக்கு உதவி செய்யமாட்டார்கள்" என்று சொல்லி விட்டுத் தன் தலையைத் தோளின் மீது சாய்த்துக்கொண்டு அந்த மங்கிய தார்த்தாரிய மாதின் உருவத்தைக் கவனித் தான்.

ஆன்றி அங்கு தன் உயிரையே இழந்துவிட்டவன் போல நின்றான். தன் தந்தையின் முகத்தையே ஏறிட்டுப் பார்க்க அஞ்சினான். ஆனால், சிறிது நேரம் கழித்துத் தன் தந்தையைக் கண்டபோது, கிழட்டு புல்பா தன் தலையைத் தன் உள்ளங் கைகளால் தாங்கிக் கொண்டு, தூங் கிக்கொண்டிருந்தான். ஆன்றி சிலுவையின் அடையாளத் தைப் போட்டுக்கொண்டான். அவனைக் கணநேரத்தில் ஆட்டுவித்த பயம், இன்னும் வேகமாக அவனை உந்தித் தள்ளியது. அவன் அந்தத் தார்த்தாரிய மாதைத் திரும்பிப் பார்த்தான். அவள் தலையிலிருந்து கால்வரை நன்கு இழுத் துப்போர்த்திக்கொண்டிருந்தாள். அந்த மங்கிய ஒளியில் அவள் ஒரு கருங்கல் சிலைபோலக் காணப்பட்டாள். தூரத் தில் எறிந்துகொண்டிருந்த ஜுவாலையின் ஒளியில் அவளு டைய கண்கள் மட்டும் பிணத்தின் கண்களைப்போல மின் னிக்கொண்டிருந்தன. அவளுடைய போர்வையைச் சீண்டி விட்டுத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே நடந் தான். கடைசியில் அவர்கள் அந்தப் பள்ளத்தை அடைந் தனர். அங்கே ஒரு சிற்றோடை அமைதியாக ஓடிக் கொண்டிருந்தது. அதைச் சுற்றிக் காட்டுப் புதர் வளர்ந் திருந்தது.

அவர்கள் அந்தப் பள்ளத்தை அடைந்த பிறகே, சபோரோஷியர்களின் பார்வையிலிருந்து தப்பித்துக் கொண்டார்கள். ஆன்றி திரும்பிப்பார்த்தான். அந்தப்பள் ளத்தின் அடிப்பாகத்திலிருந்து பார்ப்பதற்கு அக் கரை மிக உயரமாகத் தோன்றியது. அதன் உச்சியிலே, ஆள்

உயரத்திற்கு வளர்ந்திருந்த புற்களின் மேலே, வானத்தில், அசல் தங்கத்தால் செய்யப்பட்ட அரிவாள் திசை மாறித் தொங்கிக்கொண்டிருந்தது. அப்போது வீசிக்கொண்டிருந்த இளங்காற்று, பொழுது புலர இன்னும் அதிக நேரம் இல்லை என்பதை அவர்களுக்கு எச்சரிக்கை செய்வது போலிருந்தது. ஆனால் காகமோ, சேவலோ கூவுவதை அவர்கள் கேட்கவில்லை. பல நாட்களாகவே அழிந்து போயிருக்கின்ற அந்த நகரத்தில் ஒரு சேவல் கூடக் கூவுவதை யாரும் கேட்டதில்லை. அவர்கள் அந்தச் சிற்றோடையை ஒரு சிறிய பலகை மூலம் கடந்து அக் கரையை அடைந்தனர். அக் கரை இன்னும் அதிக உயரமாக அவர்கள் முன் காட்சி தந்தது. அந்த நகரத்தின் பாதுகாப்பிற்கு இயற்கையாக அமைந்த அரண் போல அந்த இடம் இருந்தது. ஏனென்றால் இந்த இடத்தில் கொத்தளம் மிகத் தாழ அமைக்கப்பட்டிருந்தது. அதற்குப் பின்னே எந்தப் படையும் வைக்கப்பட்டிருக்கவில்லை. ஆனால் அந்தக் கொத்தளத்தை அடுத்து மாதாகோவிலின் கடினமான சுவர் அமைந்திருந்தது. இந்தக் கரையை அடுத்த பிரதேசத்தில்—செடிகளும், கரைக்கும் மேட்டுக்கும் இடைவெளியில் ஆள் உயரத்திற்கு மேல் வளர்ந்திருக்கும்-புற்களும் நிறைந்திருந்தன. அந்த மேட்டின் உச்சியில் எப்போதோ நன்றாக வளர்ந்திருந்த மிளாறினால் வேயப்பட்ட தோட்டத்தின் பழுதுபட்ட வேலி மட்டும் இன்னும் இருந்தது. அதற்கு முன்னே, பல விதமான காட்டுச் செடிகளும், நெருஞ்சிமுட் செடிகளும், சூரியகாந்திச் செடிகளும், மற்றைய எல்லாச் செடிகளையும் முந்திக்கொண்டு தலையை நீட்டின. இந்த இடத்திற்கு வந்ததும் அந்தத் தார்த்தாரிய மாது தனது ஜோடுகளைக் கழட்டித் தன் ஆடைகளைச் சற்று ஜாக்கிரதையாகத் தூக்கிப் பிடித்துக்கொண்டு நடந்தாள். அந்தச் சதுப்பு நிலத்தில் ஜலம் நிறைந்திருந்தது. செழித்து வளர்ந்திருந்த புதர்களைக் கடந்து அவர்கள் சருகுகள் நிறைந்த ஒரு இடத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அந்தச் சருகுகளை விலக்கியதும், பூமியின் அடியில் ரொட்டி அடுப்பு அளவு திறந்திருந்த ஒரு வழி தெரிந்தது. அந்தத் தார்த்தாரிய மாது, தலையைக் குனித்து முதலில் உள்ளே

சென்ருள். ஆன்றி தன் சுமையோடு மிகக் தாழக்குனிந்து அந்தத் திறந்த வாயிலுக்குள் நுழைந்தான். உள்ளே நுழைந்ததும் அவர்கள் முன்னே ஒரே கும்மிருட்டு.

## 6

ஆன்றி அந்தக் கும்மிருட்டில் தட்டுத்தடுமாறி, தன் சுமைகளுடன் அந்தத் தார்த்தாரிய மாதைப் பின் தொடர்ந்தான்.

"நாம் சீக்கிரமே, பாதையை அடைந்துவிடுவோம். நான் விளக்கை வைத்துவிட்டு வந்த இடத்திற்கு நெருங்கிக்கொண்டிருக்கிரும்" என்று அவள் கூறிஞள்.

உண்மையாகவே அந்தச் சுரங்கச்சுவரின் இருட்டைச் சிறிது மாற்றி வரவர ஒளி தெரியத் தொடங்கியது. அவர்கள் திறந்த வெளிபோன்ற இடத்திற்கு வந்தார்கள். அந்த இடம் அதற்கு முன் ஒரு கோவிலாக இருந்திருக்க வேண்டும். ஏனென்ருல் சுவருக்கருகில், ஒரு குறுகிய மேஜை இடப்பட்டு அந்த இடம் பிரார்த்தனைமேடையைப் போல்தோன்றியது. அதற்கு மேலே முற்றிலும் சிதைந்து போன கத்தோலிக்க மாதாவின் சிலை ஒன்றும் இருந்தது. அந்தச் சிதைந்துபோன சிலைக்கு மங்கியஒளி அளிக்கும் ஒரு வெள்ளி விளக்கும் அருகே மாட்டப்பட்டிருந்தது. அந்தத் தார்த்தாரிய மாது குனிந்து அங்கு தரையில் தான் வைத்திருந்த விளக்கை எடுத்தாள். அந்த விளக்கு பித்தளையால் செய்யப்பட்டிருந்தது. உயரமான தண்டுடைய அந்த விளக்கோடு, திரியை வெட்டும் கத்திரியும், திரியைத் தள்ளுகின்ற பித்தளைக் கம்பிகளும், விளக்கை அணைக்கும் கருவியும் ஒரு சங்கிலியில் பிணைக்கப்பட்டுத் தொங்கிக் கொண்டிருந்தன. அந்த விளக்கை எடுத்து அந்த வெள்ளி விளக்கில் பொருத்திஞள். இப்போது கொஞ்சம் அதிகமான பிரகாசம் தென்பட்டது. அவர்கள் இருவரும் ஒருவர் பின் ஒருவராய் நடந்தனர். அந்த விளக்கின் பிரகாசத்திலும், இருட்டிலும் அவர்கள் ஒருவர் பின் ஒருவராக ஜெர்ரார்டோவின் சித்திரங்களைப் போல அசைந்தனர்.

அந்தக் கோஸக்கின் வாலிபத் திரட்சியும் வலிவும் அழகும் சதிராடும் முகத்திற்கு மாற்றுப் போல அந்தப் பெண்ணின், களை இழந்து வெளுத்துப்போன தோற்றம் காட்சி அளித்தது. இப்போது அந்தச் சுரங்கப் பாதை சற்று அகலமாக இருந்தது. ஆன்றி சற்று நிமிர்ந்து நடக்க ஆரம்பித்தான். அந்தச் சுரங்கப் பாதையின் இரு மருங்கும் தெரிந்த மண் சுவர்கள் கீவ் நகரத்துக் கல்லறைகளை நினைவுபடுத்தின. அதைப்போலவே இந்தச் சுவர்களிலும் ஆழமான மாடங்கள் தோண்டி அதில் சவப் பெட்டிகளை நிறுத்தி வைத்திருந்தனர். சில ஆழமான மாடங்களில் வெறும் மனித எலும்புக் கூடுகள் காலத்தாலும், ஈரத்தாலும் மக்கிப்போய்த் தூள் தூளாகும் நிலைக்கு மாறிவிட்டன. முனிவர்கள் உலகத்துப் புயலுக்கும், துயரங்களுக்கும், ஆசாபாசங்களுக்கும் ஈடு கொடுக்க முடியாதென்ற அச்சத்தோடு இங்கு வந்து தஞ்சம்புகுந்தனர் போலும். இன்னும் சில இடங்களில் ஈரம் மிகுந்து இவர்களுடைய கால்களில் தண்ணீர் நனைத்தது. தன்னோடு வந்த வழிகாட்டி அடிக்கடி களைப்பு மிகுதியால் அலுப்படைந்து உட்கார்ந்துவிட, ஆன்றி அவளுக்காகச் சிறிது நேரம் தங்கித்தங்கிவர நேர்ந்தது. பல நாட்கள் பட்டினியாகக் கிடந்த வெறியில் அவள் ஒரு துண்டு ரொட்டியைத் தன் கும்பியில் போட்டடைத்ததும் அவள் வயிற்றில் வலி ஏற்பட்டிருக்க வேண்டும். ஆகவே அவள் அடிக்கடி பேச்சு மூச்சற்றுச் சிறிது நேரம் அப்படியே அயர்ந்து நின்று விடுவாள்.

ஒருவாறுக அவர்கள் இரும்பு வாசலுக்கு முன்னே வந்து நின்றனர். "அப்பாடி! ஆண்டவன் காப்பாற்றினர். நாம் வந்து சேர்ந்து விட்டோம்" என்று தன் பலவீனமான குரலில் கூறிவிட்டு அந்தக் கதவைத் தட்டுவதற்காகத்தன் கரங்களை உயர்த்தினள் அந்தத் தார்த்தாரிய மாது—ஆனல் அவளுக்கு அவ்வளவு சக்தி இல்லை. அவளுக்குப் பதிலாக அந்தக் கதவைப் பலமாகத் தட்டினன். அந்தச் சப்தத்தின் எதிரொலியிலிருந்து கதவுக்குப் பின்னல் ஏதோ காலியான அறை ஒன்று இருக்க வேண்டும் என்று தோன்றியது. அதைத் தொடர்ந்து அந்த எதிரொலியின்

சப்தம் ஏதோ ஒரு வளைவில் பட்டுத் திரும்புவது போல மாறிற்று. இன்னும் இரண்டு நிமிஷங்கள் கழித்து, சாவிகள் 'கல கலெ'ன ஒலிக்க யாரோ படிகளில் இறங்கி வரும் ஓசை கேட்டது. கதவும் திறக்கப்பட்டது. இவர்களைச் சந்தித்தவன் ஒரு பாதிரி. அவன் அந்தக் குறுகிய வாசலில் ஒரு கையில் ஒரு மெழுகு வத்தியும் மறு கையில் சாவிகளும் வைத்துக் கொண்டு நின்றிருந்தான். ஆன்றி இந்தக் கத்தோலிக்கப் பாதிரியைப் பார்த்ததும், தன்னையறியாமலேயே ஒரு கணம் திகைத்து நின்றான். கோஸக்குகள் மனத்திலே, வெறுப்புக்கும் ஆத்திரத்துக்கும் ஆளாகிய அந்தப் பாதிரிகள், கோஸக்குகளால் யூதர்களைக் காட்டிலும் கேவலமாக நடத்தப் படுகின்றவர்கள் அல்லவா? அந்தப் பாதிரியும் சிறிது நேரம் இந்தச் சபோரோஷிய கோஸக்கைக் கண்டதும் திகைத்து நின்றான். அந்தத் தார்த்தாரிய மாது முணுமுணுத்த வார்த்தைகளைக் கேட்டு, அந்தப் பாதிரி ஓரளவு திருப்தி யுற்றான். அதன் பிறகு அவர்களை உள்ளே அழைத்துக் கதவை அடைத்துவிட்டு அந்தப் படிகளைக் கடந்து அவர்கள் மேலே செல்லும்வரை உதவி புரிந்தான். அவர்கள் அந்தப் படிகளைக் கடந்ததும் ஒரே இருள் சூழ்ந்த மாதாகோவிலுள் நுழைந்தனர். பிரார்த்தனை மேடை அருகில் மெழுகுவத்தி வைக்கும் ஸ்தம்பங்கள் அருகே ஒரு பாதிரியார் முழங்காலிட்டு மெல்லிய குரலில் தன் பிரார்த்தனையைச் சொல்லிக்கொண் டிருந்தார். அவர் அருகில் இரண்டு கோவில் பாடகர்கள் ஊதாநிற மேலங்கியும் வெள்ளை நிலையங்கியும் தரித்துக் கொண்டு கைகளில் தூப கலசங்களை ஏந்திய வண்ணம் முழங்காலிட் டமர்ந்திருந்தனர். அந்தப் பாதிரியார் தெய்வீக அற்புதம் நிகழவேண்டும் என்று பிரார்த்தனை செய்துகொண் டிருந்தார்—அந்த நகரம் காப்பாற்றப்பட வேண்டுமெனவும், தங்களுடைய சகிப்புத்தன்மை மேலும் வளர வேண்டுமெனவும், பொறுத்துக்கொள்ளும் சக்தி இன்னும் வளரவும், லௌகிக துயரங்களைக் கண்டு, வேதனைப்படும் தங்களுடைய கோழைத்தனமும், பலவீனமும் ஐயங்களும் நீங்கவேண்டும் எனவும் பிரார்த்தனை செய்துகொண் டிருந்தார். பிசாசுகளைப்போல் காட்சி

யளித்த சில பெண்களும் முழங்காலிட்டுத் தங்களுக்கு முன்னிருந்த நாற்காலியின் பின்புறத்தின்மீதும் கருமை படர்ந்திருந்த பெஞ்சுகள் மேலும் வலுவிழந்த தங்கள் கரங்களை விரித்துக்கொண்டும் களைப்பு மிகுதியால் அதிலேயே தங்கள் சிரங்களையும் தாழ்த்திக்கொண்டு பிரார்த்தனை செய்துகொண் டிருந்தனர். இன்னும் சில ஆண்களும் கூரையின் வளைவுகளைத் தாங்குகின்ற கம்பங்களின்மேல் சாய்ந்து கொண்டு முழங்காலிட்டு வணங்கிக் கொண்டிருந்தனர். பிரார்த்தனை மேடைக்குப் பின்னே இருந்த நிறம் மாறிய ஜன்னல் கண்ணாடியில், காலைச் சூரியனின் கதிர்கள் அந்தக் கோவி லின் தரையில் பலவித வண்ணத்தில் ஒளியைக் கொட்டி, அந்த மங்கிய கோவிலின் இருளோட்டிக் கொண்டிருந்தது. அந்தப் பிரார்த்தனை மேடைமீது பற்பல நிறமுள்ள ஒளிக் கதிர்கள் கூடி ஒளி யூட்டிக்கொண்டிருந்தன. தூப கலசங்களிலிருந்து வெளியாகிக் கொண்டிருந்தபுகை அந்தக் கதிர்களில் கலந்து வானவில்லின் வண்ணத்தைப்போலக் காட்சி யளித்தது. ஒரு மூலையில் இருளில் நின்றுகொண் டிருந்த ஆன்றி காலைக் கதிரவனின் ஜோதி செய்துகொண் டிருந்த விந்தைகளை ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண் டிருந்தான். அதே சமயத்தில் அந்தக் கோவிலின் வாத்தியம் முழங்க ஆரம்பித்தது. அந்த ஓசை கோவிலெங்கும் ஒரு வித புனிதமானதும் பக்தியூட்டக் கூடியதுமான, நாதத்தை எழுப்பிக் கொண்டு, ஒரு சமயம் குறைவதும், திடீ ரென்று சப்தம் அதிகமாவதும் அந்த வளைவுகளெங்கும் சென்று நாத சஞ்சாரம் செய்வதுமாக இருந்தது. அடுத்த கணமே அந்த நாத ஓசை கன்னிப் பெண்களின் குரல் இனிமையைப் போல் மாறி ஒரே கர்ஜனையாகவும் மாறி மாறி அந்தக் கோவிலையே நாத வெள்ளத்தில் மூழ்கடித் தது. நாத ஓசை அந்தக் கூரையின் வளைவுகளெங்கும் நீண்ட நேரம் எதிரொலியைக் கிளப்பிக் கொண்டிருந்தது. திறந்த வாய் மூடாமல் இந்த மகோன்னதமான இசை யைக் கேட்டுப் பிரமித்துப் போனான் ஆன்றி.

அந்தச் சமயத்தில் தன் சட்டையை யாரோ இழுப் பதை உணர்ந்தான்.

"நமக்கு நேரமாகிறது" என்று கூறினாள் அந்தத் தார்த்தாரிய மாது.

அவர்கள் இருவரும், யார் கண்ணிலும் படாமல் அந்தக் கோவிலைக் கடந்து திறந்த வெளியை அடைந்தனர். காலைச் சூரியனின் செங்கதிர் கீழ் வானத்தில் ஒளி தீட்டி விட்டு மேலேறிக் கொண்டிருந்தது. எல்லாமே ஆதவனின் வரவுக்குக் கட்டியம் கூறின. அந்த நகரத்து வீதியில் அவர்கள் நடந்தனர். நகரத்து வீதிகள் எல்லாம் நான்கு மூலைகளும் ஒரே அளவாகச்—சதுரமாக--அமைந்திருந்தன. ஆனால் அந்த வீதிகளெல்லாம் காலியாகக் கிடந்தன. கட்டைகளால் கட்டப்பட்ட சிறு அங்காடிகள் மட்டும் அங்கு இருந்தன. ஒருவேளை ஒரு வாரத்திற்கு முன் அந்தக் கடைகள் மனிதர்களுக்குத் தேவையான பண்டங்கள் விற்பதற்குப் பயன் பட்டிருக்கலாம். ஆனால் இப்போது வெறும் கட்டைகள் மட்டுமே எஞ்சி இருந்தன. வீதிகளி லெல்லாம் குப்பையும் மண்ணும் ஒரே குன்றாக மண்டிக் கிடந்தன. அந்தக் காலங்களில் வீதிகளைக் கூட்டும் வழக்கமே இந்தப் பக்கங்களில் கிடையாது. வீதிகளைச் சுற்றி ஓரடுக்கு வீடுகள் கட்டப்பட்டிருந்தன. வீடுகள் எல்லாம் மண்ணாலும் கற்களாலும் கட்டப்பட்டிருந் தாலும் அவற்றின் சுவர்கள் பலவிதமான மர வேலைப்பாடு களால் அமைக்கப்பட்டிருந்தன. அந்தக் காலத்திய நகரங் களில் இதைப்போன்ற பாதி மரத்தாலான வீடுகள் கட்டு வது வழக்கமாக இருந்து வந்தது. இப்போதுகூட அதைப் போன்ற வீடுகளை லுதுவேனியா போலந்து பகுதிகளில் காணலாம். அந்த வீடுகளின் கூரைகளை மிக உயரமாகக் கட்டிப் பலவிதமான ஜன்னல்களோடு அமைத்திருந்தனர். வீதியின் ஒருபக்கத்தில் மாதா கோவிலைஒட்டி மற்றெல் லாக்கட்டிடங்களைக் காட்டிலும் உயரமாக ஒரு கட்டிடம் இருந்தது. அது நகர சபையோ அல்லது சர்க்காரின் நிலை யமாகவோ இருக்க வேண்டும். அந்த இரண்டு மாடிக் கட் டிடத்தின் உச்சிக் கூரைக்கு மேல் இரண்டு கம்பங்களை அமைத்து ஒரு மணிக்கூண்டு அமைத்திருந்தனர். அதன் மேல் ஒரு காவற்காரனின் உருவமும், கடிகாரத்தின் ஒரு பகுதியும் தெரிந்தது.

அந்த வீதியே சவக் களை பட்டுக் காட்சி அளித்தது. ஆன்றிக்கு யாரோ முணங்குவது கேட்டது. ஏறிட்டுப் பார்த்த அவன் கண்களுக்கு எதிர்க் கோடியில் ஒருவித சலனமுமின்றி இரண்டு மூன்றுபேர் படுத்துக் கிடப்பது தெரிந்தது. அவர்கள் உறங்குகிருர்களா அல்லதுசவமாகிப் போய்விட்டார்களா என்று தன்கண்களால் கூர்மையாகப் பார்த்துக் கொண்டே நடந்துவரும்போது ஏதோ ஒன்று காலில் பட்டு இடறிற்று. அது ஒரு பெண்ணின் சவம் —யூதச்சியைப் போலிருந்தது. களை யிழந்து, பசியின் கோரத்திற்காளான அங்கங்கள் மூலம் அவள் பருவம் தெரியாவிட்டாலும் அவள் ஒரு இளம் வயதுப் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தான். அவள் தலையைச் சுற்றி ஒரு சிவப்பு நிறக் கைக்குட்டை கட்டி இருந்தாள். அவள் காதுகளில் இரண்டு வரிசை முத்துக்கள் பதித்த காதணிகள் தொங்கிக் கொண்டிருந்தன. அந்தக் காதணிகளைச் சுற்றிக் கொண்டு அவளுடைய தலை முடிச் சுருள்கள், சுருங்கிப் போய், நரம்புகள் புடைத்துக் கொண்டிருக்கும் கழுத்தை வளைத்துக்கொண்டிருந்தன. அவளுக்குப் பக்கத்திலிருந்த ஒரு குழந்தை, அவளுடைய சுருங்கிப் போன மார்பகங்களை ஆத்திரத்துடன் பிடித்து இழுத்துக் கொண்டு, பால் வராமல் போகவே கோபத்துடன் மறுபடியும் இழுத்துப் பிசைந்து கொண்டிருந்தது. அந்தக் குழந்தை கத்தவில்லை. கதறவுமில்லை. ஆனுல் அதனுடைய வயிறு மேலெழும்பிக் கீழே தாழ்வதிலிருந்து அது இன்னும் தன் கடைசி மூச்சை இழந்துவிடவில்லை என்று மட்டும் தெரிந்தது. அவர்கள் மற்ெருரு வீதியை அடைந்ததும் ஒரு பயித்தியக்காரன் இவர்களைத் தடுத்து நிறுத்தி, ஆன்றியின் விலை மதிக்க முடியாத பொக்கிஷத்தைக் கண்டதும், ஒரு புலியைப் போல் அவன்மீது வேகமாகப் பாய்ந்து விரல்களால் அவனைப் பிராண்டி ஆத்திரத்துடன் "ரொட்டி!" என்று கத்தினுன். ஆனுல் அவனுடைய பலம் அவனுடைய பயித்தியத்திற்கீடாக இருக்கவில்லை. ஆன்றி அவனை உதறித் தள்ளினுன். பாவம் அவன் அப்படியே சுருண்டு கீழே விழுந்துவிட்டான். அவனுடைய நிலையைக் கண்டு மனம் இளகிய ஆன்றி அவனுக்கு முன் ஒரு ரொட்

டித் துண்டைத் தூக்கி எறிந்தான். அந்த ரொட்டியைப் பறித்துக் கொண்டு ஒரு பயித்தியக்கார நாயின் வெறியுடன் அதைக் கடித்துத் தின்றான் அவன். ஆனால் பல நாட்களாக உணவு காணுமல் அந்த ரொட்டியைச் சாப்பிட்டதும் பயங்கரமான அங்க சேஷ்டைகளுடன் அங்கேயே உயிரை விட்டான். அவர்கள் மேலும் நடக்க நடக்கப் பஞ்சத்தின் பயங்கரமான கோரங்களை அங்கங்கு கண்டனர். நகரவாசிகள் தங்கள் பசிக்கொடுமை தாங்கமாட்டாமல், வெளியே ஓடி வெட்ட வெளியில் தங்கள் கொடுமையை மறக்கலாம் என்று நினைத்தனர்போலும். ஒரு வீட்டு வாசலில் ஒரு கிழவி உட்கார்ந்திருந்தாள். தன் தலையை மார்பின் மீது சாய்த்துக்கொண்டிருந்த அவள், உயிரோடுதான் இருக்கிறாளா, இல்லை இறந்து விட்டாளா அல்லது மயக்கத்தினால் அப்படிக் கிடக்கிறாளா என்று சொல்ல முடியாதபடி ஓர் அரவமுமின்றி எதையும் பார்க்கவோ கேட்கவோ இயலாமல் கிடந்தாள். அங்கோர் வீட்டின் கூரையில் கட்டப்பட்ட கயிற்றிலிருந்து ஒரு விரைத்துக்கொண்ட பிரேதம் தொங்கிக் கொண்டிருந்தது. பாவம் பசியின் கொடுமையைக் கடைசிவரை தாங்கமாட்டாமல் அதற்கு முன்னமேயே தன் உயிரை விட்டுவிடத் தீர்மானித்து விட்டான் போலும்!

பசியின் கொடுமையாலும் பஞ்சத்தின் கோரத்தாலும் அவதிப்பட்டவர்களின் பயங்கரமான சின்னங்களைக் கண்டு அந்தத் தாதியைப் பார்த்து ஆன்றி, "இவர்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள எதுவுமே கிடைக்காமலா போய்விட்டது? மனிதர்கள் இவ்வளவு மோசமான எல்லைக்கு விரட்டப்படும்போது,நமக்குப்பிடிக்காத—இதுவரை சாப்பிட்டுப் பழக்கமில்லாத—உணவு வகைகளைத் தேடிச் சாப்பிடத்தான் வேண்டும். சட்டப்படி விலக்கப்பட்டவைகளைத் தவிரப் பிற பிராணிகளைத் தேடிச் சாப்பிட்டிருக்க வேண்டும். எதையும் உணவாக்கிக் கொள்ளப் பழகிக்கொள்ள வேண்டும்" என்றான்.

"எதையும் நாங்கள் விட்டுவைக்கவில்லை. எல்லாவற்றையுமே சாப்பிட்டாயிற்று. குதிரை, நாய், எலிகளைக் கூட விடவில்லை! இந்தப் பிராணிகள் எதுவுமே இந்த

நகரத்தில் இப்போது காணக்கூடக் கிடைக்காது. நாங்கள் வழக்கமாக நகரத்தில் உணவுப் பண்டங்களைச் சேமித்து வைப்பதில்லை. எல்லாமே பக்கத்துக் கிராமங்களிலிருந்து தான் வர வேண்டும்'' என்றாள் அந்தத் தாதி.

''இவ்வளவு பயங்கரமான சாவுக்கு மத்தியிலே, நீங்கள் எப்படி இந்த நகரத்தைக் காப்பாற்றுவதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?''

''அதையேன் கேட்கிறீர்கள். எங்கள் வேவோட் விட்டுக் கொடுத்திருப்பார். ஆனால் நேற்றுக் காலை புட்ஷாக்கிலிருந்து கர்னல் ஒரு பருந்தின் மூலம் ஓலையை நகரத்திற்குள் அனுப்பினார். அதில் நகரத்தை விடக்கூடாதென்றும், அவர் இதைக் காப்பாற்றத் தயாராக வருவதாகவும் மற்றொரு கர்னலின் வருகைக்காகக் காத்திருப்பதாகவும், அவரும் வந்துவிட்டால், இருவருமே சேர்ந்து வரப்போவதாகவும் கூறி இருந்தார். அவர்கள் எந்த நிமிஷமும் வந்து விடுவார்கள்.........நாமும் வீட்டை அடைந்து விட்டோம்.''

ஆன்றி தூரத்தில் வரும்போதே இந்த வீட்டைக் கவனித்தான். அந்த நகரத்திலுள்ள மற்ற வீடுகளைப் போலல்லாமல், இது ஒரு இத்தாலியத் தச்சனால் கட்டப்பட்டிருக்க வேண்டும். நல்ல அழகிய சிறு கற்களால் இரண்டு மாடிகளுடன் அமைந்திருந்தது அந்த வீடு. முதல் மாடியின் ஜன்னல்களைச் சுற்றி வெளியே கருங்கல்லையும் கம்பிகளையும் சேர்த்துச்செய்த சிறு தடுப்பு தகடுகள் (தாழ்வாரம் போன்றவைகள்) அமைக்கப்பட்டிருந்தன. மேன் மாடி முழுவதுமே பல வளைவுகளால் ஆன வளைவு மண்டபம் போல இருந்தது. அந்த வளைவுகள் மத்தியிலே இருந்த பின்னல் தட்டிகளில் அவர்களுடைய குடும்பச் சின்னங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. அந்த வீட்டின் மூலைகளில் கூட அவ்விதமே அலங்கரிக்கப்பட்டிருந்தன. கற்களால் அமைக்கப்பட்டு வர்ணமடிக்கப்பட்ட அந்த வீட்டின் படி வீதியிலே வந்து படிந்தது. அதன் கீழே இருமருங்கும் ஒரே மாதிரியான அலங்கார முறையில் காட்சி அளித்த காவற்காரர்கள் ஒரு கையில் கைக்

கோடாரியும், மற்ருெரு கையால் தங்கள் தலைகளைத் தாங்கிக் கொண்டும் உயிருள்ள மனிதர்களைப் போலல்லாமல், சிலைகளைப் போல் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் தூங்கவுமில்லை; கனவு காணவுமில்லை. ஆனால் அவர்களைச் சுற்றி நடப்பவைகளைப்பற்றி உணர்வுள்ளவர்களாகவே தோன்றவில்லை. மேலே யார் போகிருர்களென்பதுபற்றிக் கொஞ்சம் கூட அவர்கள் கவலைப்படவில்லை. படிகளுக்கு மேலே மிக உன்னதமான ஆடையணிகளுடன் ஒரு சிப்பாய் தலையிலிருந்து கால்வரை ஆயுதபாணியாகக் கையில் ஒரு பிரார்த்தனைப் புத்தகத்தோடு நின்றிருந்தான். அவன் தன் களைப்படைந்த கண்களுடன் இவர்களை ஏறிட்டுப் பார்த்தான். அந்தத் தார்த்தாரிய மாது எதையோ சொல்லவும் அவன் மறுபடியும் தன் பிரார்த்தனைப் புத்தகத்தில் பார்வையைச் செலுத்த ஆரம்பித்தான். அந்த வீட்டின் முன் அறைக்குள் நுழைந்தனர். அந்த அறை சற்றுப் பெரிதாகவே இருந்தது. அது வரவேற்பு அறையாகவோ நடைமுற்றமாகவோ இருக்கவேண்டும். அதில் சிப்பாய்கள், வேலைக்காரர்கள், கோப்பை தாங்கிகள், வேட்டைக்காரர்கள் இன்னும் அந்தக்காலத்திய போலந்துப் பிரபுக்களின் பெருமைக்கு இன்றியமையாதவர்கள் பலர் நிறைந்திருந்தனர். பிரபுக்கள், ராணுவ அதிகாரிகள், வெறும் நிலப் பிரபுக்கள் எல்லோருக்கும் இந்த வேலைக்காரர்கள் அவசியம். அவர்கள் எல்லோரும் பலவிதமான முறையில் சுவரருகே அமர்ந்திருந்தனர். அறை முழுதும் அவிந்துபோன மெழுகுவர்த்தியின் நாற்றமடித்துக்கொண்டிருந்தது. அந்த அறையின் மத்தியில் இன்னும் கூட, பொழுது புலர்ந்து காலைக் கதிரவனின் கதிர்கள் ஜன்னல் மூலம் அறையில் புகுந்துவிட்ட பிறகும், ஆள் உயரத்திற்கு இரண்டு மெழுகுவர்த்திகள் எரிந்துகொண்டிருந்தன.

ஆன்றி கருவேல மரத்தினுல் செய்யப்பட்ட அகலமான கதவுகளில் அமைக்கப்பட்டிருந்த சின்னங்களைப் பார்க்க நேரே அங்கு திரும்பினுன். ஆனுல் அந்தத் தாதி அவனைத் தடுத்துப் பக்கத்துச் சுவரருகே அமைந்திருந்த கதவைக் காட்டினுள். அதன் வழியே சென்று மற்ருெரு அறைக்குள் நுழைந்தனர். ஆன்றி அந்த அறையைச் சுற்

றிப் பார்க்க ஆரம்பித்தான். காலைக் கதிரவனின் வண்ண ஒளி ஜன்னலின் இடைவெளி வழியே உள்ளே பாய்ந்து, அந்தச் சுவரையும் திரையையும் வர்ண மயமாக்கிக்கொண்டிருந்தது. அந்தத் தாதி ஆன்றியை அங்கேயே இருக்கும்படி கூறிவிட்டு, மற்றொரு அறையின் கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்றாள். அப்படித் திறந்த போது அந்த அறையில் எரிந்துகொண்டிருந்த மெழுகு வர்த்தியின் பிரகாசம் வெளியே தெரிந்தது. உள்ளே யாரோ முணுமுணுப்பதையும் மெல்லிய குரலில் பேசுவதையும் கேட்ட ஆன்றியின் உள்ளம் நடுங்கியது. திறந்திருந்த கதவின் மூலம் உள்ளே ஒரு அழகிய பெண்ணின் உருவத்தையும் அவளுடைய அழகிய நீண்ட கேசம் தூக்கிய கரங்களின் மேல் படர்ந்திருப்பதையும் பார்த்தான். அந்தத் தாதி வெளியே வந்து அவனை உள்ளே போகும்படி கூறினாள். அவன் எப்படி உள்ளே சென்றான், கதவு எப்படி மூடப்பட்டது என்பதெல்லாம் அவனுக்கு நினைவே இல்லை.

அந்த அறைக்குள் இரண்டு மெழுகுவர்த்திகளும் ஒரு சிலைக்கருகே ஒரு விளக்கும் எரிந்துகொண்டிருந்தன. அதன் அருகே, முழங்காலிட்டு வணங்குவதற்காக ஒரு மேஜையும் இருந்தது. ஆனால் அவனுக்கு இவைகளைப் பார்க்க நேரமில்லை. அவன் தன் கண்களைத் திருப்பி அங்கே நின்றுகொண்டிருந்த பெண்ணைக் கவனித்தான். அவள் உணர்ச்சிகள் உறைந்து விரைத்துப் போய், கற்சிலையைப் போல நின்றிருந்தாள். வேகமாக அவளை நோக்கித் தாவுகின்ற சமயத்தில் அவள்சிலையாக மாறி விட்டது போலத் தோன்றினாள். அவனும் ஸ்தம்பித்து அவள் முன்னே நின்றுவிட்டான். அவன் பார்த்த அந்தப் பழைய பெண்ணைப் போல அவள் இல்லை. அவளை இப்படிப் பார்ப்போம் என்று அவன் கற்பனை செய்யவே இல்லை. அவன் நினைவிலிருந்த உருவம் இப்போதில்லை. அதை விட இரு மடங்கு அழகும் காந்தியும் பொங்க மாறி விட்டாள். அப்போது அவளைப் பார்த்தபோது, ஏதோ இன்னும் பூர்த்தியாகாத— முழுமை பெறுதவள் போல இருந்தாள். ஆனால் இப்போது சிற்பியின், கடைசி

வேலைப்பாடுகள் எல்லாம் தீர்ந்த ஒரு மகோன்னதமான சிலையைப் போலக் காட்சி தந்தாள். அப்போது அவள் மயக்கம் தரும் அழகிய சிறு பெண்ணாக இருந்தாள். இப்போது பருவத்தின் பூரண மலர்ச்சியில் எழில் நிறைந்து காணப்பட்டாள். அவளுடைய மேல் நோக்கிய விழிகளிலே பூரணத்துவத்தின் பிரகாசம்—பிரகாசம் போன்ற சாயைகள் அல்ல, பிரகாசத்தின் முழு உருவமே—தெரிந்தது. உலராது இன்னும் தேங்கி நிற்கும் கண்ணீர்த் திவலைகளிலிருந்து எங்கும் துருவிப்பாயும் ஒளிச் சிதறல் நேரே உள்ளத்தைச் சென்று தாக்கிற்று. வனப்புமிக்க தோள்கள், கழுத்து, மார்பகங்கள் எல்லாவற்றிலுமே அழகின் பூரணப் பொலிவு சிந்திக்கொண்டிருந்தது. சுருள் சுருளாக அவள் முகத்திலே வந்து விளையாடிக்கொண்டிருந்த கேசம் இப்போது அடர்ந்து செழித்துக் கற்றை கற்றையாக மண்டிக்கிடந்தது. தன் கேசத்தைப் பாதி சீவி முடித்து, மற்றொரு பாதியைத் தன் மார்பின் மேல் போட்டுத் தவழவிட்டிருந்தாள். அந்தக் கேசத்தின் நுனி, அவளுடைய விரல்களைத் தீண்டிக்கொண்டிருந்தது. அவளுடைய எல்லா அங்கங்களுமே மாறிவிட்டன. தன்னை இத்தனை நாட்களாகக் கனவுகளில் வந்து வாட்டி வதைத்துக்கொண்டிருந்த பழைய அங்க அசைவுகளைத் தேடிப் பார்த்தான்—அவன் நினைவிலிருந்தது போல ஒன்று கூட இப்போது இல்லை—அவள் முகம் சற்று வெளுத்திருந்தாலும், அது அவளுடைய அழகைக் குறைத்துக்காட்டவில்லை. மாறாக அவளது வனப்பை இன்னும் அதிகமாக்கி, கண்டவர்களை மயக்கி வெற்றிகொள்வது போல இருந்தது வெளிறிய அவள் முகத்தோற்றம். ஆன்றியின் உள்ளம் ஆச்சரியத்தால் அப்படியே நின்று ஸ்தம்பித்துப் போய் விட்டது. அவளும் இளமையின் கொள்ளை வனப்போடு, ஆண்மையின் பௌருஷத்துடன் செழித்து வளர்ந்திருக்கும் அந்தக் கோஸக்கையே பார்த்துக்கொண்டிருந்தாள். லாகவமாக அசைந்தாடும் அவனது சக்திவாய்ந்த தோள்களையும் அனாயாசமான அவனது சுதந்திர வேகத்தையும் தீர்க்கமான குணப்பண்பையும் அவளது ஒளி வீசும் கண்களால் கண்டாள். 'வெல்வெட்' போன்ற புருவங்கள் வளைந்

திருப்பதையும், கதிரவன் ஒளிபட்டு மின்னுகின்ற அவனது கன்னங்களையும் பார்த்தாள். அவனது அரும்பு மீசை பசும்புல்போல லேசாக வளர்ந்திருந்தது.

''தங்களைப்போன்ற கருணை நிறைந்த கனவானுக்கு நன்றி செலுத்தும் சக்தி எனக்கில்லை. ஆண்டவன் ஒருவன்தான் உங்களுக்கு அருள் புரியவேண்டும். என்னைப் போன்ற பலவீனமான பெண்......'' என்று தன் இனிய குரலில் பேச ஆரம்பித்தாள்.

உடனே அவள் கண்களைத் தாழ்த்திக் கொண்டாள். பனியைப் போன்ற வெண்மையான அவளது அர்த்த சந்திர வடிவமுள்ள கண்ணிமைகள் கவிழ்ந்து கொண்டன. அழகுமிக்க தன் தலையைக் குனிந்துகொண்டாள். பார்ப்பவரை இரங்க வைக்கும் அவளது முகத்தில் நாணத்தின் ரேகை மெல்லப் படர்ந்தது. ஆன்றி பேச்சற்றுப் போனான். அவன் உள்ளத்தில் அலைமோதுகின்ற எல்லா எண்ணங்களையும அவள்முன் கொட்டிவிட வேண்டும் என்று துடித்தான். அந்த எண்ணங்கள் எவ்வளவு வேகத்தோடு அவன் உள்ளத்தில் மோதுகின்றனவோ அதே வேகத்தோடு பேசவேண்டும் என்று தவித்தான்—ஆனால் முடியவில்லை. பேச முயன்றபோது அவன் கண்டத்தில் ஏதோ அடைத்துக் கொள்வது போலவும், பேசினாலும் வெளிவருகின்ற சொற்களிலே சப்தமில்லாமலிருப்பது போலவும் அவனுக்குத் தோன்றியது. கல்லூரியில் பழகி யுத்தத்தில் சேர்ந்து நாடோடியாகக் காலம் கழிக்கும் தனக்குச் சுத்தமாகப் பேச வராது என்று நினைத்தான். இதற்காகத் தன் கோஸக் பிறப்பையே நினைத்து வருத்தப் பட்டான்.

அந்தச் சமயத்தில், தார்த்தாரிய மாது அறைக்குள் நுழைந்தாள். அவன் கொண்டு வந்த ரொட்டியைத் துண்டுகளாக வெட்டி ஒரு தங்கத்தட்டில் இட்டு அந்தப் பெண்ணின் முன்னே வைத்தாள். அந்த அழகிய பெண், அந்தத் தட்டைப் பார்த்தாள். பிறகு அந்த மாதையும் கவனித்தாள். கடைசியாக ஆன்றியை ஏறிட்டு நோக்கினாள். அவளுடைய கண்களிலே ஒரு உலகத்து உணர்ச்

சியே பொங்கிக்கொண் டிருந்தது. அவளுடைய பொருள் பொதிந்த அந்தப் பார்வை, தன்னுடைய உணர்ச்சிகளி ஞல், பேச முடியாமல் அவள் திணறுவதையும் நன்ருக எடுத்துக் காட்டியது. ஆன்றி இவற்றை வார்த்தைகளைவிட நன்ருகப் புரிந்துகொண்டான். அவன் உள்ளமும் லேசாகி விட்டது. எல்லாமே சரியாகி விட்டதுபோல ஒருவிதத் தெம்பு பிறந்தது. இதுவரை அவன் உள்ளத்தில் மூண் டெழுந்த மனக் கிளர்ச்சிகளும் உள்ள விகாரங்களும் கூடி அவனுடைய பேசும் சக்தியைத் தடுத்துவிட் டிருந்தன. திடீரென,ஒருவித சுதந்திர உணர்வு அவன் உள்ளத்திலே உருவாகி, மனக் கதவுகளை உடைப்பதுபோலப் பேரிரைச்ச லிட்டு, எண்ணங்களுக்கு உருவங் கொடுத்துப் பீறிவரும் வார்த்தைகளை அவள்முன் கொட்ட வேண்டுமென்று துடி துடித்தான். ஆனுல் அந்த அழகிய பெண் உடனே அந்தத் தாதியை நோக்கி அக்கரையுடன், "ஆமாம், என் தாயாருக்கு? அவர்களுக்கும் சிறிது கொண்டுபோய்க் கொடுத்தாயா?"

"அவர்கள் தூங்குகிருர்கள்."

"என் தந்தைக்கு?"

"அவர்களுக்கும் கொடுத்தேன், எஜமானர் தாமே நேரில் வந்து இந்த கனவானுக்கு நன்றி தெரிவிப்பதாகச் சொன்ஞர்கள்."

அந்தப் பெண் ஒரு துண்டு ரொட்டியை எடுத்துத் தன் எழில் மிகுந்த விரல்களால் அதைப் பிளந்து தன் வாயருகே கொண்டு சென்ருள். வருணிக்க முடியாத சந்தோஷத்தோடு அவள் சாப்பிடுவதையே கண்கொட்டா மல் பார்த்துக்கொண் டிருந்தான் ஆன்றி. உடனே பசிப் பயித்தியம் பிடித்து, தான் கொடுத்த ரொட்டியைத் தின்று அங்கேயே உயிரை விட்டவனின் நினைவு வந்தது. முகம் வெளுக்க, அவளுடைய கரங்களைத் தடுத்து, "போதும், இதற்குமேல் சாப்பிடாதே, நீ இவ்வளவு நாள் சாப்பிடாம லிருந்ததினுல், இந்த ரொட்டி கூட விஷமாகி விடும், வேண்டாம்" என்று கூறினுன். அவளும் உடனே தன்கரங்களைத் தொங்கவிட்டுக் கொண்டு, சொன்னபடி

கேட்கும் சிறு பிள்ளையைப்போல அவனுடைய கண்களையே பார்த்துக்கொண்டு நின்றாள். இதைப் போன்ற கன்னிப் பெண்களின் கண்களிலே தோன்றுகின்ற உணர்ச்சிகளையும், அவைகளைப் பார்த்துவிட்டு, மனம் கிளர்ந்தெழுந்து உணர்ச்சி வசப்படுவோரின் எண்ணங்களையும் எடுத்துக்கூறும் சக்தி மட்டும் வார்த்தைகளுக்கிருந்தால்?—இல்லை, வார்த்தைகளுக்கென்ன, தூரிகையினாலும், உளியினாலும் மகோன்னதமான சுவைமிக்க கவிதைகளாலும் கூட எடுத்துக்கூற முடியாதே!

ஆன்றியின், உள்ளம், உயிர் உடல் முழுதுமே, உணர்ச்சியால் படபடக்க,

"ஏ ராணி, உனக்கென்ன தேவை? உனக்கெது வேண்டும்? எனக்கு உத்திரவு கொடு? உலகத்திலேயே உள்ள மிகவும் கடினமான காரியம் ஏதேனும் இருந்தால் சொல்?—என் உயிரே போனாலும் அதை நிறைவேற்றி வைக்கிறேன்! ஆம், உனக்காக என் உயிரைக் கூடக் காணிக்கை தருவேன்—எனது புனிதமான சிலுவையின் மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன்—உனக்காகச் சாவதென்றால் அது எவ்வளவு இன்பமாக இருக்கும் தெரியுமா? எனக்கு மூன்று கிராமங்கள் இருக்கின்றன! என் தந்தை லாயத்திலிருக்கும் குதிரைகளில் பாதி எனக்குச் சொந்தம். என் தந்தைக்காக என் தாய் கொண்டுவந்ததெல்லாம்—அவரிடமிருந்து அவள் மறைத்து வைத்திருப்பதுள்பட—எனக்குச் சொந்தம்! வேறெந்த கோஸக்கிடமும் என்னிடமிருப்பதுபோன்ற ஆயுதங்கள் கிடையாது. என்னுடைய வாளின் கைப்பிடியை வைத்தே ஒரு மந்தை குதிரைகளையும், மூவாயிரம் மாடுகளையும் வாங்கலாம். ஆனால் உன்னிடமிருந்து ஒரே ஒரு வார்த்தை வந்தால் போதும். இவை அத்தனையையும் நான் தூக்கித் தூர எறிந்துவிடுவேன். தீக்கிரையாக்கிவிடத் தயங்கமாட்டேன், அவ்வளவு சொத்தையும் துறந்துவிடுவேன். உன்னுடைய கருமை படர்ந்த புருவம் சற்று நெளிந்தால் போதும் இதை உடனே முடித்துவிடுவேன். நான் பேசுவது முட்டாள்தனமாகப் படலாம்; ஆம் நான் பேசுகின்ற இடமும் சரியான இடமல்ல; அசந்தர்ப்பமான நேரத்தில்தான் பேசுகிறேன்! கீவ்

நகரக் கல்லூரியில் வளர்ந்த என்னைப்போன்ற சபோரோ ஷியனிடமிருந்து வேறு எந்தவிதமான பேச்சை எதிர் பார்க்கமுடியும்? அரசர்களையும் பிரபுக்களையும் போல எனக்குப் பேசத் தெரியாது. நீ ஆண்டவனின் படைப்பி லேயே மிக உன்னதமான வார்ப்படம். உங்களுடைய பிரபுக்களின் மனைவிமார்கள் — பெண்களின் கூட்டத் திலேயே நீ மிகவும் மேலானவள். நாங்கள் உன்னுடைய அடிமைகளாக இருக்கக்கூட லாயக்கற்றவர்கள். தெய்வ லோக அப்ஸரஸ்கள்தான் உனக்குச் சேவை செய்யத் தகுந்தவர்கள்.''

உணர்ச்சிப் பரவசத்தோடு அவன் பேசிய ஒவ்வொரு வார்த்தையையும் ஒன்றுகூட விடாமல் வைத்தவிழி வாங் காமல் ஆர்வத்தோடு கேட்டாள். அவனுடைய ஒவ்வொரு சொல்லும், அவனது வாலிப உள்ளத்துத் திண்மையையும் ஆர்வத்தையும் கண்ணாடி போல எடுத்துக் காட்டியது. அவனது உள்ளத்திலிருந்து நேரே, பாய்ந்துவரும் ஒவ் வொரு சாதாரணச்சொல்லிலும் அந்த ஆகர்ஷண சக்தியை அவள் உணர்ந்தாள். தன்னுடைய எழில் மிக்க முகத்தை அவன் பக்கமாகத் திருப்பிக்கொண்டு முகத்தில் வந்து விழும் தன் கேசத்தைத் தள்ளிவிட்டுப் பிரிந்த உதடு களுடன் அவனையே நீண்டநேரம் பார்த்துக்கொண்டிருந் தாள். அவள் ஏதோ பேச ஆரம்பித்தவள் உடனே தன்னைத் தடுத்து நிறுத்திக் கொண்டாள்; தன்முன் நிற்கும் அந்த இளைஞன் ஒரு சபோரோஷியன் என்பதும் அவனுக்குப் பின்னே அவனுடைய தந்தையும் அவ னுடைய இதர சகோதரர்களும் தேசமும் நிற்பதை உணர்ந் தாள். பயங்கரமாகப் பழிவாங்கும் எண்ணத்தோடு, அந்த நகரத்தைப் படையெடுத்துக்கொண்டிருப்பதையும் தங்களைப்போன்ற இந்த நகரவாசிகள் பயங்கர மர ணத்தை எதிர்நோக்கி இருக்கின்ற அவல நிலையையும் சட்டென நினைவுபடுத்திக்கொண்டாள். அவள் கண்களில் அந்தக்கணமே கண்ணீர் பெருக்கெடுத்தோட ஆரம்பித் தது. அருகே கிடந்த வேலைப்பாடு மிகுந்த கைக்குட் டையை எடுத்துத் தன் முகத்தை மூடிக்கொண்டாள். உடனே அந்தக் கைக்குட்டை அப்படியே தெப்பமாக

நனைந்துவிட்டது. அவள் அப்படியே நீண்டநேரம் உட்கார்ந்து தன் தலையைப் பின்னால் சாய்த்துக் கொண்டாள். விஷப்பாம்பினால் கடிபட்டவள்போல, தன் அழகிய உதடுகளைப் பனியைப்போன்ற வெண்மையான பற்களால் கடித்துக்கொண்டு, கைக்குட்டையால் தன் முகத்தை அவன் பாராமலிருக்கும் வண்ணம் மூடிக் கொண்டு அழுதாள்.

"என்னோடு ஒரு வார்த்தை பேசமாட்டாயா?" என்று ஆன்றி அவளுடைய மென்மையான கரத்தைப் பிடித்துக் கொண்டே கேட்டான். உடனே அவன் நரம்புகளிலெல்லாம் ஒரு புத்துணர்ச்சியின் ஜுவாலை சுரீரென்று பாய்ந்தது. உணர்ச்சியற்றுக்கிடந்த அவள் கரங்களைத் தன் கரங்களில் வைத்து அழுத்தினான்.

ஆனால் அவள் ஒருவித சலனமுமின்றி, தன் முகத்திலிருந்த கைக்குட்டையை எடுக்காமலே, மௌனமாக இருந்தாள்.

"நீ ஏன் இப்படி மௌனமாக இருக்கிறாய், ஏன் என்று என்னிடம் சொல்லக் கூடாதா?"

அவள் தன் கைக்குட்டையைத் தூர எறிந்தாள். தன் கண்களை மறைக்கும் கேசச் சுருள்களை விலக்கிக் கொண்டு சோகம் நிறைந்த, அமைதியான குரலில் பேச ஆரம்பித்தாள். அவளுடைய பேச்சு, ஆழ்ந்த அமைதியான மாலையில், நீரின்மேல் படர்ந்திருக்கும் அடர்ந்த புதர்களினூடே, தவழ்ந்து வரும் மென் காற்றின் முணுமுணுப்புப்போன்றிருந்தது. கவலை மிகுந்த வழிப்போக்கன் மங்கிவரும் மாலை நேரத்தையும், வயல்களில் தங்கள் வேலைகளை முடித்துவிட்டு இன்பமயமான கானங்களைப் பாடிக் கொண்டுவரும் உழவர்களின் இசையையும் தூரத்தே போகும் வண்டிகளின் ஓசையையும் கேட்காமல், தன் காதுகளைத் தீட்டிக்கொண்டு தன்னை மறந்து லயித்து நிற்கும் காற்றின் இசை போலிருந்தது அவள் குரல்.

"என்னைப் போன்ற பரிதாபத்துக்குரியவள் யார்? என்னைப் பெற்றவள் எவ்வளவு துர்ப்பாக்கிய

சாவியாக இருக்க வேண்டும்? என்னைப் போன்ற கொடுமைக்காளானவர்கள் யாரேனும் உண்டோ? ஏ, கொடுமைமிக்க விதியே, என்னை ஏன் இப்படிக் கொஞ்சம் கூடக் கருணையில்லாமல் வதைக்கிறாய்? என் காலடியிலே பல செல்வந்தர்களையும், பிரபுக்களையும் வெளிநாட்டுக் கோமகன்களையும் கொண்டு வந்து கொட்டினாய். அவர்கள் ஒவ்வொருவரும் என்னைக் காதலித்தனர். என்னுடைய காதலை அவர்கள் ஒரு பெரிய வரமாகப் பாவித்துக் காத்திருந்தனர். நான் என் விரலை அசைக்க வேண்டியது தான் தாமதம்—அவர்களிலே உன்னதமானவன், பிறப்பிலே உயர்ந்தவன்—என்னுடைய மணாளனாக மாறி இருப்பான். ஆனால் கொடுமையே உருவான விதியே, அவர்களில் எவர் பாலும் என் மனத்தைப் பறிகொடுக்கச் செய்யவில்லை. நீ என் தேசத்து உன்னதமான வீரர்கள் எவரையும் நான் விரும்பும்படி செய்யவில்லை. ஆனால் என்னுடைய எதிரியின்பால், ஒரு அன்னியனின்பால் என் உள்ளத்தைக் கொள்ளை கொடுக்கச் செய்துவிட்டாய். ஓ! புனித மாதாவே, என்ன பாவம் செய்தேன், என்ன பாதகம் செய்தேன் என்று என்னை இவ்வளவு கடுமையாகத் தயை தாட்சண்யமின்றிச் சோதிக்கிறாய்? என் வாழ் நாளெல்லாம் செல்வச் செழிப்பிலும் இன்பத்திலும் கழிந்தன. சுவைமிக்க பண்டங்களும், மிக உயர்ந்த பானங்களும் நான் சாப்பிட்டு வளர்ந்தேன். ஆனால் அதெல்லாம் எதற்காக? எந்த முடிவிற்காக? இப்படிக் கேவலம் பிச்சைக்காரனுக்குக்கூட இந்த நாட்டில் கிடைக்காத கதியற்ற மரணத்தை அடையவா?

"என்னை இவ்வளவு பாதகமான முடிவுக்குக் கொண்டு வந்ததோடல்லாமல், யாருக்காக நான் என் உயிரை இருபது முறையேனும் கொடுக்கச் சம்மதிப்பேனோ, அவர்களை—என் பெற்றோர்களை—பயங்கரமான தொல்லைகளுக்குட்படுத்தியதும் போதாதென்று, இதற்கும் மேல், சாவதற்கு முன் இதுவரை காணாத முறையில், என்மேல் காதல் கொண்டவரைக் காணவைத்தும், நான் இதுவரை கேளாத இன்பச் சொற்களைக் கேட்கவைத்தும், என்னைச் சித்ரவதை செய்கிறாயே! அவர் பேச்சுக்களைக் கேட்டு என்

உள்ளம் சிதறி உடைய நான் இன்னும் கேவலமான, மிக மோசமான நிலையில் சாகவேண்டும் என்பது உன் எண்ணமா? ஏற்கனவே, உளம் புழுங்கிச் சாகும் என்னை இன்னமும் வருத்தி, ஏன் உன்னை மறுபடியும் தூற்றும் படி கொடுமைப் படுத்துகிறாய்? ஏ பயங்கர விதியே— புனிதத்தாயே நீ என் பாபங்களை மன்னித்துவிடு!''

அவள் மௌனமாக உட்கார்ந்தாள். அவள் முகத்தில் கொஞ்சம்கூட நம்பிக்கையின் ஒளி இன்றி, எந்தவிதமான தெம்பும் இல்லாமல் குன்றிவிட்டாள். அவளுடைய ஒவ்வொரு அங்கமும்—சோகம் ததும்பும் புருவங்கள்; கீழ் நோக்கிய கண்களிலிருந்து வடிந்த கண்ணீர் மின்னுகின்ற இளம் கன்னங்களிலே படர்ந்து உலர்ந்திருக்கும் நீர்த் திவலை; எல்லாம் இவள் உள்ளத்திலே எங்குமே இன்பம் இல்லை என்பதை எடுத்துக் காட்டின.

''இதைப் போன்ற நிலையை நான் இதுவரை கேள்விப்பட்டதே இல்லை, அதைப் போல் ஒன்றும் நடக்காது, நடக்கக்கூடாது. தெய்வலோகத்துப் பெண்களுக்கு நடப்பதைப்போல, உலகத்திலுள்ள உன்னதங்கள் அனைத்தும், உன்னைப் போன்ற எழிலரசிக்குக் கிடைக்க வேண்டியிருக்க, நீ ஏன் இப்படிச் சாகவேண்டும்? இல்லை நீ அப்படிச் சாகக்கூடாது! நான் உன்னைச் சாகவும்விட மாட்டேன்! என் பிறப்பின் மேலும், உலகத்தில் நான் விரும்பும் சகலத்தின் மீதும் ஆணையிட்டுக் கூறுகிறேன், நீ சாகக் கூடாது! ஆனால் அப்படி நடந்துவிட்டால்—நமது சக்தியோ, பிரார்த்தனையோ, அல்லது தைரியமோ—அந்தக் கொடிய விதியைத் தடுத்து நிறுத்தமுடியாமல் போய்விட்டால், நாம் இருவருமே ஒன்றாகச்சாவோம்; அதுவும் நான் முதலில் உயிரை விடுவேன். ஆம், உன்னுடைய அழகான பாதங்களிலேயே நான் முதலில் என் உயிரை விடுவேன். மரணம் மட்டுமே நம்மைப் பிரிக்கும்'' என்றான் ஆன்றி.

அவள் தன் தலையை மெள்ள அசைத்துக்கொண்டு, ''உங்களையும் ஏமாற்றிக் கொண்டு என்னையும் ஏமாற்றுகிறீர்கள். நீங்கள் என்னைக் காதலிக்க முடியாதென்று எனக்குத் தெரியும். என் உள்ளத்தை உடைக்கும் அந்த

உண்மையை நான் அறிவேன். உங்கள் கடமையையும் உங்கள் நம்பிக்கையையும் நான் அறிவேன். உங்கள் தந்தையும் தோழர்களும் உங்களை அழைக்கிறார்கள். ஆனால் நாங்களோ உங்களின் பரம வைரிகள்'' என்றாள்.

ஆன்றி, உடனே வீரத்தோடு நிமிர்ந்து நின்று தலையை ஆட்டிக் கொண்டே ''என் தந்தை, தோழர்கள், நாடு இவைகள் எல்லாம் எனக்கு ஒரு பொருட்டல்ல! அந்த எல்லைக்கு வந்துவிட்டால், அவர்களைப் பற்றி நான் தெரிந்துகொள்ள விரும்பமாட்டேன்! ஆம், விரும்ப மாட்டேன்'' என்று, மறுபடியும் அழுத்தம் திருத்தமாகப் பிறரால் செய்ய முடியாத, யாரும் இதுவரை கேள்வியே பட்டிராத காரியத்தைச் செய்து முடிப்பேன் என்று தீர்மானமாகக் கோஸக்குகள், தங்கள் புஷ்டியுள்ள, அச்சமற்ற முறையில் சொல்வது போலக் கையை வீசிக் கொண்டு கூறினான். மேலும் ''உக்ரேன்தான் எனது தேசம் என்று யார் சொன்னது? அதுதான் என் நாடு என்று எனக்கு யார் தந்தது? நாம் எதை அருமையானதென்று எண்ணுகிறோமோ, நம் உள்ளங்கள் ஆர்வத்தோடு எதை விரும்புகிறதோ அதைத்தான் நமது தேசம் என்று நான் கருதுகிறேன்—ஆமாம்—நீதான் எனது தேசம்! என் இதயத்தில் இந்தத் தேசத்தை என் உயிர் உள்ளளவும் தாங்கிக் காப்பாற்றுவேன். அதைப் பறிக்க நினைக்கும் எந்தக் கோஸக்கையும் எதிர்ப்பேன். இந்தத் தேசத்திற்கிணையாக எதை வேண்டுமாலும் நான் காணிக்கையாகக் கொடுப்பேன். உலகத்தில் உள்ள எதையும் அதற்காக விட்டுக் கொடுப்பேன். எதிர்ப்பவர்களை எல்லாம் அழித்து நாசமாக்குவேன்'' என்று கூறினான்.

வன்னச் சிலையைப் போல மாறிவிட்ட அவள் அவனுடைய கண்களையே ஊடுருவிப் பார்த்துக் கொண்டிருந்தாள். கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருக்கெடுத்தோடியது. பிறகு, இயற்கையிலேயே மிகவும் உன்னதமான அன்பு உள்ளம் கொண்ட உயர்தரப் பெண்களுக்கு உண்டாகும் இன்ப உணர்ச்சியில் தன்னை மறந்து, உயிரோடு ஒன்றிய ஆர்வம் பெருக்கெடுத்தோடும் வகையில்,

எல்லாவற்றையும் மறந்து அவனது கழுத்தைப் பிடித்து அணைத்துக் கொண்டாள். அவன் மேல் சாய்ந்து இணைந்து விட்டதே போலத் தன் வெண்மையான கரங்களால் அவனைச் சுற்றி வளைத்துக்கொண்டு, தடுக்க முடியாத பரவசத்தில் உரத்த சப்தத்துடன் விம்மி விம்மி அழுதாள்.

அந்தச் சமயத்தில் வீதியில் பலவிதமான குரல்கள் எழுந்தன. முரசுகள் ஆர்ப்பதும் ரண பேரிகைகள் முழங்குவதும் தாரைகளின் சப்தமும் கலந்து ஒலித்தன. அவனுக்கு இவையெல்லாம் எதுவும் கேட்கவில்லை. எழில் பொங்கும் அவளுடைய உதடுகளின் சுவையிலே உலகை மறந்து மிதந்து, அவளுடைய மோகத்தில் தன்னை மறந்து, அவளுடைய கேசங்கள் அவன் முகத்தை மறைக்க அவிழ்ந்து பட்டுப் போல மிருதுவாகஇருக்கும் மணம் வீசும் கேசம்அவனை அப்படியே மூழ்கடித்துவிட எதையுமே கவனிக்கும் சக்தி யற்றவனுகி விட்டான்.

இந்தச் சமயத்தில், அந்தத் தார்த்தாரிய மாது உள்ளே ஓடி வந்து "பிழைத்தோம்! பிழைத்தோம்! நமது துருப்புகள் நகரத்திற்குள் வந்து விட்டன. நமக்கு வேண்டிய கோதுமையும் தினை மாவும் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு, சில சபோரோஷியர்களையும் கைதிகளாக்கிக் கொண்டு வந்து விட்டனர்" என்று தன்னை மறந்து கூவினுள்.

ஆனுல் அந்த இருவருக்கும் இதைப் பற்றிக் கவலையே இல்லை. யாருடைய சேனைகள் நகரத்துக்குள்ளே வந்திருக்கிறது, அவர்களோடு என்ன கொண்டு வந்திருக்கிருர்கள், கைது செய்யப்பட்ட சபோரோஷியர்கள் யார் என்று தெரிந்துகொள்ள அவர்கள் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. உலகத்திலேயே காணுத இன்பத்தில் மிதந்த ஆன்றி தன் கன்னங்களைத் தொட்ட சுவை மிக்க உதடுகளை முத்தமிட்டான். அந்த உதடுகளும் சும்மா இருக்கவில்லை. அவனுடைய முத்தங்களுக்கு மறு பரிசு தந்தன. இருவரும் பரிமாறிக் கொண்ட முத்தங்களிலே, மானிடருக்கு வாழ்க்கையில் ஒரே முறை கிடைக்கும் இன்பம் கிடைக்கப் பெற்ருர்கள்.

அந்தக் கோஸக் இதோடுமுடிந்தான்! கோஸக்குகளின் வீர பரம்பரையிலிருந்து நழுவிவிட்டான்! தன் தந்தையின் கிராமங்களை—தன் ஆண்டவனின் கோவிலை—சபோரோஷியை இனிமேல் அவன் காணமுடியாது! உக்ரேனைக் காப்பாற்றக் கிளம்பிய தன் மக்களிலே,மிகவும் பராககிரமம் பொருந்திய ஒரு வீரனை உக்ரேன் இழந்துவிட்டது. தன்னை இந்த அவமானத்திற்குக் கொண்டு வந்த தன் மகனைப் பெற்ற அந்த நேரத்தைச் சபித்துக்கொண்டே ஆத்திரத்தில், தன் நரைத்த தலை முடியிலிருந்து ஒரு கொத்துத் தலை முடியைப் பறித்துக் கொள்வான் புல்பா.

# 7

சபோரோஷியர்களின் பாசறையில் ஒரே குழப்பமும், கோஷ்டமுமாக இருந்தது. முதலில் எதிரிகளின் படைகள் எப்படி நகரத்திற்குள் புகுந்து விட்டனவென்றே அவர்களுக்குப் பிடிபடவில்லை. நகரத்தின் பக்கங்களில் இருந்த வாசல்களைக் காவல் புரிந்துகொண்டிருந்த பேரேஸ்லேவ் குரனில் இருந்தவர்கள் எல்லோரும் நன்ருகக் குடித்து விட்டுப் போதையிலிருந்ததால், அவர்களில் பாதிப்பேரைக் கொன்றுவிட்டு, மீதிச் சேனைகளைக் கட்டிப்போட்டு விட்டு எதிரிகள் நகரத்திற்குள் பாய்ந்து மறைந்துவிட்டனர் என்பது தெரிய வந்தது. அவர்கள் போதை மயக்கத்திலிருந்ததால், என்ன நடக்கிறதென்பதே தெரிந்துகொள்வதற்கு முன் எல்லாம் நடந்தேறி விட்டன. இந்த அரவத்தைக் கேட்டுப் பக்கங்களிலிருந்த பிற குரன்களைச் சேர்ந்தவர்கள்—பாதி மயக்கத்திலிருந்தவர்கள்—தங்கள் ஆயுதங்களைத் தேடி எடுத்துக் கொள்வதற்குள் எதிரிகளின் படை நகரத்து வாசலைக் கடந்து உள்ளே புகுந்து கொண்டிருந்தது. முறையற்ற போக்கில் இவர்கள் அவர்களைத் துரத்த அந்த எதிரிப் படைகளின் கடைசி அணியில் இருந்தவர்கள் இவர்களைப் பார்த்துச் சுட்டுக்கொண்டே உள்ளே மறைந்து விட்டனர். கோஷிவோய் எல்லோரையும் அணிவகுத்து நிற்கச் சொன்னன். அனைவரும், ஒரு வளைவாகத் தங்கள் தலைகளைக் கவிழ்த்துக் கொண்டு, மௌனமாக நின்றதும்,

"இன்று இரவு நடந்ததைப் பார்த்தீர்களா, சகோதர கனவான்களே! குடி போதை நம்மை எந்த எல்லைக்குக் கொண்டு வந்து விட்டதென்பதைப் பார்த்தீர்களா? எதிரி நம்மை எவ்வளவு அவகேடான நிலைக்குக் கொண்டு வந்து விட்டான் பார்த்தீர்களா? என்ன மோசமான வீரர்கள் நீங்கள்! உங்கள் 'ஓட்கா'வைக் கொஞ்சம் அதிகமாக்கினால், உடனே கண் மண் தெரியாமல் குடித்து விட்டுப் போதையில் இருந்துவிடுகிறீர்கள். நம்மைப்போன்ற கிருஸ்தவ வீரர்களின், கால்சட்டையை உருவிக்கொண்டதோடு, முகத்திலும் துப்பிவிட்டுப் போகும் அளவுக்கு மயங்கிக் கிடக்கிறீர்கள்."

கோஸக்குகள் அனைவரும் தங்கள் குற்றத்தை உணர்ந்து குனிந்த தலைகளுடன் நின்றனர். நேஸாமிகுரனின் தலைவனான குகுபென்கோ மட்டும் பதில் பேச ஆரம்பித்தான்:—

"கொஞ்சம் பொறுங்கள் தந்தையே!* கோஷிவோய் எல்லாச் சேனைகளையும் கூட்டிப் பேசும்போது, குறுக்கிட்டுப் பேசுவது சட்டப்படி தவறானாலும் கூட, நிலைமை நீங்கள் சொல்வது போல் இருக்கவில்லை. ஆகவே நான் சொல்வதையும் கேளுங்கள். நம் கிருஸ்தவ சேனையைப் பற்றிக் கூறியது முற்றிலும் உண்மையாகாது. நமது கோஸக்குகள், படை வீரர்களாக அணிவகுத்து வரும் போதோ, அல்லது போர்க்களத்தில், கடுமையான கைகலப்பின்போதோ, அல்லது கடுமையான வேலைகளில் ஈடுபட்டிருக்கும்போதோ, குடித்திருந்தால், அவர்கள் மரண தண்டனை அடையத்தகுந்த குற்றவாளிகள் என்பதில் ஐயமில்லை. ஆனால் நாங்கள் செய்வதற்கு ஒன்றுமின்றிச் சோம்பித் திரிந்துகொண்டும் நகரத்தைச் சுற்றிக் கொண்டும் இருந்தோம். ஏதேனும் உபவாச நோன்போ, அல்லது கிருஸ்தவ முறைப்படி ஏதேனும் அலுவலோ நாங்கள் செய்துகொண்டிருந்தாலும் பரவாயில்லை.

---

* கோஷிவோய் என்ற அவர்களுடைய ஏகத்தலைவனைச் சமயத்தில் 'பட்கோ' என்று அழைப்பதும் வழக்கம். 'பட்கோ' என்றால் தந்தை என்று பொருள்.

ஆனால் அப்படி ஒன்றுமின்றி இருக்கும்போது குடிப்பது எப்படிக் குற்றமாகும்? அதில் ஒரு பாபமும் இல்லை. அதற்குப் பதில் நிராயுதபாணிகளாக இருக்கும்போது அடித்துவிட்டுச் சென்ற அவர்களுக்கு நமது சக்தியைக் காட்டுவோம். அவர்களை இதற்குமுன் சக்கையாக அடித்திருக்கிறோம். இப்போது அவர்களில் ஒருவரும் உயிருடன் திரும்பாதவகையில் துவம்சம் செய்வோம்'' என்றான்.

அவனுடைய பேச்சு அந்தக் கோஸக்குகளுக்குப் புத்துணர்ச்சியைத் தந்தது. தொங்கவிட்டுக் கொண்டிருந்த தங்கள் தலைகளை நிமிர்த்தினர். பலர் "குகு பென்கோ நன்றாகப் பேசினான்'' என்றும் கூறிக்கொண்டிருந்தனர்.

கோஷிவோயின் அருகிலேயே நின்றுகொண்டிருந்த புல்பா, அவனைப் பார்த்து "என்ன கோஷிவோய், குகு பென்கோ பேசுவதும் உண்மையாகத்தான் இருக்கிறது, இல்லையா? அதற்கு நீ என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான்.

"நான் என்ன சொல்வது? இவனைப்போன்ற ஒரு பிள்ளையைப் பெற 'இவன் தந்தை என் நோற்றான் கொல்!' என்றுதான் சொல்ல முடியும். குற்றம் புரிந்துவிட்டவர்களைப் பார்த்துக் கடுமையாகப் பேசுவதற்கு அவ்வளவு கெட்டிக்காரத்தனம் தேவையில்லை. ஆனால் குற்றம் புரிந்துவிட்டுத் துயரப்பட்டுக்கொண்டிருக்கும் ஒருவனைப் பார்த்து ஆறுதலாகப் பேசுவதற்குத்தான் கெட்டிக்காரத்தனம் வேண்டும். இதைப்போன்ற சொற்கள், குதிரைக்குத் தண்ணீர் காட்டித் தார்க்குச்சி மூலம் தூண்டிவிடுவது போலாகும். இவர்களை ஊக்குவித்துப் புதுத் தெம்பை அளிக்கின்றன. நானே இதைப்போன்ற தைரியமிக்க வார்த்தைகளைச் சொல்ல வேண்டுமென்றுதான் இருந்தேன். ஆனால் குகுபென்கோ என்னை முந்திக்கொண்டான்.''

"நமது கோஷிவோயும் நன்றாகவே பேசிவிட்டார்'' என்று அந்த சபோரோஷியர்கள் மத்தியிலே பலர் குரல் கொடுத்தனர்.

"நன்ருகச் சொன்ஞர்" என்றனர் சிலர்.

நரைத்தலையினரில் சிலர்கூட வெள்ளியைப் போல வெளுத்துவிட்ட தங்கள் மீசைகளைத் தடவி விட்டுக் கொண்டே மெள்ள "நன்ருகச் சொன்ஞர்!" என்று சொல்லிக்கொண்டனர்.

கோஷிவோய் மேலும் தொடர்ந்து "இன்னும் சற்றுக் கேளுங்கள் கனவான்களே, இந்தக் கோட்டையைக் கைப் பற்ற, ஜெர்மானியர்கள் செய்வதுபோலக் கோட்டைமீது ஏறுவதோ அல்லது கோட்டையைப் பழுதாக்க வெடிவைப் பதோ நமது முறைக்குப் புறம்பானது. கோட்டை எப்படி யேனும் நாசமாகிப் போகட்டும்! ஆனல் எதிரிகளின் படைகள் உள்ளே சென்ற வேகத்தைப் பார்க்கும்போது, அவர்கள் போதுமான உணவுப் பண்டங்களைக் கொண்டு போகவில்லை என்றே ஊகிக்க இடமிருக்கிறது. மேலும் நகரவாசிகளோ பசி பசி என்று துடித்துக்கொண்டிருக் கின்றனர். ஆகவே இந்த உணவு வகைகளை உடனே காலி செய்துவிடுவார்கள். அவர்களுடைய குதிரைகளுக்குப் புல்லுக்கு என்ன செய்வார்கள்—அவர்களுடைய சுவாமி களில் யாராவது தெய்வலோகத்திலிருந்து புல்லைக் கொட் டினுலொழிய அவர்களுக்கு வேறு வழியில்லை—அவர்க ளுடைய பாதிரிகள் வாயில் வந்ததைச் சொல்லிக்கொண் டிருப்பார்கள். ஆகவே இவைகளை எல்லாம் சீர்தூக்கிப் பார்க்கும்போது அவர்கள் எதற்காகவேனும் நகரத்திற்கு வெளியே வந்துதான் தீரவேண்டும். ஆகவே, உங்களை மூன்று பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு நகரத்திற்குப் போகும் மூன்று பாதைகளையும் வளைத்துக்கொண்டு அதன் மூன்று வாசல்கள் முன்னேபோய் நில்லுங்கள். மூல வாசல் அருகே ஐந்து குரன்களும், மற்ற இரு வாசல்கள் முன்னே, ஒவ்வொன்றிற்கும் மூன்று குரன்கள் வீதமாகப் போய்க் காவலிருங்கள். டியாட்கிவ், கோர்சன் ஆகிய இரண்டு குரன்களும், தாக்குவதற்காகப் பதுங்கி இருக்கவேண்டும். கர்னல் புல்பாவும் தன் படைகளுடன் தாக்குவதற்குத் தயாராகப் பதுங்கி இருக்கவேண்டும். டிடரேவ்கா டிம்மோஷேவ்கா ஆகிய இரண்டு குரன்களும், பிரத்தியேக உபயோகத்திற்காக ஒதுக்கி வைக்கப்படும்.

இவை இரண்டும் நமது சரக்கு வண்டிகளின் வலது பக்கம் தயாராகத் தங்கி இருக்கவேண்டும். அதன் இடது பக்கமாகச் சேசர்பினேவ் குரனும் மேல் ஸ்டபிலிகிவ் குரனும் தங்கி இருக்கவேண்டும். இது போக, நம்மவர்களில் யாருக்குக் கூர்மையான நாக்கும், வம்புக்கிழுக்கும் கெட்டிக்காரத்தனமும் அதிகமுண்டோ அவர்கள், நம் எதிரிகளைத் தூண்டிவிட்டு, ரோஷத்தை உண்டாக்குங்கள். இந்தப் போலந்துக்காரர்களுக்குத் தலையில் ஒன்றும் கிடையாது. ஆகவே உங்கள் கேலிச் சொற்களையும் கிண்டல்களையும் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள். ஆகவே ஆத்திரத்துடன் வாசல்களைத் திறந்துகொண்டு வெளியே வருவார்கள். குரன்களின் தலைவர்கள், தங்கள் குரன்களின் வீரர்கள் சரியாக இருக்கிறார்களா என்று பார்த்துக்கொள்ள வேண்டும். எங்கெந்த குரன்களில் வீரர்கள் குறைவாக இருக்கிறார்களோ அந்த இடங்களில், பேரிஸ்லேவ் குரனிலிருந்து வீரர்களை எடுத்துக் கொள்ளலாம். எல்லாவற்றையும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். எல்லோருக்கும் போதை தீர, ஒரு கோப்பை ஓட்காவும் ஒரு துண்டு ரொட்டியும் கொடுங்கள். ஆனால் நேற்று நீங்கள் சாப்பிட்ட உணவே இன்னும் உங்கள் வயிற்றில் இருக்கும். நேற்று நீங்கள் தின்றதைப் பார்த்தால், இந்நேரம் உங்கள் வயிறு வெடிக்காம விருப்பதைக் கண்டு நான் உள்ளபடியே ஆச்சரியப்படுகிறேன். இன்னும் மற்றொரு உத்திரவு. மதுக்கடை வைத்திருக்கும் எந்த யூதனாவது ஒருசிறு கோப்பை அளவு மதுவை எந்தக் கோஸக்குக்காவது விற்பதை நான் கண்டால், அவன் நெற்றியிலே ஆணி அறைந்து, அவனைத் தலைகீழாகத் தூக்கிவிட்டு விடுவேன். சரி இப்போது நம் வேலையைத் துவக்குவோம்.''

கோஷிவோயின் உத்திரவுகளைக் கேட்டுக்கொண்ட கோஸக்குகள், தங்கள் தலைகளை இடுப்புவரை தாழ்த்தி வணங்கிவிட்டுத் தங்கள் தொப்பிகளைத் தலையில் போடாமல் தங்களுடைய குரன்களுக்குச் சென்றனர். வெகுதூரம் சென்ற பிறகே தங்கள் தொப்பிகளை மாட்டிக் கொண்டனர். வீரர்கள் தங்கள் ஆயுதங்களைத் தயார்

செய்ய ஆரம்பித்தனர். வாட்களையும் அகண்ட கத்திகளையும் சோதனை செய்து கொண்டனர். வெடி மருந்து மூட்டைகளை அவிழ்த்து மருந்துகளை நிரப்பிக் கொண்டனர். தங்கள் வண்டிகளைத் திருப்பித் தங்களுக்குச் சாதகமாக நிறுத்திக் கொண்டனர். குதிரைகளைத் தேர்ந் தெடுத்தனர்.

புல்பா தன் படைகளுடன் தான் தங்கி இருக்கும் கூடாரத்திற்குச் செல்லும் வழியெல்லாம் ஆன்றி என்ன வானுன் என்று சிந்தித்துக்கொண்டே சென்றுன். ஒரு வேளை கைதியாக்கப்பட்டவர்களோடு விழிப்பதற்கு முன் இவனையும் கட்டி இழுத்துக்கொண்டு போய்விட்டார்களோ? இல்லை, ஆன்றியைப் போன்ற ஒருவனை யாரும் உயிரோடு கைது செய்ய முடியாது. ஆனுல் இறந்து விட்ட கோஸக்குகள் கூட்டத்திலே கூட அவனைக் காண வில்லையே! இந்தச் சிந்தனையிலேயே மூழ்கிவிட்ட புல்பா தன் படைகளுடன் நடந்துகொண்டே இருந்தான். அவனை யாரோ கூப்பிடுவது கூட அவனுக்குக் கேட்கவில்லை. வெகு நேரம் கழித்துத் தன்னை யாரோ கூப்பிடுவதை உணர்ந்த புல்பா சுயநினைவு வந்தவனுய்,

''யார் என்னைக் கூப்பிடுவது?'' என்று திரும்பிக் கேட்டான்.

யான்கல் என்ற அந்த யூதன் அவன் முன் வந்து நின்றுன்.

''கர்னல் சார், கர்னல் சார்'' என்று அவசர அவசரமாக ஓடிவந்தான். ஓடிவந்து அவன் பேசிய முறையிலிருந்து ஏதோ மிகவும் முக்கியமான ரகசியம் ஒன்றைச் சொல்லப்போவது போல இருந்தது. மறுபடியும், அதே அவசரக் குரலில்,

''கர்னல் சார், நான் நகரத்திற்குள் போய் வந்தேன்'' என்று கூறினுன்.

புல்பாவுக்கு ஒன்றும் பிடிபடவில்லை. இவன் எப்படி அந்த நகரத்திற்குள்ளே போகவும் வெளியே வரவும் முடிந்தது என்று அவனையே பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு,

"உன்னை அங்கே எந்தச் சைத்தான் அழைத்துச் சென்றது?"

"இதோ ஒரு நிமிஷத்தில் சொல்லிவிடுகிறேன். காலையில் நமது கோஸக்குகள் சுடுவதைக் கேட்டு விழித்தெழுந்த நான், அது இன்னதென்று அறிவதற்காக, என் சட்டையை எடுத்துக்கொண்டு அதை மாட்டிக் கொள்ளவும் நேரமின்றி ஓடிவந்தேன். அந்தச் சமயத்தில், எதிரிகளின் கடைசிப் படைகள் நகரத்தின் வாசலைக் கடந்து உள்ளே சென்றுகொண்டிருந்தன. அங்கேயே என் சட்டையை மாட்டிக்கொண்டு வாசலைக் கடந்தபோது, எனக்கு மிகவும் தெரிந்த ஒரு கனவானைக் கண்டேன். அவர் பெயர் கெலெண்டோவிக்ஸ். அவர் ஒரு துவஜதாரி. கடந்த மூன்று வருஷங்களாக எனக்குத் தரவேண்டிய நூறு *செர்வோன்ட்ஸை கொடுக்காமலிருக்கிறார். அதைக் கேட்கும் சாக்கில் நானும் உள்ளே புகுந்துவிட்டேன்" என்றான்.

"என்ன? கடன் கேட்பதற்காக நகரத்திற்குள் நுழைந்தாயா? உன்னை அங்கேயே நாயைப் போல அடித்துத் தூக்கிலிடவில்லையா அவன்?" என்று கேட்டான் புல்பா.

"நன்றாய்ச் சொன்னீர்கள், என்னைத் தூக்கிலிடும்படி அப்போதே அவன் உத்திரவு கொடுத்துவிட்டான். அவனுடைய ஆட்களும் என்னைப் பிடித்து என் கழுத்தில் தூக்குக்கயிற்றையும் மாட்டிவிட்டனர். ஆனால் நான் உடனே அந்தக் கனவானிடம் மண்டியிட்டு, என்னை மன்னித்துவிடும்படியும், அவர் தரவேண்டிய கடனை அவர் எப்போது தந்தாலும் தரலாம் என்றும், நகரத்தில் இருக்கின்ற மற்ற கனவான்களிடம் என் கடனை வசூல் செய்துகொள்ள மட்டும் என்னை அனுமதிக்கும்படியும் கேட்டுக்கொண்டேன். உங்களிடம் சொல்வதற்கென்ன, அவனிடம் இப்போது ஒரு சல்லிக்காசு கூடக் கிடையாது. பல கிராமங்கள், மாளிகைகள், நான்கு கோட்டைகள், ஸ்கோலோவ் வரை பரந்திருக்கும் திறந்த வெளிகளும்

---

* அந்தப் பகுதிகளில் வழங்கிய நாணயத்தின் பெயர்.

அவனுக்குச் சொந்தமா யிருந்தும் கூட, ஒரு கோஸக்கைப் போல வெறும் பையோடுள்ளவன்தான். இப்போது கூட பிரஸ்லா யூதர்கள் அவனுக்குச் சகாயம் செய்யாமலிருந் தால், இந்தப் போருக்கு வருவதற்குக் கூட ஒன்றுமில்லா மல் திகைத்திருப்பான். அதனுலேயே அவன் அரச சபைக்குக் கூடப் போவதில்லே.''

''சரி, நீ நகரத்தில் என்னதான் செய்தாய்? நம் ஆட் களில் யாரையேனும் அங்கே பார்த்தாயா?''

''ஓ, பார்த்தேனே! நம் ஆட்கள் அங்கே நிறைய இருக்கிருர்களே. ஐஸக், ரஹிம், சாமுவேல், ஐவலோ மற்றும் யூத ஒப்பந்தக்காரர்கள் பலர்......''

''அந்த நாய்களேச் சைத்தான் கொண்டுபோகட்டும். உன்னுடைய யூத மந்தைகளேப் பற்றி எனக்கென்ன கவலே? நான் எங்கள் சபோரோஷியர்களேப் பற்றிக் கேட் கிறேன்'' என்று ஆத்திரத்தோடு கத்தினுன் புல்பா.

''நான் சபோரோஷியர்கள் எவரையும் பார்க்க வில்லே. நம் பிரபு ஆன்றியை மட்டும்தான் பார்த்தேன்.''

''என்ன ஆன்றியைப் பார்த்தாயா? உண்மையாகவா? யூதா, அவன் எங்கே இருக்கிருன்? எங்கேனும் குழி யிலேயா? இருட்டறையிலேயா? அவமானப்படுத்திக் கட்டி வைத்திருக்கிருர்களா? எப்படி இருக்கிருன் சொல்'' என்று ஆர்வத்தோடு கேட்டான் புல்பா.

''நம் பிரபு ஆன்றியை யார் அவ்வளவு தைரியத் துடன் கட்டிப்போட முடியும்? அவர் இப்போது எவ் வளவு பெரிய கனவானுகிவிட்டார்! கடவுள் சாட்சியாகச் சொல்லுகிறேன். என்னுலேயே அவரை அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லே. அவருடைய தோள்பட்டை கள் தங்கம்; கைப்பட்டை அலங்கார அணிகளெல் லாம் தங்கம்; மார்பில் மாட்டியிருக்கும் அணிகளும் தங்கம்; அவருடைய தலேக்கவசம் கூட ஒரே தங்கம்; எங்கு பார்த்தாலும் ஒரே தங்கமயம்தான், போங்கள்! வஸந்தகாலத்தில் பறவைகள் ஆர்ப்ப, அவைகளின் இசை வெள்ளத்திலே மிதக்கும் சோலே யெல்லாம் தங்கமய

மாக்கும் கதிரவனின் ஒளிபோல அவர் தங்கமாகவே ஜொலிக்கிறார். அந்த வேவோட் தனது உன்னதமான குதிரையையும் கொடுத்திருக்கிறார். அது ஒன்றே இரு நூறு செர்வோன்ட்ஸ் பெறும்.''

புல்பா இதைக் கேட்டுக் கல்லானான்.

''அவன் ஏன் இந்த அன்னியப் போர் உடைகளை அணிந்துகொண்டான்?''

''ஏனென்றால், அது மிகவும் அழகாய் இருக்கிறது. மேலும் அவர் குதிரை மேல் ஏறிக் கொண்டு சுற்றி, மற்றவர்களுக்குத் தனக்குத் தெரிந்ததைச் சொல்லிக் கொடுக்கிறார். அவர்கள் கற்றுத் தருவதையும் தெரிந்து கொள்ளுகிறார். மொத்தத்தில் பிற போலந்துப் பணக்காரப் பிரபுக்களைப் போல நடந்து கொள்ளுகிறார்.''

''யார் அவனை இப்படி யெல்லாம் செய்யும்படி வற்புறுத்துகிறார்கள்?''

''அவரை யாரும் வற்புறுத்துவதாக நான் சொல்ல மாட்டேன். அவர் தன்னிச்சையாகவே அவர்கள் பக்கம் போய்ச் சேர்ந்து விட்டார் என்பது பிரபுவுக்குத் தெரியாதோ?''

''யார் அந்தப் பக்கம் போய்ச் சேர்ந்தது?''

''ஏன், நம் பிரபு ஆன்றிதான்.''

''அவனாகப் போனான்?''

''ஆமாம். இப்போது அவர்களில் ஒருவராக மாறி விட்டார்.''

''பொய்யா சொல்கிறாய், பன்றியே!''

''நான் எப்படிப் பொய் சொல்லமுடியும்? அப்படிப் பொய் சொல்வதற்கு நான் என்ன முட்டாளா? அப்படிச் செய்வதென்றால், என் தலையைப் பணயம் வைத்தல்லவோ செய்ய வேண்டும்? பிரபுக்களிடம் பொய் சொல்லும் யூதன், நாயைப்போலச் சுட்டு வீழ்த்தப்படுவான் என்பது எனக்குத் தெரியாதா என்ன?''

"அப்படி யென்றால், அவன் தன் தேசத்தையும், மதத்தையும் விற்றுவிட்டான் என்று சொல்லு!"

"அவர் எதையும் விற்று விட்டதாக நான் சொல்ல மாட்டேன். அவர்கள் பக்கம் சேர்ந்து விட்டார் என்று தான் கூறுகிறேன்."

"பாழாய்ப் போன யூதனே, நீ பொய் சொல்லுகிறாய். இதைப் போன்ற செய்கை, எங்கள் கிருஸ்தவ பூமியில் என்றுமே நடந்ததில்லை. பதிதா, நீ பொய்தான் சொல்கிறாய்."

"நான் சொன்னது பொய்யாக இருந்தால், என் வீட்டின் வாயிலில் புல் முளைக்கட்டும்! நான் சொல்வது பொய்யாக இருந்தால் என் தந்தை, என் தாய், என் மாமனார், என் பாட்டனார், என் தாயின் தந்தை இவர்களின் சவக்குழி மீது எல்லோரும் காறி உமிழட்டும்! பிரபு அவர்கள் விரும்பினால் அவர் ஏன் அங்கே சென்றார் என்ற காரணத்தையும் நான் சொல்கிறேன்."

"ஏன்?"

"அந்த வேவோடுக்கு ஒரு அழகான பெண் இருக்கிறாள்—ஆண்டவனே! அழகென்றால் எவ்வளவு அழகு!"

இந்த இடத்தில் அந்த யூதன் தன்னால் ஆனமட்டும் தன் முகத்தில் அழகைப் பிரதிபலிக்க முயற்சி செய்தான். தன் கரங்களை விரித்துக் கொண்டான்; கண்களைச் சொருகிச் சாய்த்துப் பார்த்தான்; ஏதோ சுவையான உணவை அருந்தியவன் போலத் தன் வாயை மாற்றிக் கொண்டு காட்டினான்.

"சரி அதனால் என்ன?"

"அவர் இதெல்லாம் செய்ததற்கும், அவர்கள் பக்கம் சென்றதற்கும் அவள்தான் காரணம். காதல் கொண்டவன், செருப்பின் அடித் தோலைப் போன்றவன். தண்ணீரில் ஊற வைத்துவிட்டு எப்படியேனும் அதை வளைக்கலாம்."

புல்பா சிந்தனையில் ஆழ்ந்து விட்டான்.. பலவீனமான பெண்களின் சக்தியே மகத்தானது. எவ்வளவோ

பலசாலிகளை அவர்கள் வீழ்த்தி இருக்கின்றனர் என்பதை அவன் நினைத்துப் பார்த்தான். பெண்களின் அழகுக் கவர்ச்சியிலே ஆன்றி சுலபமாக வீழ்ந்துவிடக் கூடியவன் என்பதும் அவனுக்குத் தெரியும். அங்கேயே வேரடித் தார்ப்போல புல்பா நீண்ட நேரம் நின்று விட்டான்.

மறுபடியும் அந்த யூதன் "இன்னும் முழுவதையும் சொல்லுகிறேன் கேளுங்கள் பிரபு. நான் அந்தச் சப்தம் கேட்டு நகரத்து வாசலை நோக்கி ஓடும்போது ஒரு முத்துச் சரத்தை எடுத்துக் கொண்டு போனேன். அந்த நகரத்தில் பல அழகிய பெண்களும், கனவான்களும் இருப்பது எனக்குத் தெரியும். எங்கே அழகிகளும் கனவான்களும் இருக்கிறார்களோ, அங்கு நிச்சயம் முத்துக்களைச் சுலபமாக விற்றுவிடலாம் என்பது எனக்குத் தெரியும். அவர்கள் வயிற்றுச் சோற்றுக்கு இல்லாமலிருந்தாலும் முத்துக்களை மட்டும் வாங்கிக் கொள்வார்கள். அந்த துவஜதாரி என்னை விடுவித்ததும் நான் நேரே அந்த வேவோட் வீட்டுக்கு முத்துக்களை விற்கலாம் என்று ஓடினேன். அங்கு ஒரு தார்த்தாரிய தாதியின் மூலம் இவைகளை எல்லாம் அறிந்தேன். இந்தச் சபோரோஷியர்களை விரட்டிய மறு நிமிஷமே திருமணம் நடக்குமாம். நம் பிரபு ஆன்றியே சபோரோஷியர்களை விரட்டிவிடுவதாகச் சத்தியம் செய்திருக்கிறார்!—"

"அந்தப் பேயின் பிள்ளையை அங்கேயே நீ கொல்லாமல் வந்துவிட்டாய்?" என்று ஆத்திரத்தோடு கர்ஜித்தான் புல்பா.

"அவரை ஏன் கொல்ல வேண்டும்? அவர் தன்னிச்சையாக அவர்களோடு சேர்ந்து கொண்டார். இதில் என்ன தவறு? அது அவருக்குப் பிடித்திருக்கிறது, ஆகவே அங்கு போய் விட்டார்!"

"அவனை நேருக்கு நேராக நீ பார்த்தாயா?"

"ஆண்டவன் சாட்சியாக நான் பார்த்தேன். ஓ! என்ன பிரமாதமான அழகுடன் அவர் ஜொலிக்கிறார். அங்கிருப்பவர்கள் எல்லோரையும்விட அவர்தான் பிரமாத

மாக விளங்குகிறார். அவர் என்னை உடனே கண்டு கொண்டார். ஆண்டவன் அவரை நன்றாக வைத்துக் கொண்டிருக்கட்டும்! நான் அவர்கள் அருகே சென்றதும் என்ன சொன்னார் தெரியுமா?''

''அவன் என்ன சொன்னான்?''

''அவர் சொன்னதாவது, இல்லை முதலில் என்னை அழைத்தார், அதன் பிறகு 'யான்கல்,' என்றார், 'ஆன்றிப் பிரபு' என்றேன். 'யான்கல், என் தந்தையிடமும், என் சகோதரனிடமும், எல்லா சபோரோஷியர்களிடமும் எல்லா கோஸக்குகளிடமும் சொல்: என் தந்தை இனிமேல் எனக்குத் தந்தை அல்ல, என் சகோதரன் இனிமேல் எனக்குச் சகோதரன் அல்ல, என் தோழர்கள் இனிமேல் என்னுடையவர்கள் அல்ல. அவர்கள் அனைவரையும் நான் எதிர்த்துப் போராடப் போகிறேன்! ஒவ்வொருவரையும் நான் எதிர்த்துத் தாக்குவேன்' '' என்றார்.

'' நீ மறுபடியும் பொய் சொல்கிறாய். பேய்த்தனமான யூதப்பயலே...''என்று கோபத்தோடு கத்தினான் புல்பா. பொங்கிவரும் ஆத்திரத்தோடு மறுபடியும் புல்பா அவனைப் பார்த்து, ''நாயே, நீ பொய்தான் சொல்கிறாய், நீங்கள் ஏசுவையே சிலுவையில் அறைந்து கொன்றீர்கள். ஆண்டவனின் சாபத்திற்காளானவர்கள்! சாத்தானே, உன்னைக் கொன்று விடுகிறேன். ஓடிப்போ, இல்லாவிட்டால் இங்கேயே இரு, உன்னைக் கொன்று விடுகிறேன்'' என்று சொல்லிக்கொண்டே, தன் கத்தியை உருவினான் புல்பா.

இதைக்கண்டு அலறிப்போன அந்த யூதன், தன் மெலிந்த கால்களுடன் எவ்வளவு தூரம் ஓட முடியுமோ அவ்வளவு தூரம் திரும்பிப் பார்க்காமலேயே, கோஸக்குகளின் பாசறையையும் கடந்து திறந்த வெளியிலே ஓடினான். புல்பா அனாவசியமாய் அவன்மேல் தன் ஆத்திரத்தைக் காட்டுவானேன் என்று நிதானித்துத் துரத்தாமலிருந்தும் அவன் ஓடியே போய்விட்டான்.

முந்தின இரவு நடந்த நிகழ்ச்சிகள் அவன் நினைவுக்கு வந்தன. யாரோ ஒரு பெண்ணுடன் ஆன்றி தங்கள்

பாசறை வழியாகப் போவதைப் பார்த்தது நினைவுக்கு வந்தது. தன் மைந்தனே இவ்வளவு அவகேடான வேலை யில் ஈடுபட்டிருப்பான் என்பதை அவனால் இன்னும் நம்ப முடியாமலிருந்தாலும், அவனை அறியாமலேயே அவன் சிரம் தாழ்ந்து விட்டது.

அதன்பிறகு, தன் படைகளுடன், இன்னும்கோஸக்கு களின் நீக்கிரையாகாமலிருந்த ஒரே காட்டிற்குள்சென்று மறைந்து கொண்டான். இதன் நடுவில் சபோரோஷியர் களில் சிலர் அந்த நகரத்திற்குச் செல்லும் மூன்று வாசல் கள் அருகே குதிரைகள் மீதும், நடந்தும் சென்றனர். ஒவ்வொரு குரனுக எல்லா குரன்களும் அணிவகுத்துச் சென்றன. உமண், போபோவிக், கனிவ், ஸ்டபிலிகிவ், நெஸமி, குர்கஸ். டிடரேவ்கா, டிமோசேவ்கா என்ற எல்லா குரன்களும் நடந்துகொண்டிருந்தன. பேரிஸ்லேவ் குரன் மட்டும் இல்லை. அதிலிருந்த கோஸக்குகள், தங்களை மறந்து குடித்துவிட்டு மது வெள்ளத்திலேயே தங்கள் நற்பெயரை மூழ்கடித்து விட்டனரே. அதிலிருந்த சிலர் எதிரிகளின் கரங்களிலே கட்டுண்ட நிலையில் விழித் தெழுந்தனர்; சிலர் விழித்தெழாமலேயே, ஆழ்ந்த தூக் கத்தில் இருக்கும்போதே ஆழக் குழிகளில் சென்று மறைந்து விட்டனர்; அந்தக் குரனின் தலைவனுன கிளிப் கூடத் தன் கால்சட்டைகளை இழந்த நிலையில் போலந்துச் சிறையிலே விழித்தெழுந்தான்.

இவர்களுடைய போக்குவரத்தின் சப்தம் நகரத்து வாசிகளுக்குக் கேட்டது. எல்லோரும் கோட்டையின் மீது வந்து நின்றனர். கோஸக்குகளுக்கு ஒரு விநோத மான காட்சி தெரிந்தது. அழகிலே ஒருவரை ஒருவர் மிஞ்சும் வண்ணம் போலந்துக் கனவான்கள் அந்தக் கோட்டைச் சுவர்மீது நின்றனர். பித்தளையாலான தலைக் கவசங்களின் உச்சியில், அன்னத்தின் சிறகை வைத்திருந் தனர். அங்கிருந்து பார்ப்பதற்குப் பல சூரியன்கள்போலத் தெரிந்தன. சிலர் சிறிய, இலேசான, நீலநிறத் தொப்பி களை ஒரு பக்கமாகச் சாய்த்து அணிந்திருந்தனர். அவர் களுடைய ராணுவக் கோட்டின் இரண்டு தோள்ப் புறங் களிலும் பலவிதமான வேலைப்பாடுகள் நிறைந்து தங்க

நிற நூல் பின்னல்களுடன் நேர்த்தியாகத் தொங்கின. பல நேர்த்தியான வேலைப்பாடுகள் நிறைந்த கைப்பிடியுடன் கூடிய வாட்களும் கைத்துப்பாக்கிகளும் வைத்திருந்தனர். இதைத் தவிர, இன்னும் பலவிதமான படாடோபமான அணிகளுக்கு இந்தக் கனவான்கள் தங்களுடைய அரிய செல்வத்தைச் செலவழித்திருக்க வேண்டும். எல்லோருக்கும் முன்னால் நின்ற அந்த புட்சாக் கர்னல் தன்னுடைய சிவப்பு நிறத் தொப்பியில் தங்கநிற சரிகை வைத்துத் தைத்திருந்தான். அவன் முகத்தில் இறுமாப்புடன் கலந்த கர்வம் தெளிவாகத் தெரிந்தது. அவன் மற்றவர்களனைவரைக் காட்டிலும் மிகப்பருத்துக் காணப்பட்டான். அவனுடைய விலை உயர்ந்த கோட்டு அவனுக்குச் சிறியதாக இருக்கவே அவனுடைய பருத்த அங்கங்கள் துருத்திக் கொண்டு வெளியே தெரிந்தன. அந்தக் கோட்டையின் பக்க வாசலின் மதிற்சுவரின் மேல் மற்றொரு கர்னல் நின்றிருந்தான். காய்ந்துபோன உடலும் சிறிய ஆகிருதியும் கொண்ட அவனுடைய புதர்போன்று அடர்த்தியாக வளர்ந்திருந்த புருவங்களுக்குக் கீழே கண்கள் மட்டும் எல்லாவற்றையும் துருவி நுணுக்கமாகப் பார்வையிட்டுக் கொண்டிருந்தன. அவன் சுறுசுறுப்புடன் உத்திரவுகளைப் பிறப்பித்துக் கொண்டு கைகளை இப்பக்கமும் அப்பக்கமும் உற்சாகத்துடன் வீசிக் கொண்டிருந்தான். சிறிய ஆகிருதியாக இருந்தாலும் போர்க்கலையில் மிகுந்த அனுபவம் உள்ளவன் என்பது அவன்செய்கைகளிலிருந்து தெரியவந்தது. அவனுக்கு மிக அருகாமையிலேயே நீண்டு வளர்ந்த ஒல்லியான துவஜதாரி ஒருவன் நின்றிருந்தான். செழித்து வளர்ந்திருந்த மீசையுடன் கூடிய அவன் முகத்தில் பலவித வர்ணபேதங்கள் போட்டிபோட்டுக் கொண்டிருந்தன—அளவுக்கு மிஞ்சிய குடிப்பழக்கமும், கேளிக்கைகளில் ஆர்வம் உள்ளவர்களுக்கு இருக்கும் நிச்சயமான அடையாளங்கள் அவைகள்—இன்னும் பல பிரபுக்களும் அங்கு குழுமி இருந்தனர். அவர்களும் தங்கள் சொத்துக்களையும், தங்கள் பரம்பரை வழி வந்த கோட்டைகளில் இருந்தவற்றையும் யூதர்களிடம் அடகு வைத்துவிட்டு ஆடையணிகளுடன் வீற்றிருந்தனர். சிலர் அரசனின் பொக்கிஷத்திலிருந்தே இந்த டம்ப உடை

களைப் பெற்றிருந்தனர். இவர்களில் பலரைச் சட்டசபை அங்கத்தினர்கள், பெரிய விருந்துகளுக்கு அழைத்துச் செல்வார்கள். இந்தப் புல்லுருவிகள் அங்கு விருந்துண்டு விட்டு வரும்போது, அங்கிருக்கும் வெள்ளிக் கோப்பை களை மேஜை மீதிருந்து களவாடிக் கொள்பவர்கள். தங்களை அழைத்து வந்தவர்களை வண்டியிலேற்றிக் கொண்டு அவர்களுக்காக வண்டி ஓட்டுபவர்கள். அங் கிருப்பவர்களில் பலரகத்தோர் உண்டு. சிலருக்குக் கொஞ்சம் மது வாங்கக்கூட அவர்களுடைய சொத்து உதவாது. ஆனால், யுத்தத்திற்கு மட்டும் ஆடை அணிக ளுடன் வந்து விடுவார்கள்.

கோஸக்குகளின் அணி வகுப்பு அந்தச் சுவருக்கு முன்னே அமைதியாக நின்றிருந்தது. அவர்களுடைய ஆடைகளில் ஒரு துளி தங்கம் கூட எங்கும் காண முடியாது. ஒரு சிலரிடம் இருந்த வாட்களின் கைப்பிடி களிலும், கைத்துப்பாக்கிகளிலும் தங்கம் சிறிதே ஒளி வீசிக் கொண்டிருந்தன. கோஸக்குகள் விலை உயர்ந்த ராணுவ உடைகளை விரும்புவதில்லை. அவர்க ளுடைய ஆடைகள் மிகச் சாதாரணமாக இருந்தன. சிவப்பு உச்சியுடன் கருப்பு ஆட்டுத்தோலாலான தொப்பி கள் அந்த வெளி யெங்கும் நிறைந் திருந்தன.

அந்தச் சபேரரோஷியர் அணியிலிருந்து இரண்டு கோஸக்குகள் பிரிந்து முன்னே சென்றனர். அதில் ஒருவன் இளைஞன்; மற்றொருவன் கொஞ்சம் வயதான வன். இருவருமே கூர்மையான நாக்கும், சுடுசொல் வீசும் திறமையும் மிக்கவர். அதேபோல் செயல் புரிவதிலும் திற மைசாலிகள்—ஒருவன் ஒக்ரிம்நாஸ், மற்றவன் கோலோ கோபிடன்கோ. இவர்களைத், தொடர்ந்து டிமிட்போபோ விக் சென்றான். இவன் செட்சில் பல காலமாக வாழ்பவன். ஒரு சமயம் அடிரியனோபிலில் யுத்தத்திற்குச் சென்று, பயங்கரமான பல விபத்துக்களுக்குள்ளாகி ஏறக்குறையத் தீயிலே வெந்து அவன் உடலும் மீசைகளும் தீய்ந்து தீப் புண்களுடன் மறுபடியும் உயிரோடு வந்து சேர்ந் தான். வாழ்க்கையின் பல இன்னல்களுக்கு ஈடு கொடுத் தவன். இப்போது அவனுடைய உடல் பருத்துப் பழைய

தீப்புண்கள் ஆறிவிடத் தலையிலும் முகத்திலும் புதிய ரோமம் வளர்த்துக் கொண்டான். அவனும் கேலிச் சொற்களை வாரி வீசுவதிலே சமர்த்தன்.

"எல்லோரும் சிவப்பு ஆடைகள் அணிந்திருந்தாலும் அவர்கள் உள்ளம் என்னமோ வெளுத்துப் போனவர்கள் தான்."

இதைக் கேட்ட அந்தப் பருத்த கர்னல் ஆத்திரத்துடன் "உங்களுக்குக் காட்டுகிறேன் இருங்கள். உங்களைச் சங்கிலிகளால் பிணித்து விடுகிறேன். அடிமைகளே, உங்கள் குதிரைகளையும் வாட்களையும் மரியாதையாகக் கொடுத்து விடுங்கள். உங்களுடைய தோழர்களை நான் எப்படிக் கட்டிக் கொண்டு வந்தேன் தெரியுமா? டேய் யாரங்கே, அந்தச் சபோரோஷியர்களை இங்கு கொண்டு வந்து இவர்களுக்குக் காட்டுங்கள்" என்றான்.

கட்டுண்ட பல சபோரோஷியர்களை அந்தச் சுவர்மீது கொண்டுவந்து நிறுத்தினார்கள். எல்லோருக்கும் முன்னே அவர்களுடைய குரனின் தலைவனை கிளிப், கால் சட்டையும் மேலணிகளும் ஒன்றுமில்லாமல், போதையிலிருந்த நிலையிலேயே கைது செய்யப்பட்ட காட்சியோடு நின்றிருந்தான். தன் தோழர்கள் முன்னே நிர்வாண கோலத்தோடு கொண்டுவரப் பட்டதை நினைத்தும், தூங்கும் போது நாயைப் போலக் கைது செய்யப் பட்டதை நினைத்தும் அவமானத்தால் குன்றிப் போய்க் குனிந்த தலையுடன் நின்றிருந்தான். அவ்வளவு சீக்கிரம் அவனுடைய தலைமுடி நரைத்துவிட்டது.

"சந்தோஷமாக இரு கிளிப், நாங்கள் உன்னை விடுவிக்கிறோம்" என்று கீழே இருந்த கோஸக்குகள் கத்தினார்கள்.

பிரோட்டி என்ற குரனின் தலைவன் "சந்தோஷமாக இரு தோழா! துன்பங்கள் ஏற்படுவது சகஜம். நீ நிர்வாணமாகப் பிடிபட்டது உன்னுடைய குற்றமல்ல. ஆனால் உனக்கு ஆடைகள்கூடக் கொடுக்காமல் இப்படி அவமானப் படுத்தினதற்கு அவர்கள்தான் வெட்கப்பட வேண்டும்" என்றான்.

கோலோபிடன்கோ அந்தச் சுவரின்மீதிருந்தவர்களைப் பார்த்து "தூங்குகிறவர்களுடன் போர் செய்யும் பராக்கிரம சேனைதான் உங்களுடையது" என்றான்.

"கொஞ்சம் பொறு உன் தலையை வெட்டி விடுகிறோம்" என்றனர்.

போபோவிக் "அவர்கள் அப்படியே செய்வதைப் பார்க்கப் போகிறேன்" என்றான். பிறகு தன் குதிரை மேலிருந்தே பின்புறம் திரும்பித் தன் கோஸக்குகளைப் பார்த்து "அந்தப் போலந்துக்காரர்கள் நிஜமாய்த்தான் பேசுகிறார்கள். அந்தப் பானை வயிற்றானை முன்னே தள்ளி விட்டு அவர்கள் போராட வந்தால், அவர்களுக்கு நல்ல தற்காப்பு உண்டாகி விடுமல்லவா?" என்றான்.

போபோவிக் நிச்சயமாக ஏதோ கிண்டல் செய்யப் போகிறான் என்பதை அறிந்த அந்தக் கோஸக்குகள் "அப்படி என்ன தற்காப்பு இருக்கும் என்று நீ நினைக்கிறாய்?" என்று கேட்டனர்.

"ஏனென்றால் அவர்களுடைய சகல வீரர்களும் இவனுக்குப் பின்னே ஒளிந்து கொண்டுவிட்டால், உங்களுடைய ஈட்டிகளை வைத்துக்கொண்டு தாக்க ஒருவரையும் இவனுடைய தொந்திக்குபின்னே தெரிந்து கொள்ள முடியாதே" என்றான்.

எல்லா கோஸக்குகளும் இதைக் கேட்டுச் சிரித்தனர். பலர் தங்கள் தலைகளை ஆட்டிக்கொண்டு "போபோவிக் கேலி செய்வதில் நிபுணன். அவனுடைய வார்த்தைகள் ....." அதை முடிக்க நேரம் இல்லை.

"சுவரைவிட்டுத் தூர வாருங்கள்" என்று கத்தினான் கோஷிவோய். கோஸக்குகளின் சுடு சொற்களைத் தாங்க முடியாமல் அந்தப் போலந்துக்கார கர்னல், தன் கரங்களை ஆட்டினான்.

கோஸக்குகள் அந்த இடத்தைவிட்டு விலகியதும் அங்கு குண்டுகள் வந்து விழுந்தன. கோட்டைச் சுவர்

மீது ஒரே குழப்பம். நரைத்ததலை முடியுடைய வேவோடே குதிரையின்மீதர்ந்து அங்கு வந்தான். நகர வாசல்கள் திறக்கப்பட்டுப் படைகள் 'திமு திமு' வென வெளியே ஓடி வந்தன. அஸ்ஸார் என்ற ராணுவப் பகுதியினர் முன்னணிப் படையினராக ஒழுங்காக அணிவகுத்து வந்தனர். அதைத்தொடர்ந்து சங்கிலி போலக் கோர்வையுடன் படைகளும், பிறகு பித்தளைத் தலைக்கவசம் அணிந்த படைகளும், அதற்குப் பிறகு கைகளில், நீண்ட கோடாரிபோன்ற கருவிகளுடன், கீழே விழுபவர்களைப் பொறுக்கி எடுக்கும் படையினரும், கடைசியாகப் பிரபல பிரபுக்கள் தங்களுக்குப் பிரியமான பலவித ஆடை அணிகளுடன், தனித்தனியே குதிரை மீதமர்ந்து வந்தனர். கர்வம் பிடித்த இந்தப் பிரபுக்கள், பிற சாதாரணப் படை வீரர்களுடன் சேர விரும்பாமல், தங்களுக்கெனச் சொந்தமான படைகள் இல்லாதவர்கள் தங்கள் சேவகர்கள் சூழ வந்தனர். இவர்களுக்குப் பின்னே, இன்னும் படைவீரர்களும், துவஜதாரியும், அவனுக்குப் பின்னே இன்னும் சாரி சாரியாய்ப் படைகளும் தொடர்ந்து வந்துகொண்டே இருந்தனர். அந்தப் பருத்த கர்னலும், எல்லோருக்கும் கடைசியில் அந்த ஒல்லியான கர்னலும் குதிரை மீதமர்ந்து வந்து கொண்டிருந்தனர்.

"அவர்களை அணிவகுத்து நிற்க விடாதீர்கள்" என்று கத்தினன் கோஷிவோய். "எல்லா குரன்களும் ஒன்ருகச் சேர்ந்து எதிர்த்து அடியுங்கள்! மற்ற வாசல்களைவிட்டு விடுங்கள். டிடரேவ்கா குரன், வலது சாரியில் எதிர்த்து நில். டியட்கிவ் குரன் இடது சாரியைக்கவனி! குகுபென்கோ நீயும் போலிவோடாவும் எதிரிகளின் பின்னணியைச் சிதறடியுங்கள்! அவர்கள் அணியைச் சிதறடியுங்கள், அவர்களைப் பிரித்துத் தாக்குங்கள்!" என்று உத்திரவு பிறப்பித்தான் கோஷிவோய்.

கோஸக்குகள், எல்லா முனைகளிலும் எதிர்த்துத் தாக்கினர். அவர்களைப் பிரித்துக் குழப்பி, அவர்களுடைய அணியை உடைத்தெறிந்தனர். எதிரிகள் தங்கள் துப்பாக்கிகளை உபயோகிக்கக்கூட விடவில்லை. ஈட்டிகளும் வாட்களும் களத்திலே உபயோகிக்கப்பட்டன. எதிரிகள் எல்

லோரும் ஒரே கூட்டமாகக் குழம்பிவிட்டனர். ஒவ்வொரு வரும் தன் திறமையைக் காட்டச் சந்தர்ப்பம் பெற்றனர். போபோவிக், சாதாரண ஆடையுடுத்த மூன்று வீரர் களை ஈட்டியால் துளைத்து, இன்னும் இரண்டு பிரபல பிரபுக்களை அவர்கள் குதிரைகளிலிருந்து விழுத்தாட்டி ஞன். பிறகு "எவ்வளவு நல்ல குதிரைகள், இவைகளுக் காகத்தான் நான் நீண்ட நாட்களாய்க் காத்திருந்தேன்" என்றுன். அவைகளை அந்தப் போர்க்களத்திலிருந்து விரட்டி, வெகு தூரத்திலிருந்த சில கோஸக்குகளிடம் இக் குதிரைகளைத்தனக்காக வைத்திருக்கும்படி கூவிஞன். மறுபடியும் களத்தில் புகுந்து, குதிரைகளை இழந்த பிரபுக் களில் ஒருவனைக் கொன்றுன். மற்றொருவனைத் தன் கரத் திலிருந்த சுருக்குக் கயிற்றால் கழுத்திலிட்டு, அந்தக் கயிற்றைத் தன் சேணத்தில் கட்டிவிட்டான். அவனு டைய விலை உயர்ந்த பிடியுடைய வாளையும், அவன் மார் பிலே பணம் நிறைந்திருந்த பணப் பையையும் எடுத்துக் கொண்டு, அந்தப் போர்க்களமெங்கும் அவனைத் தரையி லேயே இழுத்துக்கொண்டு சென்றுன்.

கோபிட்டா, போரிலே வல்ல கோஸக் இளைஞன், போலந்தின் புகழ் பெற்ற வீரன் ஒருவனுடன், தனித்து நீண்ட நேரமாகப் போரிட்டுக்கொண்டிருந்தான். இருவரும் இப்போது கைகலப்பில் இறங்கி ஒருவரைஒருவர் தாக்கிக்கொண்டனர். கடைசியில் அந்தக் கோஸக், போலந்து வீரனைக் கீழே தள்ளித் தன்னுடைய கூர்மை யான துருக்கியக் குத்துவாளால் அவன் மார்பிலே குத்தி ஞன். ஆனல் அந்தக் கோஸக்கும் தப்பித்துக்கொள்ள முடியவில்லை. அவன் நெற்றியிலே ஒரு குண்டு வந்து அதே நேரத்தில் பாய்ந்தது. இவனைக் கொன்றவன் பிரபல அரச குடும்பத்தில் பிறந்து எல்லாப் பிரபுக்களைக் காட்டி லும்தகுதியாலும் அழகிலும் உயர்ந்தவன். ராஜ கம்பீரத் தோற்றத்துடன், தன்னுடைய லேசான குதிரையின் மேலிருந்துகொண்டு பல போர்ச் செயல்களைக் காட்டிஞன். ஒரே வீச்சில் இரண்டு கோஸக்குகளை வீழ்த்திவிட்டு, பியோடர் கோர்ஸ் என்ற கெட்டிக்கார கோஸக்கைக் குதிரையோடு கீழே தள்ளிக் குதிரையைச் சுட்டு, அந்தக்

கோஸக்கைத் தன் ஈட்டியால் கிழித்தெறிந்தான். அவன் பலருடைய சிரங்களையும் கரங்களையும் துண்டித்தான். இப்போது கோபிட்டா எனும் கோஸக்கையும் சுட்டு வீழ்த்திவிட்டான்.

"இவனோடுதான் நான் என் பலத்தைச் சோதித்துக் கொள்ளப் போகிறேன்" என்று கூறிக்கொண்டே குகு பென்கோ என்ற நெஸமி குரனின் தலைவன் அவனை நோக்கித் தன் குதிரையைத் தார்க் குச்சியால் தட்டி வேகப் படுத்தினான். முதுகுப் புறமாக அவனை எதிர்த்து இவன் ஓடிய வேகத்தையும் அவன் இட்ட கோஷத்தையும் கேட்டு எல்லோரும் அலறிவிட்டனர். அந்தப் போலந்து வீரன் தன் குதிரையைத் திருப்பி அவனைத் திடீரென்று எதிர்க்க முயன்றான். ஆனால், பயங்கரமான அந்தக் கோஸக்கின் குரலைக் கேட்ட குதிரை பதறியது. அதே சமயத்தில் அவன் தோள்ப்பட்டையில் ஒருகுண்டு பாய்ந்து வந்து பதிந்தது. அப்போதும் அவன் விட்டுவிடவில்லை. தன் எதிரியை எதிர்க்க முயன்றான். ஆனால் அவனுடைய சக்தி இடம் கொடுக்கவில்லை. அவன் கரங்களிலிருந்த கனமான வாள் அவன் கரங்களைத் தாழ்த்திவிட்டன. குகுபென்கோ தன் கனமிக்க வாளை இரு கரங்களாலும் தூக்கி, எதிரியின் திறந்த வாயினுள் நுழைத்தான். அந்த வாள், சர்க்கரையைப் போன்று வெளுத்திருந்த எதிரியின் இரண்டு பற்களைச் சிதறடித்து, நாக்கை இரண்டாக வெட்டி, கழுத்தைத் துளைத்துக்கொண்டு பூமியில் சென்று ஆழப் பதிந்தது. அந்தப் பிரபுவை, இவ்வண்ணம் நிரந்தரமாகப் பூமியோடு சேர்த்துப் புடைத்து விட்டான். அந்த வீரனின் இரத்தம் நதிக்கரையில் விளையும் ரோஜாவைப் போல சிவந்த நிறத்தில், வெளியேறி அவனுடைய விலை உயர்ந்த தங்க நிற வேலைப் பாடுகள் நிறைந்த மஞ்சள் மேலணியை நனைத்துக்கொண்டிருந்தது. குகுபென்கோ அவனை அப்படியே விட்டு விட்டுப் போர்க்களத்தின் மற்றொரு பகுதியில் தன் ஆட்களுடன் புகுந்து விட்டான்.

"உமண் குரனின் தலைவனை போரோடடி, குகுபென்கோவால் வீழ்த்தப்பட்டவனின் அருகில்வந்து விலையுயர்ந்த

பலவித அணிகளைப் பார்த்து "ஏன் இவைகளை அப்படியே விட்டுவிட்டுப் போய்விட்டான், நான் ஏழு பிரபுக்களைக் கொன்றேன், ஆனால், ஒருவன்மேல் கூட இவ்வளவு செல்வத்தை நான் காணவே இல்லை" என்று பேராசையால் உந்தப்பட்டு, கீழே குனிந்து இறந்தவனின் விலையுயர்ந்த அணிகளைச் சேகரிக்க ஆரம்பித்தான்.

துருக்கிய குத்துவாளைக் கழற்றினான். அதன் கைப்பிடியில், விலை யுயர்ந்த பலவிதக் கற்கள் பதித்து வைக்கப் பட்டிருந்தன. அதன் பிறகு, அவனுடைய பெல்டோடு கட்டப்பட்டிருந்த பணம் நிறைந்த பையைக் கழற்றினான். அவன் மார்போடு கட்டப்பட்டிருந்த அழகான துணியையும், வெள்ளித் துண்டுகளையும் எடுத்தான். அதோடு இறந்தவனின் காதல் நினைவாக வைத்திருந்த—ஒரு பெண்ணின் மயிர்ச் சுருள்—முதலியவைகளையும் எடுத்தான். ஆனால் இவனால் குதிரையிலிருந்து கீழே வீழ்த்தப்பட்ட துவஜதாரி, மூக்குச் சிவக்க இவனை நோக்கிப் பாய்ந்து வருவதை அவன் கவனிக்கவே இல்லை. அவன் தன் பலங் கொண்ட மட்டும் தன் வாளை உயர்த்திப் படீரென்று குனிந்திருந்த போரோட்டியின் கழுத்தின் மேல் வீசினான். அந்தக் கோஸக்கின் பேராசை அவனுக்கு ஒருவித நன்மையையும் செய்யவில்லை. அவனுடைய சக்தி வாய்ந்த தலை துண்டாகத் தூரப்போய் விழுந்தது. முண்டமான அந்த வீரக் கோஸக்கின் உடலிலிருந்து இரத்தம் ஆறாகப் பாய்ந்து அந்த நிலப் பரப்பையே சிவப்பாக்கிக் கொண்டிருந்தது. அது, மகத்தான ஒரு உயிரோடு ஒட்டிக்கொண் டிருந்த பலசாலியின் அந்த உடல் இவ்வளவு சீக்கிரம் துண்டு பட்டுப் போனதைக் கண்டு ஆத்திரப் படுவதுபோல் இருந்தது.

அந்தத் துவஜதாரி அந்தத் தலைவனின் தலையை அவனுடைய தலை மயிருடன் தூக்கித் தன் சேணத்தில் கட்டப்போகும் சமயம், பலமிக்க மற்றொரு சத்துரு அங்கு தோன்றினான்.

வானத்திலே வட்டமிடும் வல்லூறு, தன் இரையைக் கீழே பார்த்துவிட்டு அதை மேலிருந்து கொண்டே சுற்றிச் சுற்றி வந்து திடீரென்று, தன் முழுவேகத்துடன் பாய்வது

போல, புல்பாவின் மூத்த மகன் ஒஸ்டாப்பும் அந்தத் துவஜதாரியின் மேல் பாய்ந்து தன் சுருக்குக் கயிற்றை வீசி அவன் கழுத்தை அப்படியே சுருக்கினான். அந்தத் துவஜதாரியின் சிவப்பு முகம் உடனே வெளுத்துப் போய் விட, தன் கைத்துப்பாக்கியை எடுத்து அவனைக் குறி பார்த்துச் சுட்டான். ஆனால் உதறும் அவன் கரங்களி லிருந்து சீறிச் சென்ற அந்தக் குண்டு வேறு எங்கோ பாய்ந்தது. ஒஸ்டாப் தன் எதிரியின் சேணத்தோடு கட்டி வைத்திருந்த பட்டு வடக்கயிற்றை அவிழ்த்து அந்தக் கயிற்றிலேயே அவனைக் கட்டி அந்தப் போர்க் கள மெங்கும் அவனை இழுத்துக் கொண்டே சென்று உமண் குரனின் கோஸக்குகளை அழைத்துத் தங்கள் தலைவனுக்கு இறுதி மரியாதைகளைச் செய்யும்படி கூறினான்.

தங்கள் தலைவன் இறந்து விட்டான் என்று கேள்விப் பட்ட உமண் குரனின் வீரர்கள் அனைவரும் போர்க் களத்தை விட்டு விலகி, அவனுடைய உடலைக் கொண்டு வர ஓடினார்கள். உடனே, தங்கள் குரனுக்கு யாரைத் தலைவனாகத் தேர்ந்தெடுப்பது என்று ஆலோசிக்கத் துவங் கினார்கள். முடிவாக "இது பற்றி நாம் விவாதிக்க வேண் டியதில்லை, இளம் ஒஸ்டாப்பைவிட நமக்குத் தகுந்த தலைவன் வேறு கிடைக்க மாட்டான். அவனுக்கு வயது குறைவாக இருந்தாலும் மிக வயதானவனின் யோசனைகள் நிறைந்தவன்" என்றனர்.

ஒஸ்டாப் தன் தொப்பியைக் கழற்றித் தனது தோழர் களுக்குத் தன்னைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்ததற்காக நன்றி செலுத்தினான். தன்னுடைய இளம் வயதையோ, வாலிபப் பருவத்தின் துடிதுடிப்பால் தன் ஆலோசனைகள் தவறாகப் போகுமென்றோ அவன் அதைத் தடுத்து விட வில்லை. இதைப்போன்ற போராட்ட காலங்களில் அதைப் போல் நடந்து கொள்ளக்கூடாதென்று அவனுக்குத் தெரியும். ஆகவே தன் தோழர்களை உடனே போரில் குதிக்கும்படி உத்திரவிட்டான். அவனுடைய சாகஸங் களைக் கண்ட அவனுடைய தோழர்கள் அவனைத் தேர்ந் தெடுத்தது வீணாகிவிடவில்லை என்பதை உணர்ந்தனர்.

யுத்தம், தாங்கள் எதிர்பாராத வகையில் சூடேறிக் கொண்டிருப்பதைக் கண்ட போலந்துக்காரர்கள் களத்தி லிருந்து, பின்வாங்கி, திறந்த வயலை நோக்கி ஓடி அங்கே அணிவகுத்து நிற்க முயன்றனர். ஒல்லியான கர்னல் நகர வாசல் அருகே பதுங்கி இருந்த பிரத்தியேக நான்கு படை யினருக்குத் தன் கரத்தால் சைகை காட்டினுன். மறுபடி யும் கோஸக்குகள் மத்தியிலே குண்டுகள் விழுந்தன. ஆனல் அந்தக் குண்டுகள் தூரத்தில் மேய்ந்துகொண்டி ருந்த கோஸக்குகளின் மாடுகளைத்தான் தாக்கின. இதைக் கண்ட மாடுகள் மிரண்டு பயத்துடன் திரும்பி கோஸக்கு களின் பாசறையை நோக்கி வண்டிகளைத் தம் காலின் கீழ் தள்ளி மிதித்துக் கொண்டு ஓடின. தாக்குவதற்காகப் பதுங்கி இருந்த புல்பா தன் படைகளுடன் கோஷமிட்டுக் கொண்டு அவைகளின் குறுக்கே சென்று வழிமறித்தான். மாடுகள் மேலும் முன்னேற முடியாமல், அவர்களுடைய கோஷத்தைக் கேட்டு மேலும் குழம்பிப் போய்த் திருப்பி அந்தப் பக்கமாக நின்றிருந்த போலந்தியர்களின் குதிரைப் படையைத் தாக்கிக் கீழே தள்ளி அவர்களை நாலா பக்க முற் சிதறடித்து விட்டன.

"மாடுகளே உங்களுக்கு நன்றி, படைகளோடு நடந்து வரும்போதும் எங்களுக்கு உதவி புரிந்தீர்கள்; இப் போது யுத்தத்திலும் எங்களுக்கு உதவி செய்கிறீர்கள்!" என்று கூறிவிட்டு இன்னும் இருமடங்கு சக்தியோடு எதிரிகளைத் தாக்கினுர்கள் சபோரோஷியர்கள்.

எதிரிகளில் பலர் கொல்லப்பட்டனர். கோஸக் குகளில் பலர் தங்கள் வீரத்தைக் காட்டிப்புகழ்பெற்றனர்; மெட்டிலிட்ஸயா, ஷில்லோ, ஒவுடிசன்கோ மற்றும் பலர். போரின் விளைவு தங்களை அதிகமாகப் பாதித்து விட்டதால் போலந்துப் படையினர் தங்கள் கொடிகளை உயர்த்தி நகர வாசல்களைத் திறக்கும்படி கூறினர். இரும்புக் கதவுகள் பெருத்த இரைச்சலுடன் திறந்ததும் களைப்படைந்து புழுதிபடிந்த படையினர் அனைவரும் அந் தக் கதவு வழியே ஆடுகள் தங்கள் தொழுவுக்குள் அடை வதைப்போல நகரத்திற்குள் நுழைந்தனர். சில சபோ ரோஷியர்கள் அவர்களைப் பின்பற்றி நகரத்திற்குள்ளே

செல்ல முயன்றனர். ஆனல் ஓஸ்டாப் தனது உமண் குரனைச் சேர்ந்த வீரர்களைத் தடுத்து நிறுத்தினன். "சுவரருகே செல்லாதீர்கள்! சகோதர கனவான்களே, அதை விட்டு விலகி வாருங்கள்" என்றும் கத்தினன். அவன் கூறியது உண்மையாகிவிட்டது. சுவர்மேலிருந்த எதிரிகள் குண்டுகளையும், தங்கள் கரங்களில் கிடைக்கும் அனைத்தையும் வாரிக் கீழே எறிந்தனர். எதிரிகளை விரட்டிக் கொண்டு ஓடிய பலர் அதனல் காயமடைந்தனர். இதைக் கண்ட கோஷிவோய், ஓஸ்டாப் அருகேவந்து அவனைப் பாராட்டினன். "இதோ ஒரு புதிய தலைவன் நமக்குக் கிடைத்திருக்கிருன். ஆனலும் நல்ல அநுபவமுள்ளவன் போலத் திறமையாகத் தன் படையை நடத்துகிருன்" என்று புகழ்ந்தான். கிழட்டு புல்பா, யார் அந்தப்புதிய தலைவன் என்று திரும்பிப்பார்க்கத் தன் மகன் ஓஸ்டாப் உமண்குரனுக்கு முன்னே கையில் அந்தக் குரனின் தலைவனுக்குரிய செங்கோலுடன் நிற்பதைக் கண்டு சந்தோஷத்துடன் "இவனல்லவோ வீரன்!" என்று புகழ்ந்தான். பின்னர் தன் மகனைத் தலைவனகத் தேர்ந்தெடுத்ததற்காக, உமண்குரன்வீரர்களைப் பாராட்டினன்.

கோஸக்குகள் தங்கள் பாசறைகளுக்குத் திரும்பும் போது நகரத்துக் கோட்டைச் சுவர்மீது மறுபடியும் போலந்துக்காரர்களைக் கண்டனர். ஆனல் இப்போது அவர்களுடைய பழைய அலங்காரங்கள் எல்லாம் மாறி, கிழிந்தும், ரத்தக்கறை படிந்தும் பல உன்னதமான கவசங்கள் தூசிபடிந்தும் கிடந்தன.

"எங்களைக் கட்டிவிட்டீர்களா?" என்று கீழே இருந்த சபோரோஷியர்கள் கத்தினர்கள்.

"நான் கட்டுகிறேன் இருங்கள்" என்று மறுபடியும் அந்தப் பருத்த கர்னல் தன் கரத்திலிருந்த கயிற்றைக் காட்டினன்.

இன்னும்கூடத் தூசிபடிந்து களைப்படைந்த வீரர்கள் ஒருவருக்கொருவர் பயமுறுத்திக்கொண்டும், அவர்களில் இன்னும் தைரியசாலிகள், நையாண்டிகள் செய்து கொண்டும் இருந்தனர்.

கடைசியில் எல்லோரும் ஒரு வழியாக ஓய்வெடுத்துக் கொள்ள முயன்றனர். சிலர் யுத்தத்தில் மிகக் களைப் படைந்து கீழே படுத்துவிட்டனர். சிலர் தங்கள் காயங் களில் மண்ணை அள்ளி வைத்துக் கைக்குட்டைகளாலும் எதிரிகளிடமிருந்து கைப்பற்றிய விலையுயர்ந்த துணிகளா லும் கட்டுப்போட்டுக்கொண்டனர். இன்னும் களைப் படையாத சிலர் காயம்பட்டிறந்தவர்களைத் தேடியெடுத்து அவர்களுக்குத் தங்கள் இறுதி மரியாதையைக்காட்டி அடக்கம் செய்தனர். தங்கள் அகன்ற வாட்களைக் கொண் டும், ஈட்டிகளைக் கொண்டும், குழிகளை வெட்டி, மண்ணைத் தங்கள் தொப்பிகளிலும், சட்டைகளிலும் வாரிக் கொண்டு போய்க்கொட்டினர்கள். அதன்பிறகு இறந்தவர் களை மிக மரியாதையுடன் குழிகளில் இறக்கி, மண்ணைத் தள்ளி, நன்ருக அடைத்து வல்லூறுகளும் பருந்துகளும் இறந்தவர்களின் கண்களைத் தோண்டிவிடாமலிருக்க மூடிவிட்டனர். ஆனல் இறந்துவிட்ட போலந்துக்காரர் களை ஒன்ருகக் கயிற்றினல் கட்டிக் காட்டுக் குதிரை களின் வால்களோடு அவைகளைக் கட்டிவிட்டு, குதிரை களை அடித்து விரட்டி விட்டனர். பதறிப்போன குதிரைகள் புழுதிபடிந்த போலந்து தேசத்து வீரர்களின் பிணங்களை மண்ணிலும், சேற்றிலும், மேடுகளிலும் பள்ளங்களிலும், இழுத்துக்கொண்டு ஓடின.

இரவு வந்ததும், குரன்கள் வாரியாக எல்லோரும் சுற்றி அமர்ந்துகொண்டு தங்கள் இரவு போஜனத்தை அருந்தினர். தங்களுடைய வீரத்தைப் பற்றியும், இதைப் போன்ற போர்க்களத்தில் புகழ்பெற ஒவ்வொருவருக்கும் கிடைத்த சந்தர்ப்பங்களைப் பற்றியும் இவைகளைச் சரித் திரகாலந்தொட்டு, நாட்டுப் பாடல்களில் தங்கள் சந்ததியார்கள் பாடப்போவதைப் பற்றியும் இரவு வெகு நேரம்வரை பேசிக்கொண்டிருந்தனர். புல்பா இன்னும் யோசித்துக்கொண்டே இருந்தான். 'எதிரிகளின் அணி களில்கூட ஆன்றியைக் காணமுடியவில்லையே!' ஒருவேளை, ஓரே இரத்தம் ஓடும் தன் தோழர்களை எதிர்க்கக் கூசி வராமலிருந்துவிட்டாஞ, அல்லது அந்த யூதன் வேண்டு மென்றே பொய் சொல்லிவிட்டாஞ...ஒருவேளை ஆன்றி

உண்மையிலேயே கைதுசெய்யப்பட்டுக் கிடக்கிருளு?' ஆனால் உடனே மற்றொரு நினைவும் அவனைத் தாக்கியது. பெண்களின் வார்த்தைகளிலே சுலபமாகத் தன் மனத்தைக் கொள்ளை கொடுத்துவிடுபவன் அன்றி; ஆகவே தன் மகனை மயக்கிவிட்ட போலந்து தேசப் பெண்மீது தன் வஞ்சத்தைத் தீர்த்துக்கொள்ள வேண்டும் என்று துடி துடித்தான் புல்பா. அவன் அப்படியே தன் எண்ணத்தைச் செய்துமுடிப்பவன்தான். அவன் அவளுடைய அழகைப் பார்க்கமாட்டான். அவளுடைய அழகிய கூந்தலைப் பிடித்து, எல்லா கோஸக்குகளும் பார்க்கும் வண்ணம், நடுத்தெருவிலே இழுத்துவருவான். மலைகளின் உச்சியிலே என்றும் நிலைத்து நிற்கும் பனிப் படலத்தின் வெண்மை யைத் தோற்கடிக்கும் அவளது மார்பகங்களும், தோள் களும், தரையில் தேய்ந்து, இரத்தமும் மண்ணும் கலக்க, அவளுடைய எழிலான இளம் உடலைத் துண்டுதுண்டாகக் கிழித்தெறிந்திருப்பான். ஆண்டவன் நாளை என்ன நடத் தத் தீர்மானித்திருக்கிருனே என்பதை அறியாத புல்பா அப்படியே தூங்கிவிட்டான்.

கோஸக்குகள் இன்னும் பேசிக்கொண்டிருந்தனர். உஷாரான காவற்காரர்கள் இரவு முழுதும் எரியும் தீப் பந்தங்கள் அருகே நின்று கொண்டு காவல் புரிந்தனர்.

## 8

காலைச் சூரியன் இன்னும் வானத்தின் மேலே கூட சரியாகத் தெரியவில்லை. எல்லா சபோரோஷியர்களையும் பொதுக் குழுவுக்குக் கூப்பிட்டனர். தங்கள் ஜாகையி லிருந்து செய்தி வந்தது. இந்த கோஸக்குகள் இல்லாத சம யம் பார்த்துத் தார்த்தாரியர்கள் அங்கு வந்து, எல்லாச் சொத்துக்களையும்—மறைத்து வைத்திருந்த பொக்கிஷங்கள் உட்பட—கொள்ளையடித்துக் கொண்டு அங்கு மிஞ்சி இருந்தவர்களையும் கொன்றுவிட்டு, இவர்களுடைய மாடு களையும் குதிரைகளையும் ஓட்டிக்கொண்டு பேரிகோப்பை நோக்கிப் போய் விட்டதாகத் தெரிந்தது. மாக்ஸிம் கோலோடுகா என்ற ஒரே ஒரு கோஸக் மட்டும் அந்தத்

தார்த்தாரியர்களிடமிருந்து தப்பித்து அவர்களுடைய தலைவனைக் கத்தியால் குத்திவிட்டு அவனுடைய பணத்தையும் எடுத்துக்கொண்டு ஒரு தார்த்தாரியக் குதிரையுடன் அவர்கள் உடையை அணிந்துகொண்டு ஒன்றரை நாள் பகலும், இரண்டு இரவுமாக ஓடிவந்திருக்கிறான். வழியில் அந்தக் குதிரையும் இறந்துவிட, மற்றொன்றுடன் தன்னை விரட்டிக் கொண்டு வருபவர்களிடம் சிக்காமல், மூன்றும் நாள், வழியிலே சபோரோஷியர்கள் டுப்னோவில் இருப்பதை அறிந்து இங்கு வந்து சேர்ந்தான். வந்தவன் அங்கு நடந்த துயரச் செய்தியை மட்டும்தான் கூற முடிந்தது—ஆனால் இதுஎப்படி நடந்தது? அங்கு இருந்தவர்கள் அனைவரும் குடித்துவிட்டுப் போதையிலேயே கைது செய்யப்பட்டார்களா, தங்கள் ராணுவப் பொக்கிஷம் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் இடத்தைத் தார்த்தாரியர்கள்எப்படிக்கண்டு பிடித்தனர்—இவைகளைப்பற்றி அவன் ஒன்றுமே சொல்ல முடியவில்லை. அவன் சக்தி இழந்து, முகம் வெளுத்து, உடலெல்லாம் ஊதிப் போய் அப்படியே விழுந்து உடனே தூங்கிவிட்டான்.

இதைப்போன்ற சந்தர்ப்பங்களில் கோஸக்குகள் அந்தக் கொள்ளைக் கூட்டத்தாரைத் துரத்திக் கொண்டு போய் நடுவழியிலேயே மடக்கி அவர்களைக் கைதிகளாக்கிப் பின்னர் தங்கள் கைதிகளை ஆசியா மைனர், கிரீட், ஸ்மைரனு போன்ற பல அடிமைகளை விற்கும் சந்தைகளில் விற்று விடுவார்கள். இதற்காகத்தான் இப்போது இந்தச் சபோரோஷியர்கள் கூடி இருக்கின்றனர். எல்லோரும் தங்கள் தொப்பிகளை அணிந்து கொண்டிருந்தனர். இப்போது தங்கள் தலைவர்களுடைய உத்திரவுகளைக் கேட்க அவர்கள் வரவில்லை. எல்லோரும் ஒன்றுக இருந்து தோழர்கள் போல நிதானமாக விவாதிக்க வந்திருந்தனர்.

''முதலில் வயதானவர்கள் பேசட்டும்'' என்று கூட்டத்திலிருந்து ஒருவன் கத்தினுன்.

''கோஷிவோய் உன்னுடைய அபிப்பிராயத்தைக் கூறு'' என்றனர் ஒரு பகுதியினர்.

கோஷிவோய் தன் தொப்பியைக் கழற்றிவிட்டு, அவர்களுடைய தலைவன் என்ற முறையில் அல்லாமல் தோழர்களில் ஒருவன்போல் தனக்குப் பேசச் சந்தர்ப்பம் அளித்த கோஸக்குகளுக்கு நன்றி தெரிவித்து விட்டுப் பேச ஆரம்பித்தான்.

''நம்மிடையே மிக வயதானவர்களும், அறிவாளிகளும் நல்ல யோசனை கூறுகிறவர்களும் இருக்கின்றனர். ஆனால் என் ஆலோசனையைக் கேட்டதினால் சொல்கிறேன்: கால தாமதம் செய்யாதீர்கள்! தோழர்களே, உடனே அந்தத் தார்த்தாரியர்களை விரட்டிக்கொண்டு போங்கள். ஏனென்றால் அவர்கள் கொஞ்சம் கூடப் பொறுத்திராமல் தாங்கள் கொள்ளையிட்டவற்றை உடனே கொஞ்சம்கூட அடையாளம் தெரியாமல் தீர்த்துவிடுவார்கள்; ஆகவே என் யோசனை இதுதான்—உடனே புறப்படுங்கள்! இங்கே நமக்கு நல்ல வேட்டை கிடைத்தது. கோஸக்குகள் என்றால் எத்தகையவர்கள் என்பதை இப்போது அந்தப் போலந்துக்காரர்கள் தெரிந்து கொண்டனர். நம்மால் முடிந்தவரை நம் மதத்திற்காகப் பழி வாங்கி விட்டோம். பட்டினியால் சாகும் அந்த நகரம் இனிமேல் நமக்குப் பயன்படாது. ஆகவே என் யோசனை நாம் உடனே போக வேண்டும் என்பதுதான்.

''எல்லோரும் போகலாம்'' என்று எல்லாக் குரன்களும் ஒரே குரலில் கோஷித்தன.

புல்பாவுக்கு இந்தத் தீர்மானம் பிடிக்கவில்லை. அவன் தன்னுடைய அடர்ந்த புருவங்களைக் கூட்டிக்கொண்டு வெறுப்புக் கலந்த முறையில் முகத்தைச் சுளித்துக்கொண்டான். வளர்ந்த மலை உச்சியின் மேல் முளைத்திருக்கும் புதர்போல இருந்தது அவன் புருவம்.

''இல்லை, உங்கள் தீர்மானம் சரியில்லை. நீங்கள் அப்படிச் சொல்லக்கூடாது. போலந்துக்காரர்கள் வசம் இன்னும் நம் தோழர்கள் அடிமைகளாக இருக்கிறார்கள் என்பதை நீங்கள் மறந்துவிட்டீர்கள் போலும். தோழமையின் மிக முக்கியமான முதல் தரமான சட்டத்திற்குப் புறம்பாக உக்ரேனில் நமது ருஷ்யப் பிரபுக்களையும் நமது

தலைவர்களையும உயிரோடு பொசுக்கி வண்டிகளில் வைத்து ஊரெங்குங் கொண்டுபோய் அவமானப்படுத்தி ஞர்களே, அதைப்போல நமது தோழர்களையும் செய்ய விட்டு விட்டுப் போக விரும்புகிறீர்களா? நாம் புனிதமாக நினைக்கும் சகலத்தையும் அவர்கள் ஏற்கனவே மாசு படுத்திவிடவில்லையா? இந்த அவமானமும் நமக்கு வந்து சேரவேண்டுமா? பிறகு நாம் கோஸக்குகள்தாஞ? தன் தோழனை இன்னலில் விட்டுவிட்டுச் செல்பவன் என்ன கோஸக்? அவனை எதிரிகளின் கரங்களிலே அன்னிய பிர தேசத்தில் நாயைப்போலச் சாகும்படி விடுபவன் என்ன கோஸக்? ஆகவே, தன் குணத்தை மறந்து, பிறர் அவன் முகத்தில் உமிழும்படி செய்துகொள்ளும் அளவிற்கு நம் கோஸக்குகள் வந்துவிட்டால்......என்னை யாரும் கோபித் துக் கொள்ளாதீர்கள். நான் இங்கேயே தனியாக இருக் கிறேன்'' என்ருன் புல்பா.

எல்லா சபோரோஷியர்களும் தயங்கினர்.

''தார்த்தாரியர்கள் கரங்களிலே நமது தோழர்கள் இருப்பதையும், நாம் அவர்களைக் காப்பாற்ருவிட்டால், நாஸ்திகர்களிடம் அவர்களை விற்றுவிடுவார்கள் என்பதை யும், கொடுமையான மரணத்தைவிட இது மிகவும் அவ மானகரமானது என்பதையும், நம் கிருஸ்தவ இரத்தத் தைப் பணயம் வைத்துச் சேகரித்த பொக்கிஷங்களையும் அவர்கள் எடுத்துக்கொண்டார்கள் என்பதையும், சக்தி வாய்ந்த கர்னலே, நீ மறந்துவிட்டாயா?'' என்று கேட் டான் கோஷிவோய்.

கோஸக்குகள் இதைக் கேட்டு மேலும் குழம்பிவிட் டனர். எதைச் சொல்வதென்றே அவர்களுக்குப் புரிய வில்லை. ஒருவனும் தனக்கு இழுக்குத் தேடிக்கொள்ள விரும்பவில்லை. இந்தச் சமயத்தில், சபோரோஷியர்களிடை யேமிகவும் வயோதிகஞன காஸியன் போவ்டிக் என்பவன் முன் வந்தான். அவன் எல்லா கோஸக்குகளாலும் மிகவும் கௌரவிக்கப்பட்டவன். இரண்டு முறை கோஷிவோ யாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிருன். பல போர்களில் அவன் பங்கெடுத்துக் கொண்டிருக்கிருன். இப்போது

வயது மிக அதிகமாகிவிட்டதால், போரில் பங்கெடுத்துக் கொள்வதில்லை. ஆனால் கோஸக்குகள் மத்தியிலே இருந்து கொண்டு அவர்களுடைய வீர தீரக் கதைகளைக் கேட்பதில் அவனுக்குப் பிரியம் அதிகம். அவன் யாருக்கும் உபதேசம் செய்வது கிடையாது. இவர்களுடைய பேச்சுக்களிலும் கலந்து கொள்ளாமல் அவர்கள் பேசுவதையே கேட்டுக் கொண்டு, என்றும் அவன் வாயிலிருந்து அகலாத சுங்கானின் சாம்பலைத் தட்டி விட்டுக்கொண்டே பாதி மூடிய கண்களுடன் மௌனமாக இருப்பான். சமயத்தில் கோஸக்குகளுக்கு அவன் தூங்குகின்றானா, அல்லது தாங்கள் பேசுவதைக் கேட்கின்றானா என்றே தெரியாது. பிற போராட்ட காலங்களில் வீட்டிலேயே தங்கி இருந்தான். ஆனால் இந்தச் சமயம் அவனால் அங்கிருக்க முடியவில்லை. "என்ன வந்தாலும் வரட்டும், நான் உங்களுடன் வருகிறேன். இன்னும் கூட என்னால் கோஸக்குகளுக்கு ஏதேனும் செய்யமுடியும் என்று நினைக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டு வந்து விட்டான்.

அவன் பொதுக் குழுவின் முன்னே வந்து நின்றதும் எல்லோரும் அமைதியாக அவன் என்ன சொல்லப் போகிறான் என்று கேட்க விரும்பினர். அவன் பேச்சைக் கேட்டு நீண்ட நாட்களாயின.

அவன் ஆரம்பித்தான்: "நானும் என்னுடைய சில வார்த்தைகளைச் சொல்லும் நேரம் வந்து விட்டது. வயோதிகனான என் பேச்சைக் கேளுங்கள் குழந்தைகளே! நம் ராணுவத்தின் தலைவன் என்ற முறையில் ராணுவப் பொக்கிஷங்களைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பான நிலையில், பேசினான் கோஷிவோய். அதைவிடப் புத்திசாலித்தனமாக யாரும் இந்தச் சூழ்நிலையில் பேச முடியாதுதான். இது என்னுடைய முதல் வாசகம். மற்றொன்றையும் கேளுங்கள் —கர்னல் புல்பா கூறியது முற்றிலும் உண்மை. ஆண்டவன் அவருக்கு நீண்ட ஆயுளைக் கொடுக்கட்டும். அவரைப் போன்ற பல வீரர்கள் நம் உக்ரேனில் பிறக்கவேண்டும். ஒரு கோஸக்கின் முதற் கடமை, கௌரவம் எல்லாம் தோழமையின் நியதிகளைக் கடைப்பிடிப்பதிலேதான் இருக்கிறது. என்னுடைய நீண்ட நாள் அனுபவத்தில்

எந்த கோஸக்கும் தன் தோழனைக் காட்டிக்கொடுத்ததாக நான் கேள்விப்பட்டதே இல்லை. இங்கிருக்கும் கோஸக்குகளும் அங்கு அடிமைகளாக்கப்பட்டவர்களும், எல்லோருமே நமது தோழர்கள்தாம். எங்கு குறைச்சலாக இருக்கிறார்கள் எங்கு அதிகமாக இருக்கிறார்கள், என்பதல்ல நம் முன்னுள்ள பிரச்னை. எல்லோருமே நமக்குவேண்டியவர்கள்தாம்! எல்லோரும் நமது தோழர்கள்தாம்! ஆகவே, இதுதான் என் யோசனை. யார் யாருக்குத் தார்த்தாரியர்களிடம் அடிமைகளாக இருப்பவர்கள் மிகவும் வேண்டியவர்களோ அவர்கள் தார்த்தாரியர்களை விரட்டிக் கொண்டு போகலாம். போலந்துக்காரர்கள் வசம் சிக்கி இருப்பவர்களுக்கு யார் யார் மிகவும் வேண்டுமோ அவர்கள் இங்கே தங்கி விடலாம். கோஷிவோய் ஒரு பாதி ராணுவத்திற்குத் தலைமை வகித்துத் தார்த்தாரியர்களை விரட்டிக்கொண்டு போகட்டும். அடுத்த பாதியினர் மற்றொரு உதவி கோஷிவோயைத் தேர்ந்தெடுக்கட்டும். என்னுடைய ஆலோசனைகளைக் கேட்பதாயிருந்தால் இந்தப் பதவிக்குப் புல்பாவைவிடத் திறமையானவர் இங்கு யாருமில்லை யாது. நம்மவரிடையே அவரது வீரத்திற் கிணையானவர் யாருமில்லை."

காஸியன்போவ்டிக் இப்படிப் பேசியதைக் கேட்டதும் சந்தோஷ ஆரவாரத்தோடு தங்கள் தொப்பிகளை உயரே வீசியெறிந்து அவன் ஆலோசனையை அங்கீகரித்தனர் அந்த கோஸக்குகள். "மிகவும் நன்றி தந்தையே, நீண்ட நாட்களாக மௌனமாக இருந்தாய். கடைசியில் இன்று பேசினாய். இங்கு வருவதற்குமுன்பு நீ கூறியபடி கோஸக்குகளின் இனத்திற்கு நன்மையே செய்திருக்கிறாய்" என்று அந்தக் கோஸக்குகள் அவனைப் பாராட்டினர்.

"சரி இந்த ஏற்பாட்டை எல்லோரும் ஒப்புக்கொள்கிறீர்களா?" என்று கேட்டான் அந்தக் கோஷிவோய்.

"ஆம், நாங்கள் ஒப்புக்கொள்கிறோம்" என்றனர் அந்தக் கோஸக்குகள்.

"அப்படியென்றால், நம் கூட்டத்தை முடித்துவிடலாமா?"

"ஆம் முடித்து விடலாம்."

அதன் பிறகு மறுபடியும் கோஷிவோய் பேச ஆரம்பித்தான். தொப்பியை அணிந்துகொண்டு தன் உத்திரவுகளைப் பிறப்பித்தான். எல்லா கோஸக்குகளும் தங்கள் தொப்பிகளைக் கழற்றிவிட்டுக் குனிந்த தலையுடன் பெரியவன் பேசும்பொழுது வழக்கமாகத் தாங்கள் காட்டும் மரியாதையுடன் அமைதியாக நின்றனர்.

"சகோதர கனவான்களே, என்னோடு வருபவர்களெல்லாம் வலது பக்கமாக வந்து நில்லுங்கள், இங்கேயே இருக்க விரும்புபவர்கள் இடது பக்கம் போங்கள். எந்தப் பக்கம் ஒரு குரனின் அதிகமாக வீரர்கள் போகிறார்களோ அந்தப்பக்கம் அதன் தலைவனும் போய்விடவேண்டும். மற்றவர்கள் பிற குரன்களோடு சேர்ந்துவிடவேண்டும்.",

அங்கிருந்தவர்கள் அனைவரும் இடது பக்கமும், வலது பக்கமும் மாறினர். எங்கே தன்னுடைய குரனின் ஆட்கள் அதிகமாகச் செல்கிறார்களோ அவர்களைப் பின்பற்றினான் அந்தக்குரனின் தலைவன். மிகுதியானவர்கள் பிறகுரன்களோடு ஐக்கியமாகி விட்டனர். கடைசியில் பார்க்கும் பொழுது இரண்டு பக்கங்களிலும் சரிசமமாக ஆட்கள் நிரம்பியிருந்தனர். இங்கேயே தங்கிவிட முடிவுசெய்தவர்களில் நெஸமிகுரனும், உமண்குரனும், கனிவ்குரனும், போபோவிக், ஸ்டெப்லிக், டிமேஷே குரன்களைச் சேர்ந்த பெரும்பகுதியினரும் ஆகும்.

இவர்களைத் தவிர மற்றவர்கள் எல்லாம் தார்த்தாரியர்களை விரட்டிக்கொண்டு போக முற்பட்டனர். இரண்டு பக்கங்களிலும் பலசாலியான வீரக் கோஸக்குகள் பலர் இருந்தனர். தார்த்தாரியர்களை விரட்டிக்கொண்டுபோக விரும்பியவர்களில், சேரவடி, போகோடிபோல், விமிஷ், கோமா, புரோகோகோவிச், டிமிட்போபோவிக் ஆகிய இவர்களாகும். இதில் டிமிட்போபோவிச் என்றுமே ஒரே இடத்தில் தங்கி இருக்கும் சுபாவம் உடையவனல்ல. போலந்துக்காரர்களிடம் தன் வீரத்தைக் காட்டிய அவன், இப்போது தார்த்தாரியர்களை எதிர்க்கத் துணிந்து விட்டான். இவனைத் தவிர, தார்த்தாரியர்களை எதிர்த்து

அவர்களோடு மோதித் தங்கள் வாட்களைச் சோதித்துக் கொள்ள விரும்பியவர்களில், சூரன்களின் தலைவர்களான நோஸ்டியூகான், போக்ரீஷ்கா, நெவில்ஸ்கீ போன்றவர்கள் இருந்தனர். இங்கேயே தங்கிவிட விரும்பியவர்களிலும் பலபுகழ் பெற்ற கோஸக்குகளிருந்தனர். அவர்களில் சூரன்களின் தலைவர்களான, டிமிட்ரோவிச், குகுபென்கோ, வெர்டிகிருஸ்ட், பாலடென், ஓஸ்டாப் ஆகியவர்கள் குறிப்பிடத்தகுந்தவர்கள். இவர்களனைவரும் பல தேசங்கள் சுற்றியவர்கள்; அனடோலியாவின் கரையோரங்களில் படகு செலுத்தியவர்கள், கிரிமியாவின் உப்பு நிறைந்த சதுப்பு நிலங்களையும் திறந்த வெளிகளையும் கடந்து சென்றவர்கள், டெனிப்பர் நதியினுள் வந்து விழுகின்ற பெரியதும் சிறியதுமான ஆறுகளையும், அதன் தீவுகளையும் திட்டுகளையும் கண்டவர்கள்; அவர்கள் மோல்டேரியா, வாலாசியன், துருக்கியப் பிரதேசங்கள் இவைகளைக் கண்டவர்கள். கருங்கடலில் கோஸக்குகளின் இரட்டைத் துடுப்புகள்கொண்ட படகுகளில் சென்று, பல செல்வ மிகுந்த பெருங்கப்பல்களை வழிமறித்து அவைகளை மூழ்கடித்தவர்கள். வண்டிக்கணக்கான பல வெடி மருந்துகளை உபயோகித்துத் துருக்கியப் புராதன கப்பல்களை அழித்தவர்கள். பல சமயங்களில் விலையுயர்ந்த வெல்வெட்சில்க் துணிகளைத் தங்கள் செருப்புகளுக்கு உபயோகித்தவர்கள். தங்கள் இடுப்புகளில் தொங்கும் பைகளில் நிறையப் பணத்தைக் குவித்துக் கொண்டுள்ளவர்கள். அவர்கள் தங்கள் வாழ்க்கையில் சம்பாதித்த செல்வத்தை—பிறருக்குத் தங்கள் ஆயுட்காலம் வரை நிம்மதியாக வாழப் போதுமான செல்வத்தை—இவர்கள் குடிகளிலும், விருந்துகளிலும் அழித்தவர்கள். அவர்கள் தங்கள் செல்வங்களை அசல் கோஸக்கின் முறையிலே சூறையாடினார்கள். விருந்துகளுக்குப் பலரை அழைத்தும், இசை பாடுவதற்காகப் பல இசைவாணர்களை அழைத்தும் இந்த உலகமே இன்பம் அனுபவிக்கவேண்டும் என்ற நோக்குடன் பாடல்களை மெய்மறந்து கேட்பவர்கள். இப்போதுகூட இவர்களில் பலர் சொத்துடையவர்கள் தாம். தங்களுடைய பொக்கிஷங்களைத்—தங்க வளையல்கள் கோப்பை

கள்—பிறவற்றைத் தாங்கள் செட்சில் இல்லாத சமயத்தில் தார்த்தாரியர்கள் படையெடுத்து வந்து அபகரித்துக் கொண்டு போய்விடாமல் இருப்பதற்காக டெனிப்பர் நதியின் பல தீவுகளில் கொண்டுபோய் மறைவான இடங்களில் புதைத்து வைத்திருந்தனர். அவைகளைப் புதைத்த இடங்கள் இப்போது இவர்களுக்கே மறந்திருக்கலாம். தங்களுடைய தோழர்களை அவமானப் படுத்திய அந்தப் போலந்துக்காரர்களைப் பழிக்குப் பழி வாங்கும் எண்ணத்தோடு இங்கேயே தங்கிவிட்டவர்களில் பலர் இதைப் போன்றவர்கள்.

அந்தக் கிழட்டு கோஸக் காலியன்போவ்டிக்கும் அதைப் போலவே இங்கு தங்கிவிட்டான்.

"தார்த்தாரியர்களை எதிர்த்து விரட்ட என் வயது எனக்கு உதவி செய்யாது. நல்ல கோஸக்காகச் சாக இங்கே எனக்கொரு இடம் கிடைத்துவிட்டது. நான் சாகும் வேளைவரும்போது என்னுடைய புனிதமான கிருஸ்தவ மதத்திற்காகப் போராடி அந்தப் போர்க்களத்திலே தான் மடிய வேண்டும் என்று நான் பல நாட்களாய்த் தியானித்ததுண்டு. அது இப்போது பலிதமாகி விட்டது. இதைவிட மேலான மரணம் என்னைப்போன்ற கிழட்டு கோஸக்குக்கு வேறு எங்கும் கிடைக்காது" என்று கூறினான்.

எல்லோரும் இரண்டு பிரிவாகப் பிரிந்த பின்னர், கோஷிவோய் அவர்கள் மத்தியிலே நடந்துவந்து "என்ன சகோதரர்களே, இந்தப் பிரிவின் தொகைகள் எல்லாம் உங்களுக்குச் சரியாகப்படுகிறதா?" என்றுகேட்டான்.

"எங்களுக்குச் சரியென்றேபடுகிறது" என்றனர் எல்லா கோஸக்குகளும்.

"சரி. ஒருவரையொருவர் முத்தமிட்டுக்கொண்டு விடைபெற்றுக் கொள்ளுங்கள். நாம் அனைவரும் மறுபடியும் சந்திப்போமா என்பதை ஆண்டவன்தான் அறிவான். உங்கள் தலைவர்கள் சொல்வதைக்கேட்டு நடவுங்கள். ஆனால் கோஸக்கின் கௌரவத்திற்குப் பங்கமில்லாமல் நடந்துகொள்ளுங்கள்."

எல்லா கோஸக்குகளும் ஒருவரை ஒருவர் முத்தமிட்டுக் கொண்டனர். முதலில் தலைவர்கள் ஆரம்பித்தனர். தங்கள் மீசைகளைத் தட்டிவிட்டுக்கொண்டு அவர்களின் கன்னங்களிலே முத்தமிட்டனர். பின்னர் கரங்களைப் பிடித்துக்கொண்டு வெகுநேரம் அப்படியே நின்றனர். "நாம் மறுபடியும் எப்போதாவது சந்திப்போமா சகோதரா" என்று ஒவ்வொருவனும் கேட்கத் துடித்துக் கொண்டிருந்தான். ஆனால் ஒருவனும் கேட்கவில்லை. இருவரும் தங்கள் எண்ணங்களிலே மூழ்கிக் கிடந்தனர். பிற கோஸக்குகள் தங்களுக்குள் விடைபெற்றுக் கொண்டிருந்தனர். இரு சாராருக்குமே கடுமையான வேலை காத்திருப்பது நன்கு தெரியும். ஆனால் உடனே கிளம்பிவிட அவர்கள் விரும்பவில்லை. இருட்டியதும் கிளம்பலாம் என்று உணவை முடித்துக்கொள்ள, தங்கள் குரன்களுக்குச் சென்றனர். போலந்துக்காரர்களுக்குத் தங்கள் ராணுவத்திலிருந்து ஆட்கள் பிரிந்து, தொகை குறைந்த விஷயம் தெரியக்கூடாதென்று இந்த ஏற்பாடு செய்தனர்.

உணவை முடித்துக்கொண்டு போகவேண்டியவர்கள் அமைதியாகப் படுத்து ஒரு நல்ல தூக்கம் போட்டனர். அமைதியான சூழ்நிலையில் தூங்குவது இதுதான் கடைசி முறையென்று அவர்களே முன்கூட்டியே உணர்ந்தவர்கள் போல் தூங்கினர். சூரியன் மறையும்வரை தூங்கிவிட்டு இருள் படர்ந்ததும் விழித்தெழுந்து தங்கள் வண்டிகளுக்குத் தார் பூசினர்.* எல்லாம் தயாரானதும் தங்கள் வண்டிகளை முதலில் அனுப்பிவிட்டுத் தங்கள் தோழர்களுக்கு மறுபடியும் தொப்பிகளைத் தூக்கிக் காட்டி விடைபெற்றுக்கொண்டு, மெள்ள அந்த வண்டிகளைப் பின்தொடர்ந்தனர். காலாட் படைக்குப் பின்னே குதிரைப் படையும் ஒருவிதச் சப்தமுமின்றிச் சென்று இருளில் மறைந்தது. குதிரைகளின் குளம்படி ஓசையும் இருட்டிலே சரியாகத் தார் பூசாததால் சப்தமிடும் சில

---

* நம் ஊர் வண்டிகளுக்குக் 'கீல்' பூசுவதுபோல, அவர்கள் தங்கள் வண்டிகளுக்குக் 'கீலு'க்குப் பதிலாகத் தார் பூசுவார்கள். மொ-ர்.

வண்டிகளின் ஒலியையும் தவிர வேறு ஒருவித சப்தமும் கேட்கவில்லை. தங்களைப் பிரிந்து போகின்ற தோழர்களை நோக்கி அவர்கள் மறைந்தபின்னரும் தங்கள் கரங்களை ஆட்டிக்கொண்டிருந்தனர். இங்கேயே தங்கிவிட முடிவு செய்தவர்கள்—சிறிதுநேரம் சென்று தங்கள் இடங்களுக்கு வந்து பார்த்தபோது, சந்திரன் கதிர்களை வீசி அந்த இடத்தை யெல்லாம் ஒளிமயமாக்கிக் கொண்டிருந்தான். அந்த ஒளியிலே தங்களுடைய பாதி வண்டிகள் காலியாகிவிட்ட இடத்தையும், தங்கள் தோழர்களில் பலரைப் பிரிந்து கிடக்கும் இடங்களையும் கண்டு வருத்தப்பட்டார்கள். அவர்கள் இதயம் சோகத்தால் நிறைந்து அப்படியே தங்கள் தலைகளைத் தாழ்த்திக் கொண்டனர்.

கோஸக்குகளின் அணியிலே பிரிவினைத் துயரம் கரைபுரண்டு ஓடுவதையும், அதனால் அவர்கள் தலைகளைத் தாழ்த்திக் கொள்வதையும் கண்ட புல்பா வீரர்களுக்கு ஆகாத இந்தச் சோக நினைவை மாற்ற நினைத்தான். ஆனால் இதைப்போன்ற பிரிவினைச் சந்தர்ப்பங்களில் பட்டுத் தேர்ந்தால்தான் அவர்களை மறுபடியும் திடீரென்று போராட்டத்தில் குதிக்கவைக்க முடியும் என்று சிறிது நேரம் மௌனமாக இருந்தான். இயற்கையாகவே இந்த ஸ்லாவ் மக்களுக்கு ஒரு குணமுண்டு. இதைப்போன்ற குணம் வேறு யாருக்கும் இருப்பது அரிதுதான். கோஸக்குகளின் முறையில், பூமி அதிர்வதுபோலப் போர்க்குரல் கொடுத்தால் அந்தக் குரல் எல்லா கோஸக்குகளின் இதயத்திலும் சென்று தாக்கி, உடனே போரில் இன்னும் இரட்டிப்பான பலத்தோடு போரிட ஓடிவரும்படி செய்துவிடும். இந்த முறையில் இவர்கள் கடலைப்போன்றவர்கள். மற்றவர்கள் ஆழமற்ற நீர்நிலைகளைப் போலிருப்பவர்கள். சீதோஷ்ண மாறுபாடு காரணமாகப் புயலால் நிலைகெட்டுக் கிடக்கும்போது கடல், மலைகளைப்போன்ற பெரும் அலைகளைக் கிளப்பி கர்ஜித்துக்கொண்டிருக்கும். அதே சமயத்தில் சிறிய நீர்நிலைகளில் ஒருவித மாற்றமும் இல்லாமலிருக்கும். ஆனால் காற்றில்லாமல்சீதோஷ்ண நிலை அமைதியாக இருக்கும்போது வேறு எந்த நீர் நிலையையும்

விட, கடல் கண்ணாடிபோன்ற அமைதியான போக்கில் பரந்துகிடக்கும் காட்சி கண்களுக்கு இன்பம் அளிக்கும் நிலையான அற்புதம். இவர்களுடைய குணத்திற்கும், பிறருடைய குணத்திற்கும் இதுதான் வேற்றுமை.

புல்பா தன் வேலைக்காரர்களை அழைத்துத் தனியாக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் பெரியவண்டிகளைத் திறக்கும்படிகூறினான். பிறவண்டிகளையும் விட மிகப்பெரிதான அந்தவண்டியில் புல்பா பல காலமாகச் சேமித்து வைத்திருக்கும் திராட்சை மது நிறைந்திருந்தது. அதன் சக்கரங்கள் பலமான இரும்புக் கம்பிகளால் அமைக்கப்பட்டுக் குதிரைத் தோலினாலும், காளையின் தோலினாலும் மூடி வைக்கப்பட்டிருந்தன. அதோடு பல பீப்பாய்களும், பெட்டிகளும் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. புல்பா, போரின் ஏதாவது ஒரு மிக மகத்தான சந்தர்ப்பத்தில்— பின்னால் சரித்திரம் பெருமைப்படத்தக்க—அந்த வேளைக்கு முன்னே இந்த மதுவை எல்லோருக்கும் கொடுத்து, அந்தப் பெருமைக்குரிய நேரத்தில் அதைப் பருகிப் புத்துணர்ச்சிப் பெற்றுப் பெருமையைக் காப்பாற்றப் போரிடுவார்கள் என்று நம்பி அவற்றைக் கொண்டுவந்திருந்தான். வேலைக்காரர்கள் உடனே ஓடி அந்தப் பீப்பாய்களைப் பிணித்திருந்த பலமான வடக்கயிற்றைத் தங்கள் வாட்களால் அறுத்தெறிந்து தோல் மூடிகளையும் பிரித்துப் பீப்பாய்களையும் மதுக் குடங்களையும் வெளியே எடுத்தனர்.

புல்பா கோஸக்குகளைப் பார்த்து, "எல்லாவற்றையும் அள்ளிப் பருகுங்கள். அங்கிருக்கும் எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளுங்கள். உங்கள் கரங்களில் கிடைக்கும் எதைவேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுங்கள், குதிரைகளுக்குத் தண்ணீர் ஊற்றும் வாளியோ, கரண்டியோ அல்லது எதுவுமில்லாவிட்டால் உங்கள் கையுறைகளை, தொப்பிகளை... அதுவுமில்லாவிட்டால், உங்கள் கரங்களை இணைத்துக் கொண்டு எல்லாவற்றையும் அருந்துங்கள்" என்றான்.

எல்லா கோஸக்குகளும் புல்பா கூறியபடியே, வாளிகள், கரண்டிகள், அதில்லாதவர்கள், தங்கள் கையுரைகள்,

தொப்பிகள் இவற்றிலும், ஏதுமற்றோர் தங்கள் இரண்டு கரங்களைக் கோப்பை போல இணைத்துக்கொண்டும் அந்த மதுவைப்பருகினர். புல்பாவின் வேலைக்காரர்கள், இந்தக் கோஸக்குகளின்கூட்டத்திலே நுழைந்து சென்று, பீப்பாய், குடங்களில் இருந்த திராட்சை மதுவை அள்ளி அள்ளி வார்த்தனர். ஆனால் புல்பா தான் காட்டும் சைகையைப் பார்த்துவிட்டே எல்லோரும் பருகவேண்டும் என்று கூறினான். அவன் ஏதோ பேசப்போகிறான் என்பது தெரிந்தது. காரமான அந்தப் பழைய திராட்சை மது அவர்களுடைய உணர்ச்சிகளைக் கிளறிவிடும் என்பதை புல்பா அறிந்தாலும், அதே சந்தர்ப்பத்தில், சரியான ஒரு பிரசங்கம் செய்தால், அவர்களுடைய உணர்ச்சிப் பரவசத்தோடு நல்ல சக்தியையும் ஆர்வத்தையும் கூடவே கிளறிவிடலாம் என்பதை அறிந்து அவர்களிடம் பேச ஆரம்பித்தான்.

''சகோதர கனவான்களே, என்னை உங்கள் தலைவனாகத் தேர்ந்தெடுத்ததற்காக—அது மிகவும் பெருமைக்குரிய பதவியாக இருந்தாலும்—உங்களுக்கு இந்த மது விருந்து ஏற்பாடு செய்யவில்லை. நம்மை விட்டுப் பிரிந்து சென்ற தோழர்களின் நினைவுக்காகவும் இந்த விருந்தை ஏற்பாடு செய்யவில்லை. இதுவும் ஒரு மகத்தான சந்தர்ப்பம்தான் என்றாலும் அதற்கு இந்த நேரம் சரியானதல்ல. நமக்குமுன் இருக்கும் இந்தப் போர், நமது முழு சக்தியையும் உபயோகித்து, நம் கோஸக் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டிய முக்கியமான போர். ஆகவே, நாம் அனைவரும் ஒன்றாக ஒரே சமயத்தில் நமது பழம் பெரும் கிருஸ்தவ மதம் வாழ்வதற்காகவும் அம்மதம் உலகமெங்கணும் பரவி எல்லா நாஸ்திகர்களும் அதை மேற்கொண்டு ஒரே மதமாக நிலவும் நாள் வெகு விரைவில் வரவேண்டும் என்பதற்காகப் பருகுவோமாக?* நமது செட்ச் என்றென்றும் நிலைத்து நின்று, அதை அழித்தொழிக்க வரும் நாஸ்திகர்கள் அனைவரையும் விரட்டி

---

* ஆங்கிலத்தில் Toasting என்பதற்குச் சரியான தமிழ்ப் பதம் கிடையாது. அந்த மரபு நம்மவரிடையே இல்லை. இப்போது அரசாங்க விருந்துகளில், விருந்தளிப்பவரும் விருந்தாளி

விட்டு நெடுங்காலம் வாழ்ந்து இன்னும் வீரத்தில் சிறந்த பல வீரர்களையும் அழகு மிகுந்தவர்களையும் பெற்றெடுக்கவேண்டும் என்று வாழ்த்துவோமாக! இன்னும் நமது பேரன்களும் அவர்களுடைய பிள்ளைகளும் நம்மைப் பற்றிக் கேட்டு 'அவர்கள் தங்களுடைய தோழர்களைக் காட்டிக் கொடுக்காதவர்கள், அவர்களுக்குத் துரோகம் செய்யாதவர்கள்' என்று நம்மைப்பற்றிப்பேசும் நம் புகழ் ஓங்கவேண்டும் என்று வாழ்த்துவோமாக!''

''நம் மதம் வாழ்க!'' என்று அங்கு நின்றிருந்தவர்கள் எதிரொலித்தனர்.

''நம் மதம் வாழ்க!'' என்று தூரத்தில் நின்றிருந்தவர்களும் வாழ்த்தினர்.

''நம் செட்ச் வாழ்க!'' என்று புல்பா, தன் கரத்தைத் தலைக்கு மேலே தூக்கினான்.

''நம் செட்ச் வாழ்க!'' என்று முன்னே நின்றிருந்தவர்களும் இளைஞர்களும் வயோதிகர்களும் வாழ்த்தினர். வயோதிகர்கள் தங்கள் நரைத்த மீசையை உருவிக் கொண்டு அமைதியாகவும், இளம் கோஸக்குகள் உணர்ச்சி கொந்தளிக்க ஆர்வத்துடனும் வாழ்த்தினர்.

அவர்களைச் சுற்றி இருந்த பரந்த நில வெளி எங்கும் அந்தக் கோஸக்குகள் தங்கள் செட்சை வாழ்த்தும் ஒலி கேட்டது.

''கடைசியாக மதுவை முடித்துவிடுமுன், தோழர்களே நம் புகழும் உலகமெங்கும் இருக்கும் எல்லா கிருஸ்தவர்களும் வாழ்க என்று வாழ்த்துவோம்.''

---

யும், ஒருவரை ஒருவர் வாழ்த்திக்கொள்ள விருந்திற்கு வந்திருப்போர் அனைவரும் எழுந்து தங்கள் மதுவை அருந்துவது வழக்கமாகிவிட்டது. புல்பா எல்லோரையும் நிற்கவைத்துத் தான் புனிதமெனக் கருதும் எல்லாவற்றையும் குறிப்பிட்டு வாழ்த்தும் முறையில் மது அருந்தும்படி கூறுகிறான். அந்த இடங்களில், 'வாழ்க' என்ற சொல்லை உபயோகித்திருக்கிறேன்.

—மொ-ர்

அந்த நிலவெளி எங்கும் நிறைந்திருந்த அனைவரும் தங்கள் புகழும் உலகில் வாழும் எல்லா கிருஸ்தவர்களும் வாழவேண்டும் என வாழ்த்தித் தங்கள் கடைசித் துளி மதுவையும் அருந்தினர். அவர்களுடைய வாழ்த்தொலி அந்தக் குரனெங்கும் நீண்ட நேரம் ஒலித்துக்கொண்டிருந்தது.

அவர்களுடைய மதுப் பாத்திரங்கள் எல்லாம் காலியாகிவிட்டன. ஆனால் அவர்கள் தங்கள் கரங்களை இன்னும் உயர்த்திப் பிடித்துக்கொண்டே இருந்தனர். அவர்கள் கண்களிலே மதுவின் கிளு கிளுப்புப் பிரதிபலித்தாலும் அவர்களுடைய சிந்தனை எல்லாம் வேறெங்கோ இருந்தன. யுத்தத்தில் கொள்ளை அடித்தால் அவரவர்களுக்கு என்ன கிடைக்கும் என்பதைப்பற்றியோ, யாருக்கு அதிர்ஷ்டவசமாகச் செல்வம் கிடைக்கும் என்பதைப்பற்றியோ, குதிரைகள், உயர்ந்த ஆடைகள் இவைகளைப்பற்றியோ அவர்கள் நினைக்கவில்லை. பாறைகள் நிறைந்த மலை உச்சியின் மீதிருந்து தூரத்தே தெரியும் எல்லையற்ற கடலையும், அதன் ஓரத்தே பலவிதமான பறவைகளும், நாவாய்களும், படகுகளும் பிறவும் சிறு புள்ளிகளைப் போலத் தெரிவதையும், அதை ஒட்டிப்பலவித கரைகளும், நகரங்களும், காடுகளும் சிறு துணுக்குகள் போல் தோன்றுவதையும், உச்சியிலே இருந்து பார்க்கின்ற பருந்துகளைப் போல—அந்தக் கோஸக்குகள் தங்களுக்கு முன் விரிந்து கிடக்கும் நில வெளியைத் தங்களுக்குப் புரியாத ஏதோ ஒரு மங்கலான எதிர்காலத்தைப் பார்ப்பதுபோல் பார்த்துக்கொண்டிருந்தனர். தங்களுடைய வெண்மையான எலும்புகள், தங்கள் இரத்தத்தில் தோய்ந்து தூசி படிந்து, வண்டிகள் சின்னாபின்னமாகிச் சிதறி, வாட்கள் உடைந்து, அந்தப் பிரதேசமெங்கும் இருக்கும் பாதைகள், சாலைகள், புற்றரைகள் எங்கும் கொட்டிக் கிடக்கும்; தங்களுடைய தலைகளும், இரத்தக் கறை பிடித்துக் கேசத்தோடு பெயர்ந்து விட்ட மண்டை ஓடுகளும், கொத்துமீசைக் கற்றைகளும் அந்த இடமெங்கும் சிதறிக் கிடக்கும்; வல்லூறுகள் பறந்து வந்து கீழே பாய்ந்து, தங்கள் கண்களைத் தோண்டிக்

ளிறிவிடும்; ஆனால், எலும்புக் கூடுகளும், மரணமும் மண்டிக்கிடக்கும் அந்தப் போர்க்களம் எல்லையற்ற பெருமையைத்தானே பேசும். கோஸக்கின் வீரச் செயல்கள் துப்பாக்கியிலிருந்து வெளி வந்து உடனே மறைந்துவிடும் தன்மை உடையதல்ல. சிங்கத்தைப் போன்ற உள்ளத் திண்மையோடு சாதிக்கக்கூடிய எந்த வீரச்செயலையும் விட்டு வைக்கமாட்டோம். வெளுத்த தாடி தன் வளமான மார்பெங்கும் புரள தன் தலை முழுவதும் நரைத்தாலும் உடல் தளராமல் தன்னுடைய ஆழமான சக்தி ததும்பும் குரலுடன், தங்களைப்பற்றிய வீரச்செய்திகளைப் 'பண்டுரா' வாத்தியத்துடன் பண்ணிசைத்துப் பாடவும் தங்களுடைய வீரச் சாதனைகளை உலகமே கண்டு உணரும் நாள் வரும். தங்கள் புகழ் உலகெங்கும் பரவும். இனிமேல் பிறப்பவர்கள் எல்லோருமே அதைக் கேட்க விரும்புவார்கள். வார்த்தைகளின் சக்திக்கு ஈடு இணை உலகத்தில் கிடையாது. நாதமிசைக்கும் பெரியமணியில் உலகை இயற்றியவன், எப்படிச் சக்தி வாய்ந்த நாத ஒலியைச் சேர்த்து அது அசைய அசைய அதனுடைய இன்ப ஒலி நகரங்கள், கிராமங்கள், மாளிகைகள், குடிசைகள் இவற்றில் இருக்கும் எல்லோரையும் ஒரு சமமாகப் பிரார்த்தனைக்கு அழைக்குமோ அதைப் போன்ற சக்தி வாய்ந்தது... என்ற சிந்தனையில் ஆழ்ந்தனர்.

# 9

தார்த்தாரியர்களை எதிர்த்துத் தாக்கப்பாதி சபேர்ரோஷியர்கள் போய்விட்டதுபற்றி நகரத்தில் ஒருவருக்கும் தெரியாது. நகர சபையின் மணிக்கூண்டிலிருந்து கொண்டு கோஸக்குகளின் வண்டிகள் காட்டுக்குள் புகுந்து போவதைக்காவற்காரர்கள் பார்த்தார்கள். ஆனால் மறைந்திருந்து தாக்கும் தந்திரம் இது வென்று நினைத்தனர். பிரஞ்சு இன்ஜினியர் அதே அபிப்பிராயம்தான் கொண்டிருந்தான். இதன் நடுவில் கோஷிவோய் சொன்னது உண்மையாகிவிட்டது. நகரத்திற்குள் உணவுப் பண்டங்களுக்குப் பஞ்சம் ஏற்பட்டுவிட்டது. பல நூற்றாண்டு

களாகச் செய்வது போலவே, அவர்களும் தங்கள் தேவையைக் குறைத்து மதிப்பிட்டனர். மேலும் கோஸக்குகளைத் தாக்க வெளியே வந்து தங்களில் பாதிப்பேர்களை இழந்துவிட்டார்கள். மிஞ்சியவர்களும் எல்லாவற்றையும் இழந்து வெறும் கரங்களுடன் திரும்பினார்கள். யூதர்கள் இந்த நிலைமையைப் பயன்படுத்திக்கொண்டு எல்லாவற்றையும் கொள்ளையடித்தனர். அந்தச் சபோரோஷியர்கள், எங்கே எதற்காக, எவ்வளவு குரன்களுடன் சென்றனர் என்றோ மிஞ்சி இங்கே இருப்பவர்கள் எத்தனை பேர்,இவர்கள் திட்டமென்ன—சுருங்கச் சொன்னால் எல்லா விஷயங்களும் நகரவாசிகளுக்குத் தெரிந்துவிட்டது. கர்னல்களுக்குச் சிறிது தைரியம் ஏற்பட்டு யுத்தத்திற்குத் தயாரானார்கள். புல்பாவும் நகரத்தில் ஏற்பட்ட களேபரத்தைக் கேட்டுத் தக்க நடவடிக்கை எடுக்க ஆரம்பித்தான். குரன்களை அமைப்பதிலும் வேண்டிய உத்திரவுகள் பிறப்பிப்பதிலும் சுறுசுறுப்பாக இருந்தான். குரன்களை மூன்று முகாம்களாகப் பிரித்து அவைகளைச் சுற்றி வேலி இட்டது போல வண்டிகளை நிறுத்தினான். இந்த யுத்த தந்திரம் சபோரோஷியர்களைப் பல முறை வெல்ல முடியாதவர்களாக்கி விட்டிருக்கிறது. இன்னும் இரண்டு குரன்களைப் பதுங்கிக்கொள்ளும்படி உத்திரவிட்டான். பிறகு போர்க்களத்தின் ஒரு பகுதியிலே கூரான இரும்புக் கம்பங்களையும் உடைந்த துப்பாக்கிகளையும், ஈட்டிகளின் துண்டுகளையும் பூமியில் அடித்து நிறைத்தான். எதிரிகளின் குதிரைப் படைகளை இந்தப் பகுதியில் முடிந்தால் விரட்டிவிடலாம் என்று நினைத்தான். எல்லா ஆயத்தங்களும் அவனுடைய திருப்திக்கேற்ப முடிந்ததும் அவர்களுக்கு மற்றொரு பிரசங்கம் செய்தான். அவர்களுக்கு உணர்ச்சி ஊட்ட அல்ல—அவர்கள் ஏற்கனவே உணர்ச்சி மிக்கவர்களாகத்தான் இருந்தார்கள்—தன்னுடைய மனப்பளுவை இறக்கவே அவன் பேச ஆரம்பித்தான்:

"கனவான்களே, உங்களுக்குத் தோழமைப் பண்பைப் பற்றிச் சிலவற்றைக் கூற விழைகின்றேன்; நம் நாடு எவ்வளவு பெருமை வாய்ந்தது என்பதை நீங்கள் எல்லோரும்

உங்கள் தந்தைமார், பாட்டன்மார்களிடமிருந்து அறிந்திருப்பீர்கள். நம் சக்தியால் கிரேக்க தேசம்கூட நம்மைப் பற்றித்தெரிந்துகொள்ளும்படி செய்தவர்கள் நாம். கான்ஸ்டான்டி நோபிளிலிருந்து நமக்குக் கப்பம் கட்டிக்கொண்டிருந்தவர்கள் உண்டு. நமது நகரங்கள் செழித்து வளர்ந்திருந்தன. நமக்குப் பல கோவில்கள் இருந்தன. நமக்கு அரச குமாரர்கள் பலர் இருந்தனர்—கத்தோலிக்கர்களைப் போன்ற சமய வேறுபாடு கொண்டவர்கள் அல்ல—ருஷ்ய ரத்தம் ஓடும் அரசகுமாரர்கள். இவைகளை எல்லாம் நாம் கொள்ளை கொடுத்தோம். அனைத்தையும் அழித்து விட்டார்கள். பரிதாபத்திற்குரிய அனாதைகளாய், நாம் மட்டும் தான் மிஞ்சினோம். மகத்தான தன் வீரப் புருஷனை இழந்த கைம்பெண் மாதிரி, நம் நாடுமட்டுமே மிஞ்சியது. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் தோழர்களே, நாம் தோழமைப் பண்பறிந்து ஒன்று கூடினோம்! இதற்காகத்தான் நம் தோழமை நிற்கிறது. தோழமை, உறவு போன்றது—உலகத்தில் வேறெதுவும்—எந்த உறவும் கிடையாது. ஒரு தந்தை தன் பிள்ளையை நேசிக்கிறான்; தாயும் தன் பிள்ளையை நேசிக்கிறாள்; பிள்ளையும் தன் தாய் தந்தையரை நேசிக்கிறது; ஆனால் இது வேறு விஷயம். காட்டு விலங்குகூடத்தான் தன் குட்டியை நேசிக்கிறது! ஆனால் மனிதன் மட்டுமே இரத்தக் கலப்பில்லாத மன ஒற்றுமையைக் கண்டு நேசிக்கும் பண்பு படைத்தவன். பிற தேசங்களில்கூட இதைப் போன்ற தோழமைப் பண்பு இருந்ததுண்டு. ஆனால் நம் ருஷ்ய மண்ணில் இருந்ததைப் போல வேறெங்கும் இருந்ததில்லை. உங்களில் பலர் அன்னிய நாடுகள் பலவற்றைச் சுற்றியவர்கள். அங்கு நம்மைப்போன்ற கடவுளின் படைப்பால் பிறந்த பலரைச் சந்தித்துப் பேசி இருப்பீர்கள். உங்களுடைய தேசத் தோழர்களைப் போலவே அவர்களுடன் நீங்கள் பேசி இருக்கலாம்; ஆனால் மனத்தோடு மனம் பேசிக்கொள்ளும் நேரம் வரும்போது உங்களைவிட அவர்கள் கெட்டிக்காரர்களாய் இருப்பதைப் பார்க்கிறீர்கள். அப்போது, அவர்கள் உங்களைப்போலவே இருந்தாலும், வேறு மனிதர்களைப்போலத் தோன்றுகிறார்கள். இல்லை! ருஷ்ய ஆத்மா நேசிப்பதுபோல,...... நேசிப்பதென்றால் உள்ளத்தோடு

மட்டுமல்ல, ஆண்டவன் உங்களுக்குக் கொடுத்த அனைத்தையும் கொண்டு நீங்கள் நேசிப்பதுபோல, முழுமனத்தோடு......'' இங்கு புல்பா தன் கரங்களை ஆட்டினான்; தன் நரைத்த தலையை அசைத்தான்; பிறகு தன் மீசைகளை நீவி விட்டுக்கொண்டு மறுபடியும் ''இல்லை, வேறு எவனும் அப்படி நேசிக்க முடியாது! நம் நாட்டிலே ஒழுங்கீனமான பல வழக்கங்கள் வேரூன்றி விட்டன என்பது எனக்குத் தெரியும். தங்களுடைய கோதுமைக் களஞ்சியங்களையும் வைக்கோல் போர்களைப் பற்றியும் தங்கள் மதுக்குடங்களைப் பற்றியுமே அக்கரை மிகச் செலுத்தும் சிலர் இருக்கிறார்கள். பிற நாட்டின் அருவருக்கத் தகுந்த வழக்குகளை அப்படியே பின்பற்றுகிறார்கள். தங்கள் தாய்மொழியையே வெறுக்கிறார்கள். ஒருவன் மற்றவனோடு பேசக் கூசுகிறான். உள்ளமற்ற மிருகங்களைக் கடைகளில் விற்பதுபோல, தன் சொந்த தேசத்தவனையே விற்கிறார்கள். ஒரு சர்வசாதாரண அன்னிய அரசனுடைய— அரசன்கூட இல்லை, சாதாரண போலந்துப் பிரபுவின் தயவை, அவன் தன் மஞ்சள்நிற ஜோடுகளால் இவன் வயிற்றில் எட்டி உதைத்தாலும்—அவனுடைய தயவைத் தன் தோழமைப் பண்பைவிட உயர்ந்தது என எண்ணுகிறான். ஆனால் தோழர்களே, இவ்வளவு கேவலமான கீழ்த்தரமான மண்ணிலே புரண்டு கொடுக்கும் இவனிடம் கூட அந்த ருஷ்ய உணர்வை நீங்கள் காணலாம். என்றாவது ஒருநாள் அந்த மோசமான நிலையிலிருக்கும் அந்தக் கயவன்கூடத் தன் குற்றங்களை உணர்ந்து கைகளைப் பிசைந்துகொண்டு, தலைமயிரைப் பிய்த்துக்கொண்டு தான் இதுவரை செய்த அவகேடான செயல்களுக்கு வருந்தி அதற்குப் பிராயச்சித்தமாக எவ்வளவு துன்பங்கள் வந்தாலும் அனுபவித்துப் பெருமை தேடிக்கொள்வான். தோழமை என்றால் ருஷ்ய மண்ணில் என்ன பொருள் என்பதை அவர்கள் எல்லாம் அறிந்து கொள்ளட்டும். இறப்பதைப் பற்றிக் கூறவேண்டுமானால்—நம்மைப் போல் மரணம் அடைகிறவர்கள், அவர்களில் ஒருவர்கூட இருக்க முடியாது; ஆம், ஒருவன்கூடக் கிடையாது! அவர்களுடைய மூஞ்சுறு உள்ளம், அவர்களை அப்படிச் செய்யவிடாது.''

அந்தத் தலைவன் பேசிவிட்டு மௌனமாகி விட்டான். கோஸக்குகளின் வீரத்தில் செழித்து வளர்ந்த அவன் வெள்ளி போன்று நரைத்த தலை இன்னும் ஆடிக்கொண்டே இருந்தது. அங்கிருந்தவர்கள் எல்லோரும் அவனுடைய பேச்சைக் கேட்டு உணர்ச்சியால் தங்கள் உள்ளங்களைக் கட்டுப்படுத்த முடியாமல் திணறினார்கள். அவனுடைய ஒவ்வொரு சொல்லும் நேரே அவர்களுடைய உள்ளத்தைச் சென்று தொட்டுவிட்டது. வயோதிகர்கள் அசையவே முடியாமல் குனிந்த தலைகளுடன் தங்கள் கண்களில் பெருகிவரும் கண்ணீரைத் துடைத்த வண்ணம் நின்றிருந்தனர். அதன் பிறகு எல்லோரும் தங்கள் கரங்களையும் தலைகளையும் சொல்லி வைத்தாற்போல் அசைத்தனர். அவர்களின் உள்ளங்களிலே இதுவரை படிந்துகிடந்த அருமையான உன்னதமான பல எண்ணங்களையும்—நல்ல காரியத்திற்காக அனுபவிக்கும் துன்பங்களைப் பற்றிய ஆசைக் கனவுகளையும், வாழ்விலே எதிர்ப்படும் துயரச் சுமைகளையும், அவர்கள் காட்டும் வீரம் இவைபோன்ற இனிமையான ஆழ்ந்த எண்ணங்களையும்—இளைஞர்கள் இதுவரை இது போன்ற நிகழ்ச்சிகளைக் காணாது, ஆர்வ மிகுந்த பல சாதனைகளை நிறைவேற்றித் தங்கள் பெற்றோர்களுக்கு எல்லை இல்லாத இன்பத்தையும் தரவேண்டும் என்ற வாலிப காலத்து ஆர்வத் துடிப்புகளையும் புல்பா தன் பிரசங்கத்தின்மூலம் கிளறிவிட்டான்.

இதற்குள் எதிரிகளின் படைகள் நகரத்திற்கு வெளியே புரண்டு வந்தன. முரசுகள் முழங்கின; தாரைகள் ஆர்த்தன; பிரபுக்கள் பலர் தங்கள் சட்டைகளை முழங் கைகள்வரை சுருட்டிக்கொண்டு தங்கள் வேலைக்காரர்கள் புடைசூழ வெளியே வந்தனர். அந்தப் பருத்த கர்னல் உத்திரவிட்டான். வீரர்கள் பலர் கோஸக்குகளின் முகாமை நோக்கிக் கரங்களில் துப்பாக்கிகளுடன் பயங்கரமாகத் தங்கள் கண்கள் ஒளிவீச, பித்தளைத் தலைக் கவசங்கள் மின்ன முன்னேறி வந்துகொண்டிருந்தனர்.

எதிரிகள் துப்பாக்கிக் குண்டுகள் விழும் தூரத்திற்கு வந்துவிட்டதைக் கண்ட கோஸக்குகள் தங்கள் பெரிய

துப்பாக்கிகளைக் கொஞ்சம்கூட அவகாசம் விடாமல் சுட்டுக்கொண்டே இருந்தனர். அந்தக் குண்டுகளின் பேரிரைச்சல் நிலவெளியெங்கும் எதிரொலித்துப் பிறகு பயங்கரமான கர்ஜனையைப் போல மாறியது. அந்தப்பிர தேசமே புகையால் மூடிக்கிடந்தது. சபோரோஷியர்கள் இடைவிடாமல் சுட்டுக்கொண்டே இருந்தனர். குண்டு களைச் சரமாரியாக வீசுவதைக் கண்ட எதிரிகளுக்கு அவர் கள் எப்படி மறுபடியும் துப்பாக்கிகளில் குண்டுகளை நிறைக்கிறார்கள் என்றே புரிந்துகொள்ளமுடியவில்லை. துப் பாக்கிகளை இயக்குபவர்கள் போக மீதி யிருந்தவர்கள் அவைகளுக்குக் குண்டுகளைச் சேர்த்துக் கொண்டே இருந் தனர். அங்கு குண்டு மாரியினால் உண்டான புகை மண்ட லத்தில் அகப்பட்டுக்கொண்ட வீரர்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. குண்டுகளின் தொகையும் அதிகரித்தன. போலந்துக்காரர்களால் எதிர்த்து முன்னேற முடியவில்லை. ஆகவே அந்தப் புகைக் கூட்டத்திலிருந்து தப்பிக்க அவர் கள் பின் நோக்கி விரைந்தபோது அவர்களில் எஞ்சியவர் கள் மிகச் சொற்பமாகத்தான் இருந்தனர். மற்றவர்களைக் காணவில்லை. கோஸக்குகளில் நூற்றுக்கு இருவர்தான் இறந்தனர். இன்னும் கோஸக்குகள் ஒரு கண நேரமும் இடைவேளை இல்லாமல் தொடர்ந்து தங்கள் துப் பாக்கிகளை முழக்கிக்கொண்டே இருந்தனர். அன்னிய தேசத்து இன்ஜினியர் கூட அவர்களுடைய யுத்த தந் திரத்தைக் கண்டு வியந்து அங்கேயே பலர் முன்னிலையில், "இந்தச் சபோரோஷியர்கள் நல்லவீரர்கள்; மற்ற தேசங் களில் கூட யுத்தங்கள் இப்படித்தான் நடத்தப்படவேண் டும்" என்று கூறினான். அவன் உடனே எதிரிகளின் முகாமை நோக்கிப் பீரங்கிகளை முடுக்கிவிட வேண்டும் என்று யோசனை கூறினான். எஃகினால் செய்யப் பட்ட அந்த அகன்ற வாயுள்ள பீரங்கியிலிருந்து பூமி யையேஅதிர வைக்கும் பயங்கர சப்தத்துடன் வெளி வந்த குண்டு ஒரு பெரிய புகை மண்டலத்தையே கிளப்பிவிட் டது. அந்தக் குண்டுகளின் புகை நாற்றம் அடுத்திருந்த பல நகரங்களையும் வீதிகளையும், சோலைகளையும் கப்பிக் கொண்டது. ஆனால் அதை மிக உயரத்தில் குறிவைத்து முழக்கியதனால் தீ கக்கும் அந்தக் குண்டுகள்

கோஸக்குகளின் தலைகளுக்கு மேலே கோஷமிட்டுக் கொண்டுபோய்த் தூரத்து மைதானத்தில் விழுந்து புதைந்துவிட்டன. அந்த இடத்திலிருந்து மண்ணும் கல்லும் மிகஉயரப் பறந்து கீழே விழுந்தன. இதைக்கண்ட அந்தப்பிரஞ்சு இன்ஜினியர் தன் தலை முடியைப் பிய்த்துக் கொண்டு தன்னைச் சுற்றி கோஸக்குகள் வீசும் குண்டு களையும் பொருட்படுத்தாமல் தானே அந்தப் பீரங்கியை இயக்க முன் வந்தான்.

நெஸமி, ஸ்டபிளிகோவ் ஆகிய இரண்டு சூரன்களும் பேராபத்துக்குள்ளாகி இருப்பதைக் கண்ட புல்பா இடியைப் போன்ற குரலில், "வண்டிகளை விட்டு உடனே விலகுங்கள்; குதிரைகளில் ஏறுங்கள்" என்று கத்தினன். ஆனல் ஓஸ்டாப் இந்தச் சமயத்தில் எதிரிகளின் மத்தியிலே பாய்ந்து சென்று பீரங்கியை இயக்குவதற்காக அங்கு நின்று கொண்டிருந்தவர்களின் கரங்களிலிருந்து தீக்குச்சிகளைத் தட்டிவிடாமலிருந்தால் கோஸக்குகள் தப்பித்துக் கொள்ள நேரம் கிடைத்திருக்காது. ஆனல் ஓஸ்டாப் ஆறு 'கன்னர்'களின் குச்சிகளைத்தான் தட்ட முடிந்தது. மற்ற நால்வரையும் அணுகு முன் போலந்து வீரர்கள் அவனை விரட்டி விட்டனர். இதற்குள் அந்தப் பிரஞ்சு இன்ஜினியர் தானே ஒரு தீக்குச்சியை எடுத்து இதுவரை கோஸக்குகள் எங்குமே கண்டிராத அவ்வளவு பெரிய பீரங்கியை இயக்க முற்பட்டான். அந்தப் பீரங்கியின் திறந்த வாய் பல ஆயிரக் கணக்கான உயிர்களைக் குடிக்கக் காத்திருந்தது. அது இடியைப்போல முழங்கவும் அதோடு சேர்ந்து இன்னும் மூன்று பீரங்கிகளும் இணைந்து பூமியையே அதிரவைத்துவிட்டன. அவைகள் விளைவித்த மரணங்களுக்குக் கணக்கே இல்லை. எத்தனையோ கோஸக்குகளின் தாய்மார்கள் தங்கள் வற்றிய கரங்களுடன் உலர்ந்துபோன மார்பின் மீது அடித்துக் கொண்டு தமது புதல்வர்களுக்காகப் புலம்பி இருப்பார்கள். குளுகே, நெமிரோவ், செனினிகோவ் போன்ற நகரங்களில், எத்தனையோ கைம்பெண்களை உண்டு பண்ணி விட்டது. அந்தப் பரிதாபத்துக்குரிய பெண்கள் நகர சந்தைகளுக்கு ஓடி, வருவோர் போவோர்களில் ஆர்வத்துடன்

தங்களுக்கு வேண்டியவர் யாரேனும் இருப்பார்களா என்று வீணில் அலையப் போகிறார்கள். எத்தனையோ சேனைகள் அந்தப் பக்கமாகச் சென்றாலும் அவர்களுக்கு வேண்டியவர்கள் ஒருவரையும் அவர்களில் காண முடியாது.

நெஸமி குரனின் பாதி வீரர்கள் இருந்த இடமே தெரியவில்லை. தங்க நாணயங்களைப் போலத் தலை விரித்தாடிக்கொண்டிருந்த வயலில் ஆலங்கட்டி மழை பெய்து அவைகளை அப்படியே சாய்த்துவிடுவதுபோல, எல்லோரையும் அந்தக் குண்டு அமிழ்த்திவிட்டது.

அந்தக் கோஸக்குகளின் ஆத்திரத்தைப் பார்க்க வேண்டுமே! அவர்கள்தான் என்ன வேகமாக முன்னேறிப் பாய்ந்தனர்! தன்னுடைய குரனின் நல்ல வீரர்களில் பாதிப்பேர் அழிந்துபோனதைக் கண்ட தலைவன் குகுபென்கோ எவ்வளவு கோபத்தோடு பாய்ந்தான்! அவனோடு அவனுடைய வீரர்களும் ஒருகண நேரத்திற்குள் எதிரிகளின் அணிகளை வெட்டிச் சாய்த்துக்கொண்டு முன்னேறி விட்டனர். அவனுடைய பயங்கரமான கோபாவேசத்தில் தன் முற்பட்ட முதல் எதிரியை முட்டைக் கோசின் தலையைச் சீவுவதுபோலச் சீவி விட்டுப் பல எதிரிகளைக் குதிரையிலிருந்து கீழே அடித்து வீழ்த்திப் பல குதிரைகளையும் எதிரிகளையும் தன் ஈட்டியால் குத்திக் கொன்று எதிரிகளின் நடுவிலே சென்று போரிட்டுக் கொண்டிருந்தான். அந்தப் பீரங்கி வைத்திருக்கும் இடத்திற்குச் சென்று, ஒரு பீரங்கியைக் கைப்பற்றினான். அதே சமயத்தில், உமண் குரனின் தலைவனும், ஸ்டிபென் குஸ்காவும், பெரிய பீரங்கியைக் கைப்பற்ற முயல்வதைப் பார்த்துத் தன் முயற்சியை விட்டுத் தன் வீரர்களுடன் எதிரிகளின் மற்றொரு கூட்டத்திற்குள் புகுந்தான். எங்கெங்கு நெஸமி குரனின் கோஸக்குகள் புகுந்தார்களோ, அங்கெல்லாம் வெட்டப்பட்ட எதிரிகளின் தலைகள் வீதியையே நிரப்பிக் கொண்டிருந்தன. அவர்களுடைய கூட்டம் சிறுகச் சிறுகக் குறைந்து கொண்டே இருந்தது. அவர்களில் பலர் வெட்டி வீழ்த்தப்பட்டுக் கொண்டே இருந்தனர். வண்டிகளின் அருகே வவுட்சன்

கோவும், அவைகளுக்கு முன்னே டெக்டியரென்கோவும், அவைகளுக்குப் பின்னே குரன் தலைவனுன வெர்டி இவ்ஸ் டும் போரிட்டுக் கொண்டிருந்தனர். டெக்டியரென்கோ இரண்டு பிரபுக்களை ஈட்டியால் குத்தி வீழ்த்தி விட்டு, விட்டுக் கொடாமல் இன்னும் போரிட்டுக் கொண்டிருந்த மூன்ருமவனேடு மல்லுக்கு நின்றிருந்தான். அந்த எதிரி நன்ருக வளர்ந்து சுறுசுறுப்புடனும், நல்ல ஆடை அணி களும் பூண்டு பல சேவகர்கள் சூழப் போரிட்டுக் கொண் டிருந்தான். அவன் ஆத்திரத்தோடு டெக்டியரென்கோ வைப் பின்னுக்குத் தள்ளிக் கீழே வீழ்த்தி விட்டுத் தன் வாளை எடுத்து ஓங்கி, "எந்த கோஸக் நாயும் என்னேடு போரிடத் துணியக் கூடாது" என்று கூறிக் கொண்டே வெட்டினுன்.

"இதோ நான் உன்னைத் தொலைத்துவிடுகிறேன்" என்று மோஷி ஷில்லோ முன்னே பாய்ந்தான். அவன் ஒரு பலம் பொருந்திய கோஸக். பலமுறை அவன் கடற்போர்க்காலங் களில் தலைவனுக இருந்து, பல இன்னல்கள் பட்டுத் தேர்ந் தவன். ஒரு சமயம் துருக்கியர்கள் இவனையும், இவ னுடைய கோஸக்குகளையும் டெர்பிசோன்ட் என்ற இடத்தில் பிடித்துத் தங்கள் புராதன சண்டைக் கப்ப லுக்கு அடிமைகளாக்கி விட்டனர். அவர்களுடைய கால் களையும் கரங்களையும் சங்கிலிகளால் பிணித்து வாரத் திற்கு ஒரு முறை சோளமும் குடிக்கக் கடல் நீரையும் கொடுத்தனர். அந்த அடிமைகள் தங்கள் பழம் பிரிவான மதத்தை இழக்க முற்படாமல் எல்லா இன்னல்களையும் பொறுத்துக் கொண்டனர். ஆனுல் தலைவன் மோஷி ஷில்லோ இவைகளைப் பொறுக்க முடியாமல், தனது புனிதமான மதத்தைத் துறந்து பழி குடிகொண்ட தன் தலையில் அவர்களுடைய சாபக்கேடான தலைப்பாகை அணிந்து கொண்டு பாஷாவின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி அவனுடைய சாவிகளை வைத்திருக்கும் நிலைக்கு உயர்ந்து விட்டு, அடிமைகளை எல்லாம் அடக்கி ஆள ஆரம்பித்தான். பாவம், அந்த அடிமைகள் இதைக் கண்டு இன்னும் அதிகத் துயரம் அடைந்தார்கள். தங்களைச் சேர்ந்த ஒருவனே தம் மதத்தைத் துறந்து

அக்கிரமக்காரர்களோடு சேர்ந்து கொள்ளும் போது நாஸ்திகர்களான அவர்களைக் காட்டிலும் இவனுடைய கொடுமை பொறுக்க முடியாததாகி விடும் என்பதை அவர்கள் அறிவார்கள். அதைப் போலவே ஷில்லோ அவர்களை மூவர்மூவராகச் சங்கிலியால் பிணித்துக் கொடுமையான சாட்டைகளால் அவர்கள் எலும்பு வரை தோலறுந்துபோகும் வண்ணம் அடித்தான். அவர்களின் கழுத்துக்களில் கருணை சிறிது மின்றி அறைந்தான். துருக்கியர்கள் இவ்வளவு நல்ல வேலைக்காரன் கிடைத்ததைக் கண்டு தங்கள் கட்டுத்திட்டங்களை மறந்து மது வருந்தி விருந்துண்டு களித்திருக்கும் சமயத்தில் ஷில்லோ, அறுபத்தாறு சங்கிலிச் சாவிகளையும் அந்த அடிமைகளிடம் கொடுத்து விடவே அவர்கள் தங்கள் சங்கிலிகளை அவிழ்த்துக் கடலில் எறிந்துவிட்டு, வாட்களை எடுத்துக் கொண்டு துருக்கியர்களை வெட்டி வீழ்த்தி விட்டு, நிறையச் செல்வங்களைக் கொள்ளையடித்துக்கொண்டு தங்கள் ஊருக்குத்திரும்பினர். அதன் பிறகு வெகுகாலம் 'பண்டுரா' வாத்தியக்காரர்கள் ஷில்லோவின் வீரப் பெருமையைப் பாடிப் புகழ்ந்தனர். அவனைத் தலைவனாகக்கூடத் தேர்ந்தெடுத்திருப்பார்கள். ஆனால் அவன் ஒரு திடசித்த மில்லாதவன். ஒரு சமயம் அவன் சாதனைகள் எல்லா அறிஞர்களையும் திணரடிக்கும் வகையில் அமையும்; மற்றொரு சமயம் அவனுக்குச் சபல சித்தம் ஏற்பட்டுவிடும். அவன் பணத்தை யெல்லாம் வெறும் மதுவிலும், விருந்துகளிலும் சூறையாடிவிட்டான். செட்சில் எல்லோரிடமும் கடன் பட்டிருந்தான். இதற்கெல்லாம் மேலாக ஒருநாள் இரவு மற்றொரு குரணிலிருந்த ஒரு கோஸக்கின் எல்லாவற்றையும் அப்படியே ஒரு சாதாரணத்திருடன்போலத் திருடிக் கொண்டுபோய் மதுக் கடையில் அடகு வைத்துவிட்டான். இந்த அவகேடான செயலுக்காக அவனைச் சந்தையில் ஒரு கம்பத்தில் கட்டி வைத்து அவன் அருகே ஒரு தடியையும் வைத்துக் கோஸக் வழக்கப்படி போவோர் வருவோர் அவனைத்தங்கள் சக்திக்கேற்பப் புடைக்கும்படி செய்தனர். ஆனால் அவனுடைய பழைய தீரச் செயல்களை உணர்ந்த சபோரோஷியர்கள் ஒருவர் கூட அவனை அடிக்கத் துணியவில்லை. மோஷி ஷில்லோ அத்தகையவன்.

"கசடனே, உன்னை அடிக்கக்கூடியவர்கள் இங்கு அனந்தம்பேர்" என்று கத்திக்கொண்டே தன் எதிரியைத் தாக்கினன்.

அவர்கள்தாம் என்ன மூர்த்தண்யமாகச் சண்டை செய்தனர்! ஒருவருக் கொருவர் பரிமாறிக் கொண்ட அடிகளினுல் அவர்களுடைய, தோளிலும் மார்பிலும் அணிந்திருந்த கவசங்கள் அழுந்தின. பேய் போன்ற போலந்து வீரன் தன் வாளைக் கொண்டு ஷில்லோவின் மார்புக் கவசத்தையும் ஊடுருவிச் சதையையும் தீண்டி விட்டான். அவனுடைய சட்டை இரத்தச் சிவப்பாகி விட்டது. ஆனல் ஷில்லோ அதைப் பொருட்படுத்தாமல் தன் பலம் பொருந்திய முஷ்டியை ஓங்கி (அவன் முஷ்டி தான் எவ்வளவு வீரம் பொருந்தியது!) தன் எதிரியை வீழ்த்தி விட்டான். அவனுடைய தலைக் கவசம் சுக்கு நூருகிக் கீழே மூர்ச்சித்து வீழ்ந்து விட்டான். ஷில்லோ அப்படியும் அவனை விடாமல் அவனைத் தொடர்ந்து வெட்டிக்கொண்டே இருந்தான். உன் எதிரியைக் கடைசிவரை வெட்டாதே கோஸக், நீயும் சற்றுத் திரும்பிப்பார்! ஆனல் அந்தக் கோஸக் திரும்பிப்பார்க்கவில்லை. இறந்த எதிரியின் சேவகர்களில் ஒருவன், ஷில்லோவின் கழுத்தில் குத்திவிட்டுப் புகையில் மறைந்து விட்டான். அதனுல் அவனைப் பிடிக்க முடியாமல் போய்விட்டது. துப்பாக்கிகளின் கர்ஜனை அவனைச்சுற்றி எங்கும் கேட்டது. தன் காயம் பயங்கரமானதென்பதை உணர்ந்த அவன் மயக்க முற்றுத்தன் காயத்தைக் கரங்களால் அழுத்திக்கொண்டே கீழே விழுந்து தன் தோழர்களைப்பார்த்து "சகோதர கனவான்களே, நான் போய்வருகிறேன். புனிதமான ருஷ்ய பூமி என்றென்றும் நிலைத்து வாழ்ந்து, அதன் பெருமை என்றும் வாழட்டும்!" என்று வாழ்த்தினன். அவன் கண்கள் இருண்டன. அந்தக் கோஸக்கின் மகத்தான உடலிலிருந்து உயிர் பிரிந்துவிட்டது.

ஆனல் சடோரோசனியும் வெர்டிகிவ்ஸ்டும் போலந்து வீரர்களின் அணிகளைப் பெயர்த்துமுன்னேறிக் கொண்டு வந்தனர்.

புல்பா குரன்களின் தலைவரை அணுகி, "சகோதரர்களே நிலைமை எப்படி இருக்கிறது? துப்பாக்கி மருந்துகள் இன்னும் இருக்கின்றனவா? கோஸக்கின் சக்தி குறைந்து விட்டதா என்ன? கோஸக்குகள் என்றும் விட்டுக் கொடுப்பதில்லை!" என்றான்.

"குண்டுமருந்து இன்னும் இருக்கிறது தந்தையே, கோஸக்குகளின் சக்தி இன்னும் குறையவில்லை! நம் கோஸக்குகள் என்றும் விட்டுக்கொடுக்க மாட்டார்கள்!"

கோஸக்குகள் மறுபடியும் எதிரிகளை எதிர்த்துக் கொண்டே இருந்தனர். ஒல்லியான கர்னல் தன் படைகளைக் கூட்ட, எட்டுவித வர்ணமுள்ள தன் கொடியை உயர்த்தினான். அப்போர்க்களமெங்கும் சிதறிக் கிடந்த எதிரிகள் ஒன்றுகூட ஆரம்பித்தனர். இதைக் கண்ட நெஸமி குரனின் தலைவன் குகுபென்கோ எதிரிகளின் அணியைத் தன் வீரர்களோடு சென்று பிளந்து, அந்தக் கர்னலையே எதிர்க்க ஆரம்பித்தான். அவன் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் திரும்பி, குதிரையுடன் படைகளை விட்டு ஓடினான். குகுபென்கோ அவனுடைய படைகளிடமிருந்து அவனைத் துண்டித்து, வெகுதூரம் விரட்டிக் கொண்டு சென்றான். தன் குரனோடு, பக்கங்களில் போரிட்டுக்கொண்டிருந்த ஸ்டிபன் குஸ்கா இதைக்கண்டு, அந்தக் கர்னலை வழி மறிக்க, தன் குதிரையைத் தட்டி விட்டுத் தன் தலையைக் குனிந்துகொண்டு, தன் கரத்திலிருந்த சுருக்குக் கயிற்றைச் சமயம்பார்த்து அந்தக் கர்னலின் கழுத்திலிட்டுச் சுருக்கினான். முகம் வெளுத்துப்போன அந்தக் கர்னல், தன் கரங்களால் கழுத்தை நெறிக்கும் அந்தச் சுருக்குக்கயிற்றை அவிழ்க்கமுயன்றான். ஆனால் அதே சமயத்தில் சக்திவாய்ந்த கரம் ஒன்று ஈட்டியை அவன் வயிற்றில் பாய்ச்சித் தரையோடு தரையாக்கி விட்டது. ஆனால் குஸ்காவும் மீண்டுவிடவில்லை. கோஸக்குகள் உதவிக்கு வருவதற்குள் நான்கு ஈட்டிகள் அவனை அப்படியே கொத்தித் தூக்கிவிட்டன. பாவம் அவனால், "நம் எதிரிகள் அனைவரும் அழியட்டும், நம் ருஷ்ய பூமி என்றும் இன்பமாக விளங்கட்டும்" என்று மட்டுமே சொல்ல முடிந்தது.

கோஸக்குகள் களத்தைத் திரும்பிநோக்கினர். மெட்ட விட்சயா, வீரர்களின் ஒரு பக்கமாக இருந்துகொண்டு ஒவ்வொரு எதிரியாகத் தன்கத்தியால் வீழ்த்திக்கொண்டே இருந்தான். மற்றொரு பக்கம் தலைவன் நெவிலிச்சி தன் வீரர்களோடு வண்டியின் அருகே போரிட்டுக்கொண்டிருந்தான். சக்ருடிபோ எதிரிகளைக் கொன்று குவித்துக் கொண்டிருந்தான். தூரத்தில் பிஸரன்கோ ஒரு முழுக் கூட்டத்தையே எதிர்த்துத் தாக்கிக் கொண்டிருந்தான். வண்டிகளின் மேலே பலர் தங்கள் முஷ்டிகளால் ஒருவரை ஒருவர் தாக்கிக்கொண்டிருந்தனர்.

புல்பா அவர்களுக்கு முன்னே வந்து "சகோதரர்களே, நிலைமை எப்படி இருக்கிறது? துப்பாக்கி மருந்து இன்னும் இருக்கின்றனவா? கோஸக்குகளின் சக்தி குறைந்து விட்டனவா என்ன? கோஸக்குகள் என்றும் விட்டுக்கொடுப்பதில்லை!" என்றான்.

"குண்டு மருந்து இன்னும் இருக்கிறது தந்தையே! கோஸக்குகளின் சக்தி இன்னும் குறையவில்லை! நம் கோஸக்குகள் என்றும் விட்டுக்கொடுக்க மாட்டார்கள்!"

போவ்டியுக், தன் இருதயத்துக்குக் கீழே குண்டு பட்டு விழுந்துவிட்டான். அவன் கடைசி மூச்சோடு, "நான் இந்த உலகத்தை விட்டுப் பிரிவதற்காக வருந்தவில்லை. ஆண்டவன் எல்லோருக்கும் இதைப் போன்ற முடிவைக் கொடுக்கவேண்டும்! ருஷ்யபூமி என்றும் புகழுடன் நின்று நிலவட்டும்!" என்று வாழ்த்தி விட்டு இறந்தான். அந்தக் கிழவனின் உயிர், ஏற்கனவே மேலுலகத்திற்குச் சென்றுவிட்ட வயோதிகர்களிடம், ருஷ்யபூமியில் தங்கள் புனிதமான மதத்திற்காக எப்படிப் போராடினார்கள் என்றும், இன்னும் அதற்காக எப்படி உயிரைத் தியாகம் செய்கிறார்கள் என்றும் கூறுவதற்காகப் போய்விட்டது.

அதன்பிறகு குரானின் தலைவனான பாலபான் கீழே வீழ்ந்தான். ஈட்டி, குண்டு, கத்தி மூன்றினாலும் காயம் பட்டுக்கிடந்தான். கோஸக்குகளில் வீரத்திற்குப் பெயரெடுத்தவன். பல கடற்போர்களைத் தலைவனாக இருந்து நடத்தியவன். எல்லாவற்றையும் விட அனடோலியாக்

கரையில் அவன் செய்த சாகஸம்தான் மிகப் புகழ் வாய்ந்தது. பலவிதமான உயர்தர அணிகளையும், விலையுயர்ந்த துருக்கிய சரக்குகளையும் கொள்ளை யடித்துக்கொண்டு, திரும்பும்போது, துருக்கிய பீரங்கிகளுக்கு இலக்கானார்கள். படகுகளின் வெகு அருகில் வந்து விழுந்த ஒரு பீரங்கிக் குண்டின் வேகத்தில் படகு கவிழ்ந்ததால் பல கோஸக்குகள் தண்ணீரில் மூழ்கினர். ஆனால் புணை வைத்துக் கட்டப்பட்ட அந்தப் படகுகள் கடலில் அமிழ்ந்து விடாமல் தப்பித்துக் கொண்டன. பாலபான் தன் துடுப்புக்களை வேகமாக இயக்கிச் சூரியனுக்கு நேரே துருக்கியர்கள் கண்களுக்குத் தெரியமுடியாத வகையில் நின்றான். பிறகு இரவு முழுவதும் படகுகளில் நிறைந்திருந்த தண்ணீரை வாரி இறைத்துவிட்டுப் படகுகளில் ஏற்பட்ட சிறு பொத்தல்களை அடைத்துத் தங்கள் அகன்ற கால் சட்டைகளைக் கிழித்துப் பாய்மரம் செய்து கட்டித் துருக்கியரின் வேகமான பல கப்பல்களை முந்திக்கொண்டு வந்து சேர்ந்தான். அவர்கள் ஒரு தொந்தரவும் இல்லாமல் வந்து சேர்ந்ததோடல்லாமல் கீவ் நகர மதஸ்தாபனத் தலைமைக் குருவுக்குத் தங்கத்தாலான ஆடையொன்றையும் பரிசாகக் கொண்டுவந்து கொடுத்தனர். புனித மேரி மாதாவின் கோவில் ஒன்றுக்கு வெள்ளியினால் செய்த சிலை ஒன்றும் உதவினார்கள். 'பண்டுரா' இசைவாத்தியக் குழுவினர் வெகுகாலம் பாலபானின் புகழையும் அவனுடைய கோஸக்குகளின் பெருமையையும் பாடிப் புகழ்ந்து கொண்டிருந்தனர். மரணகாயம்பட்டு அவஸ்தைப்படும் போதும் அவன், "சகோதரர்களே, நான் வீர மரணமே அடைந்தேன் என்று நினைக்கிறேன். நான் எழுவரை வெட்டி வீழ்த்தினேன். ஒன்பது பேர்களை ஈட்டியால் குத்திக் கொன்றேன். பலரைக் குதிரைக் காலடியில் தள்ளி மிதித்திருக்கிறேன். நான் சுட்டுக் கொன்றவர்களுக்குக் கணக்கே கிடையாது. நமது ருஷ்ய பூமி என்றென்றும் நன்கு செழித்து வளர்ந்தோங்குமாக!" அவன் உயிர் அந்த வீர உடலைவிட்டுப் பறந்து விட்டது.

கோஸக்குகளே! உங்கள் வீரத்தின் பெருமையைக் களங்கப்படுத்தாதீர்கள்! குகுபென்கோவைப் பலர் வளைத்

துக்கொண்டனர்; நெஸமி குரனின் ஆட்களில் இன்னும் ஏழு வீரர்களே பாக்கி இருந்தனர்; அவர்களும், தங்கள் சக்தியின் கடைசி எல்லையில் நின்று போரிட்டுக் கொண்டிருக்கிறார்கள். குகுபென்கோவின் சட்டைகளில் இரத்தம் கசிந்து சிவப்பாக்கிக் கொண்டிருந்தது.

அவனது ஆபத்தான நிலையைக் கண்டு புல்பாவே அவனைக் காப்பாற்ற ஓடினான். ஆனால் கோஸக்குகள் பிந்திவிட்டனர். ஒரு ஈட்டி அவனது இருதயத்திற்குக் கீழே பாய்ந்து விட்டது. கோஸக்குகளின் விரித்த கரங்களிலே அவன் வீழ்ந்தான். அவனது இளம் இரத்தம் ஆறுபோல ஓடியது. விலை மதிக்க முடியாத திராட்சை மதுவை மதுக் கிடங்கிலிருந்து கவனிப்பற்ற வேலைக்காரர்கள் கண்ணாடிப் பாத்திரங்களில் ஊற்றிக் கொண்டு வரும் போது, வாசற்படியருகே தவறிக் கீழே கொட்டிவிட, அந்தச் சிவப்பு நிற மது அனைத்தும் கீழே பாய அதைக் கண்டு அதன் சொந்தக்காரன் தன் தலைமுடியைப் பிய்த்துக் கொண்டு ஓடிவரச்செய்யும் நிலையில், அவனது வாலிப நாட்களில் பழகிய தோழர்களில் யாராவது வயோதிக காலத்தில் சந்திக்க வந்தால் அந்த இனிமையான நேரத்தில் அவனோடு கலந்து அருந்துவதற்காக வைத்திருந்த பெருமைக்குரிய நெடு நாளைய திராட்சை மதுபோல இருந்தது அந்த ரத்தம். குகுபென்கோ தன் கண்களை நான்கு புறமும் சுழலவிட்டு ஈனசுரத்தோடு, "நான் உங்கள் இடையே இறக்க நேர்ந்ததற்காக, கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன் தோழர்களே! நமக்குப் பிறகு வருபவர்கள் நம்மைவிட உயர்ந்தவர்களாக விளங்கட்டும்; ஏசுவின் நாமத்தைப் போற்றுகின்ற நமது ருஷ்ய தேசம் என்றும் எழிலுடன் விளங்கட்டும்!" என்றான்.

அவனுடைய இளம் உயிர் பறந்து விட்டது. அவனுடைய உயிரை வானத்து அரம்பையர்கள் தங்கள் கரங்களில் ஏந்திக் கொண்டு வானுலகத்திற்கேகினர். அவனுக்கு அங்கு அமோகமான வரவேற்புக்காத்திருக்கும். ஏசு பகவான், "என்னுடைய இடது பக்கத்தில் வந்து அமருவாய் குகுபென்கோ, நீ உன்னுடைய தோழர்களைக்

காட்டிக் கொடுககவில்லை ; எந்த அவகேடான செயலையும் நீ செய்யவில்லை ; துயரத்திற்காளான எவனையும் நீ விட்டு விடவில்லை ; என்னுடைய கோவிலைப் பாதுகாத்து வளரச் செய்தாய் '' என்று நிச்சயம் வாழ்த்துவார்.

குகுபென்கோவின் மறைவு, அவர்கள் உள்ளங்களை மிகவும் வருத்திவிட்டது. கோஸக்குகளின் கூட்டம் வர வரக் குறைந்துகொண்டே வந்தது. பல வீரர்களைக் காணமுடியவில்லை. ஆனால் இன்னும் விட்டுக்கொடுக்காமல் அவர்கள் போரிட்டுக்கொண்டிருந்தார்கள்.

இன்னும் எஞ்சி இருக்கும் சூரன்கள் அருகே வந்து புல்பா,

"குண்டு மருந்துகள் இன்னும் இருக்கின்றனவா? உங்கள் வாட்களின் கூர்மை இன்னும் மழுங்கிவிடவில்லையே? கோஸக்கின் சக்தி இன்னும் குறையவில்லையே? கோஸக்குகள் என்றும் விட்டுக்கொடுக்கமாட்டார்கள்!'' என்றான்.

"இன்னும் குண்டு மருந்து இருக்கிறது தந்தையே! எங்கள் வாட்களின் கூர்மை இன்னும் மழுங்கவில்லை. கோஸக்குகள் என்றும் விட்டுக்கொடுப்பதில்லை!''

மறுபடியும் அவர்கள் மூர்த்தண்யமாக இதுவரை ஒருவரைக்கூடப் பலிகொடுக்காதவர்கள்போலத் தாக்கினார்கள். இப்போது உயிரோடு இருந்தவர்கள் மூன்று சூரன்களின் தலைவர்கள் மட்டும்தான். செக்கச்சிவந்த இரத்த வெள்ளம் எங்கும் ஓடிக்கொண்டிருந்தது. அந்த வெள்ளத்திற்கு மேலே கோஸக்குகளுடையவும், அவர்களுடைய எதிரிகளுடையவுமான சவங்கள் மலைகளாகக் குவிந்து அவைகளுக்கு மேலே பாலம் அமைந்தாற்போலக் கிடந்தன. புல்பா வானத்தை அண்ணாந்து பார்த்தான். அங்கே வல்லூறுகள் வட்டமிட்டுக்கொண்டிருந்தன. அவைகளுக்குத்தான் என்ன மகத்தான விருந்து! அதோ அங்கே மெடலிட்ஸயா ஒரு ஈட்டியால் குத்தித் தூக்கப் படுகின்றான்! கண்கள் வெளியே வந்து விழ அதோ இரண்டாவது பிஸரென்கோவின் தலை கீழே உருள்கிறது.

அங்கே ஓக்ரிம் குஸ்காவின் உடல், நான்கு துண்டுகளாகச் சிதறிப் பூமியில் விழுகின்றன! புல்பா "இப்போது" என்று தன் கைக்குட்டையை வீசினான். ஓஸ்டாப் இதன் அடையாளத்தை உணர்ந்து பதுங்கி இருக்கும் இடத்தை விட்டு எதிரிகளின் குதிரைகளுக்குச் சரியான அடி கொடுத்துக்கொண்டே எதிரிகளை விரட்டினான். எதிரிகள் இவனுடைய அடிகளைத் தாங்கமாட்டாமல் ஓடினர். களத்திலே ஈட்டிக் கம்புகளையும் துப்பாக்கி முனைகளையும் புதைத்திருக்கும் பகுதிக்கு ஓஸ்டாப் அவர்களை விரட்டினான். குதிரைகளின் குளம்புகள் அவைகளில் பட்டுக் கீழே விழ, எதிரிகள் தலைகீழாகக் குதிரைகளின் மேலிருந்து விழுந்தனர். இந்த இடத்திற்கு நேராக வண்டிகளின் அருகே நின்றிருந்த கோர்ஸன் கோஸக்குகள் தங்கள் துப்பாக்கிக்குண்டுகள் எட்டும் தூரத்தில் எதிரிகள் இருப்பதை அறிந்து தங்கள் குண்டுகளைப் பொழிய ஆரம்பித்தனர். எதிரிகள் குழம்பிப்போய் ஒன்றும் செய்ய முடியாமல் திகைத்தனர். இதைக் கண்ட கோஸக்குகள் மனம் தெளிந்து வெற்றி நமதே என்ற எக்காளத்துடன் தங்கள் தாரைகளை முழக்கி வெற்றிக்கொடியைத் தூக்கினர். தோல்வியுற்ற எதிரிகள் தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஓடி ஒளிந்துகொள்ள இடம் தேடினார்கள்.

நகரவாசலை நோக்கிய புல்பா "இல்லை, இன்னும் வெற்றி நமக்காக வில்லை" என்றான். நகரவாசலைத் திறந்து கொண்டு குதிரைப் பட்டாளத்தின் மிக நல்ல ரெஜிமெண்ட் ஒன்று புறப்பட்டுக்கொண்டிருந்தது. எல்லோரும் ஊதாநிறமுள்ள பெரிய குதிரைகளில் அமர்ந்து கொண்டிருந்தனர். குதிரைகள் அளவில் பெரிதாக இருந்தாலும் ஓட்டத்தில் வேகம் இருந்தது. எல்லோருக்கும் முன்னே மிக அழகுபொருந்தியவனும் எல்லோரையும்விட வீரத்தில் சிறந்தவனுமான ஒரு வீரன் முன்னே வந்து கொண்டிருந்தான். அவனுடைய கருமையான கேசச் சுருள்கள், பித்தளையால் செய்யப்பட்ட தலைக்கவசத்திலிருந்து தவழ்ந்துகொண்டிருந்தன. மிக அழகிய கரங்களின் நேர்த்தியான வேலைப்பாடுகள் மிகுந்த துண்டு ஒன்று

அவன் கரங்களை அலங்கரித்துக்கொண்டிருந்தது. புல்பா இந்தக் கோலத்துடன் வருவது ஆன்றிதான் என்பதைக் கண்டு பேச்சு மூச்சற்று நின்றுவிட்டான். ஆன்றியோ மோரின் அக்னி ஜுவாலையில் சிக்கித் தூசு படிந்த தனது கரங்களை அலங்கரிக்கும் நேர்த்தியான துண்டு கட்டியவர்களின் நம்பிக்கைக்கு மாசு தேடாத வகையில் ஒரு இளம் வேட்டை நாயைப் போல வனப்புமிக்க சுறுசுறுப்புடன் முன்னேறிக்கொண்டிருந்தான். அவனுக்குப் பின்னுலிருந்த பழக்க மிகுந்த வேட்டைக்காரர்களின் தூண்டுதலின் பேரில் வேகத்தில் முயலையும் மிஞ்சக்கூடிய விதத்தில் பனிக்கட்டிகளைப் பெயர்த்துக்கொண்டு கால்களை விரைப்புடன் நீட்டியபடி தன் உடலைச் சாய்த்துக்கொண்டு எல்லோரையும் முந்திக்கொண்டு பாய்ந்து வந்தான். புல்பா அவன் இடதுபுறமும் வலதுபுறமும் இருந்தவர்களை வெட்டிச் சாய்த்துக்கொண்டும் முன்னே இருந்தவர்களைச் சிதறடித்துச் சின்னுபின்னமாக்கிக்கொண்டும் முன்னேறி வருவதைக் கண்டான். அந்தக் காட்சியைக் காணச் சகியாதவனுய் "அடே, பேயின் மகனே! உன் சொந்தத் தோழர்களை, உன் தோழர்களையா இப்படிக் கொல்வது?" என்று கர்ஜித்தான் புல்பா.

ஆனுல் ஆன்றி தனக்கு முன்னே நிற்பவர்கள் யார்? நண்பர்களா? எதிரிகளா? என்று கவனிக்கவே இல்லை. அவன் ஒன்றையும் பார்க்கவில்லை—நீண்ட சுருள் சுருளான கேசம், அன்னத்தின் வெண்மையைத் தோற்கடிக்கும் மார்பகங்கள், பனியைப்போன்ற கழுத்து, தோள்கள், இன்னும் வெறி மிகுந்த உணர்ச்சியுடன் முத்தமிடுவதற்காகவே ஏற்பட்டுள்ளவற்றையே நினைத்துக்கொண்டிருந்தான்.

புல்பா, தன் ஆட்களைக் கூவி "பிள்ளைகளே, அவனை எப்படியாவது வம்புக்கிழுத்து எனக்காக அந்தக் காட்டிற்குள் கொண்டுவாருங்கள்" என்று கத்தினுன். அடுத்த கணமே மிக வேகமாகப் பறக்கும் முப்பது கோஸக்குகள் தங்கள் குதிரைகளைத் தட்டிவிட்டுத் தொப்பிகளை நன்ருக அழுத்திவிட்டுக்கொண்டு எதிர் நோக்கி வரும் குதிரை வீரர்களின் மத்தியிலே ஓடினர். எதிரிகளின்

இரண்டு பக்கங்களிலும் தாக்கி அவர்களைப்பின்னால் வரும் படைகளிலிருந்து பிரித்தனர். கோலோ கோபிடன்கோ ஆன்றியின் முதுகில் தன் வாளைத் திருப்பித் தட்டினான். எல்லா கோஸக்குகளும் தலை தெறிக்கும் வேகத்தில் முன்னே ஓடினர். ஆன்றிக்கு ஆத்திரத்தைக் கட்டுப் படுத்த முடியவில்லை. அவனுடைய ஒவ்வொரு நரம்பிலும் கோபம் கொந்தளித்துக்கொண்டிருந்தது. தன் தார்க் குச்சிகளைக் குதிரைகளின் வயிற்றில் குத்தி வேகமாகத் தன்னை அடித்துவிட்டு முன்னே பாய்ந்தோடும் கோஸக்கு களையே பின்பற்றினான். தனக்குப் பின்னால் தொடர்ந்து இருபது பேர்களே வர முடிகிறது என்பதையும் திரும்பிப் பார்க்காமல் கோஸக்குகளையே விரட்டினான். அவர்கள் நேரே அந்தக் காட்டிற்குள் புகுந்தனர். ஆன்றி கோலோ கோபிடன்கோவை முந்துகின்ற நேரத்தில் ஒரு பலமான கரம் அவனுடைய குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து நிறுத்தியது. ஆன்றி திரும்பினான். அவன் முன் அவன் தந்தை தாராஸ் புல்பா நின்றான்! அவன் உடலெல்லாம் பதற முகம் உடனே வெளுத்துவிட்டது.........

ஒரு பள்ளிக்கூட மாணவன் மற்றொருவனை வம்புக் கிழுக்க அவன் இவனுடைய நெற்றியிலே ரூல் தடியால் அடித்துவிடுகிறான். அந்த அடியின் வேகத்திலெழுந்த கோபத்தோடு தன் வகுப்பை விட்டு அவனைக் கிழித் தெறிய விரட்டிக்கொண்டு ஓடும்போது திடீரென்று அவ னுடைய வகுப்பு ஆசிரியர் அப்போதுதான் வகுப்பிற்குள் நுழைந்து அவன் முன் நின்றால்—உடனே எப்படி அவன் ஆத்திரமெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகிறதோ அதைப் போல, ஆன்றியின் ஆத்திரமெல் லாம் ஒரே கணத்தில் மறைந்து இதுவரை அவனுக்குக் கோபமே வராதது போல நின்றான். அவன் முன்னே பயங்கரமான தன் தந்தையை மட்டுமே கண்டான்.

"சரி, இப்போது நாம் என்ன செய்வது?" என்று புல்பா அவன் கண்களையே நேராகப் பார்த்துக்கொண்டு கேட்டான்.

ஆன்றி என்ன சொல்வதென்றே தெரியாமல் தலை யைக் குனிந்துகொண்டு பேசாமலிருந்தான்.

''என்னடா மகனே, உன் போலந்துக்காரர்கள் உன்னைக் காப்பாற்றினார்களா?''

ஆன்றி பதில் பேசவில்லை.

''உன் தோழர்களுக்குத் துரோகம் செய்து, உன் மதத்திற்குத் துரோகமிழைத்து, இந்தத் துரோகத்தால் ......சீ, குதிரையை விட்டுக் கீழே இறங்கு.''

கட்டுப்பாடு மிகுந்த குழந்தையைப் போல உடனே இறங்கினான் ஆன்றி. புல்பாவின் முன் உயிரோடு நின்றான் என்பதை விட, சவமாகவே நின்றான் என்று சொல்வது தான் பொருந்தும். ''நேரே நில், அசையாதே! உன்னை நான் பெற்றேன், நானே உன்னைக் கொன்றுவிடுகிறேன்'' என்று சொல்லிவிட்டு புல்பா சில அடிகள் பின்வாங்கி, தன் தோளிலிருந்த துப்பாக்கியைத் தூக்கினான்.

ஒரு வெள்ளை இதழ் போல வெளுத்துப்போன ஆன்றி மிக மௌனமாக ஒரு பெயரை உச்சரித்தான். அது தன் தாய் நாட்டின் பெயரல்ல, தன் தாயின் பெயருமல்ல, தன் சகோதரனின் பெயருமல்ல, அந்த அழகு மிக்க போலந்து தேசத்துப் பெண்ணின் பெயர்! புல்பா தன் துப்பாக்கியால் சுட்டான்.

முற்றிய பயிரின் கதிர் கருக்கரிவாளின் முனைபட்டுக் கீழே வீழ்வதுபோல கூரிய கத்தியின் முனைபட்டு ஆடு மடிவதுபோலத் தன் தலையைக் கவிழ்த்துக்கொண்டு ஒரு வார்த்தையும் சொல்லாமல் நிலத்தில் வீழ்ந்தான் ஆன்றி.

தன் பிள்ளையையே கொன்ற அந்தக் கொலைகாரன் உயிரற்ற அந்தச் சடலத்தையே நீண்ட நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். மரணத்தில்கூட அவன் மிக எழி லோடு விளங்கினான். கொஞ்ச நேரத்திற்குமுன் சக்தி நிறைந்திருந்து ஆண்மை பிரதிபலிக்க, எல்லாப் பெண் களின் உள்ளங்களிலும் தடுக்க முடியாத ஆசை எண்ணங் களை மூட்டிவிடக்கூடியதாக இருந்த மந்தகாசமான அழகு முகத்தில் இன்னும்கூட அந்த மகத்தான பொலிவு அப் படியே இருந்தது. அவனது கரிய அடர்ந்த புருவங்கள், இருண்ட வெல்வெட்போன்று அவனது வெளுத்துப்

போன அங்கங்களை இன்னும் எழிலாக்கிக் கொண்டிருந் தன.

"எவ்வளவு உன்னதமான கோஸக்காக அவன் விளங்கி இருப்பான்; நல்ல உயரம்; கருத்த புருவங்கள்; பிரபுக்களைப் போன்ற முகம்; போரிட, சக்திவாய்ந்த கரங் கள். ஆனால் இன்று மாய்ந்துவிட்டான்! பெருமையற்றுக் கேவலமான ஒரு நாயைப்போல மாய்ந்துவிட்டான்" என்று கூறினான் தாராஸ் புல்பா.

"என்ன காரியம் செய்துவிட்டீர்கள் அப்பா! அவனை நீங்களா கொன்றீர்கள்?" என்று அங்கு விரைந்து வந்த ஓஸ்டாப் கேட்டான்.

புல்பா தன் தலையை அசைத்தான்.

ஓஸ்டாப் இறந்தவனின் கண்களையே உன்னிப்பாகக் கவனித்தான். தன் தம்பிக்காக வருத்தமுற்று உடனே, "அவனை மரியாதையுடன் அடக்கம் செய்வோம் அப்பா. எதிரிகள் யாரும் அவனை மானபங்கம் செய்யவிடாமலும் சவந்தின்னும் பிராணிகள் எதுவும் அவன் உடலைச் சிதற விடாமலும் அடக்கம் செய்வோம் அப்பா" என்று கூறி னான்.

"நம் உதவியில்லாமலே அவர்கள் அடக்கம் செய்து விடுவார்கள். அவனுக்காக வருத்தப்படுபவர்களும் கண் ணீர் விடுபவர்களும் அதிகம்பேர்" என்றான் புல்பா.

ஒரு கணம், பிராணிகளுக்கு அவனை இரையாக்கிவிட அப்படியே விட்டுவிடுவதா—அல்லது எல்லாவீரர்களும் மற்றவனின் வீரத்தை மதிப்பதுபோல இவனையும் மரியா தையுடன் அடக்கம் செய்வதா என்று யோசித்தான். அதே சமயம் கோலோ கோபிடன்கோ, அவனை நோக்கி விரைந்து வருவதைக் கண்டான்.

"தலைவா, நமக்கு இன்னும் தொல்லைகள். எதிரிகளுக்கு இன்னும் அதிகமான சேனைகளும் துருப்புகளும் வந்து குவிந்துவிட்டன!" என்றான்.

அவன் பேசி முடிப்பதற்குள், வேவுடிசன்கோ ஓடி வந்து,

"நாம் தோலேந்தோம், எதிரிகளுக்கு மற்றொரு ரெஜிமெண்ட் வந்து சேருகிறது" என்றான்.

அவன் பேசிமுடிப்பதற்குள் பிசரென்கோ ஓடிவந்து,

"நீ எங்கே இருக்கிறாய் தந்தையே? நம் கோஸக்குகள் அனைவரும் உன்னைத் தேடுகின்றார்கள். ஏற்கனவே தலைவன் நெவிலிச்சி கொல்லப்பட்டுவிட்டான்! சடோரோசனியும், செறிவினுசன்கோவும் கொல்லப்பட்டுவிட்டனர். ஆனால் தன் தலைவனைப் பாராமல் சாவதில்லை என்று தீரமாகப் போரிட்டுக்கொண்டிருக்கிறார்கள் நம் கோஸக்குகள். அவர்களுடைய மரண நேரத்திலே உன்னைப் பார்க்க விரும்புகிறார்கள்" என்றான்.

"குதிரை மேல் ஏறு ஒஸ்டாப்" என்று கூறிவிட்டுப் புல்பா தன் கோஸக்குகள் ஜீவ மரணப் போராட்டம் நடத்திக்கொண்டிருக்கும் இடத்திற்குச் சென்று இறப்பதற்குமுன் அவர்கள் தன்னைப் பார்க்கும் வண்ணம் நின்றான்.

ஆனால் அவர்கள் காட்டிற்குள்ளிருந்து வெளியே வருவதற்குள் எதிரிகளின் கூட்டம் கரங்களில் ஈட்டி, வாட்களுடன், மரங்களிடையிருந்து வெளிப் போந்து அவர்களை வளைத்துக்கொண்டனர்.

"ஒஸ்டாப், ஒஸ்டாப், விட்டுக்கொடுக்காதே" என்று கத்திவிட்டுப் புல்பா தன் வாளை உருவிக்கொண்டே எல்லாப் பக்கங்களிலும் வெட்டினான்.

எதிரிகளில் ஆறுபேர் ஒஸ்டாப் மேல் பாய்ந்தனர். ஆனால் அவர்களுக்குச் சரியான நேரமில்லை. ஒருவனின் தலை துண்டிக்கப்பட்டுப் பறந்தது; மற்றொருவன் தலைகுப்புறக் கீழே விழுந்தான்; மூன்றாவது எதிரியின் விலாக்களில் ஈட்டிகள் பாய்ந்து மாய்ந்தான்; நான்காவது எதிரி,—கொஞ்சம் தைரியசாலி—தன்னை நோக்கிப் பாய்ந்து வந்த குண்டுக்குத் தப்பித்துக்கொண்டான். அந்தக் குண்டு குதிரையைத் தாக்க அது வெறிபிடித்துச் சுற்றிச் சுழன்று தன் மேலிருந்தவனைக் கீழே தள்ளி அவனை மிதித்துவிட்டது.

"ஒஸ்டாப், நல்ல வேலே செய்தாய், நானும் உன்னைப் போலவே அவர்களை வீழ்த்துகிறேன்" என்று கத்தினான் புல்பா.

தன் எதிரிகளை இடதுபுறமும் வலது புறமும் வெட்டி வீழ்த்திக்கொண்டும், ஒரு கண்ணால் ஒஸ்டாப்பைக் கவனித்துக்கொண்டும் வந்தான். திடீரென்று ஒஸ்டாப்பை எட்டுப்பேர் சூழ்ந்துகொண்டதைக் கண்டு "ஒஸ்டாப் ஒஸ்டாப், விட்டுக்கொடாதே!" என்று கத்தினான்.

ஆனால் ஒஸ்டாப்பை அதற்குள் அமுத்திவிட்டனர். ஒரு சுருக்குக் கயிறு அவன் கழுத்தைச் சுருக்கிவிட்டது. அவனைச் சேர்த்துக் கட்டித் தூக்கிக்கொண்டு புறப்பட்டனர்.

"ஒஸ்டாப், ஹோ ஒஸ்டாப்" என்று புல்பா கத்திக் கொண்டே தன் முற்பட்டவர்களை எல்லாம் அடித்துக் கூழாக்கிக்கொண்டே ஓடினான்: "ஒஸ்டாப், ஹோ ஒஸ்டாப்...".

அதே சமயத்தில் ஏதோ ஒரு கல் தன் தலையில்மோதுவதுபோன்ற உணர்வு. அவன் கண் முன்னிருந்த எல்லாம் சுற்றிச் சுழன்றன. தலைகள், ஈட்டிகள், புகைமண்டலம், நெருப்பின் ஜுவாலைகள், இலைகளடர்ந்த பல கிளைகள் எல்லாம் அவனது மங்கிய கண்களுக்கு முன்னே வேகமாய்ப் பறந்து சென்றன. கடைசியில் அவனும் வெட்டப்பட்ட ஒரு பெரிய மரம்போலக் கீழே மயங்கி வீழ்ந்தான்.

# 10

"நான் என்ன இவ்வளவு நேரம் தூங்கி விட்டேன்" மயக்கம் தெளிந்து, தன் நீண்ட தூக்கத்திலிருந்து விழித்தெழுந்து தன்னைச் சுற்றியுள்ளவர்களைப் பார்த்தான் புல்பா. ஒரு விநோதமான அறையின் சுவரும் ஜன்னல்களும் அவனது மங்கிய கண்களுக்கு முன்னே நடனமிட்டன. கடைசியில் தனக்கு முன்னே தன்னுடைய ஆழ்ந்த மூச்சுக்களைக் கவனித்துக் கொண்டே உட்கார்ந்திருக்கும் டோங்காக்கைக் கவனித்தான்.

"ஆமாம், நீ நீண்ட துயிலிலேயே அமிழ்ந்துவிட்டிருப்பாய்" என்று நினைத்துக் கொண்ட டோங்காக், தன் விரலைச் சப்தமிடாதே என்று உத்திரவிடுவது போலச் சைகைகாட்டினன்.

"நான் எங்கிருக்கிறேன் என்ருவது சொல்" என்று கேட்டுக்கொண்டே, புல்பா தன் எண்ணங்களை நினைவூட்டிக் கொண்டு என்னென்ன நடந்தது என்பவற்றை ஞாபகப்படுத்திக் கொண்டு கேட்டான்.

"போதும் சற்றுப் பேசாமலிரு, இன்னும் என்ன நடக்க வேண்டும்? உன் அங்கமெல்லாம் வெட்டப்பட்டிருப்பதைப் பார். கடந்த பதினைந்து நாட்களாய், காய்ச்சலுடன் நீ என்னென்னவோ உளறுவதைக் கேட்டுக் கொண்டே நாங்கள் மூச்சுவிடக்கூடநேரமின்றிக் குதிரைகளைத் தட்டிவிட்டு இங்கு கொண்டு வந்து சேர்த்தோம். இன்றுதான் நீ அமைதியாகத் தூங்கிஞய். ஆகவே மேலும் தொல்லைகளை வருவித்துக் கொள்ளாமல் அமைதியாக இரு" என்று கடுமையாகக் கூறினன் அவனது தோழன்.

ஆனல் புல்பா இன்னும் என்ன நடந்ததென்பதைத் தெரிந்து கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டிருந்தான்.

"ஆமாம், என்னைச் சூழ்ந்து எதிரிகள் கைப்பற்றி இருந்திருப்பார்கள். அந்தக் கூட்டத்தை எதிர்த்து என்னல் தப்பித்திருக்கவே முடியாது."

"போதும் வாயை மூடு" என்று கத்துகின்ற குழந்தையைப் பார்த்துப் பொறுக்க முடியாத கோபங்கொண்ட ஒரு நர்ஸைப் போலக் கத்தினன்.

"நீ எப்படித் தப்பித்தாய் என்று தெரிந்துகொண்டு இப்போது என்ன லாபம்? நீ தப்பித்துக்கொண்டாய் என்பது போதாதா? உன்னை எப்படியேனும் காப்பாற்ற வேண்டுமென்று சிலர் இருந்தனர். நீ தெரிந்துகொள்ள வேண்டியது அவ்வளவுதான். நாம் இன்னும் பல இரவுகள் பிரயாணம் செய்யவேண்டி யிருக்கிறது. ஒரு சாதாரண கோஸக்கைப்போல உனக்கும் விலை வைத்திருக்கிருர்

கள் என்று நினைக்காதே! இல்லை, உன் தலைக்கு இரண்டாயிரம் டுக்கட்டுகள் விலை வைத்திருக்கிறார்கள்'' என்றான் அவன்.

''ஒஸ்டாபின் கதி என்னவாயிற்று?'' திடீரென்று கேட்டுக்கொண்டே எழுந்தான் புல்பா. ஆனால் உடனே தன் கண் முன்னேயே அவன் கட்டப்பட்டுத் தூக்கிச் செல்லப்படுவதைக் கண்ட நினைவு உண்டாகியது. இப்போது அவன் போலந்துக்காரர்கள் கரங்களில் இருப்பான்.

அவனுடைய வயோதிக உடல் துக்கத்தால் தளர்ந்தது. தனது காயங்களில் கட்டப்பட்டிருந்த முடிச்சுகளை அவிழ்த்துத் தூர எறிந்தான். ஏதோ பேச முயன்றான்— ஆனால் காய்ச்சலும், மயக்கமும் அதிகமாகி அர்த்தமற்ற சம்பந்தமில்லாத பல வார்த்தைகளை உளறினான். கடமை உணர்ச்சி மிக்க அவனது தோழன் எவ்வளவோ கண்டித்துத் தடுத்துப் பார்த்தும் பயன்படாது போகவே குழந்தையைப் போல அவனுடைய கைகளையும் கால்களையும் பிடித்துத் தூக்கிக் காளை மாட்டுத் தோலால் பிணித்துக் கட்டித் தன் சேணத்தோடு கட்டிக்கொண்டு முழு வேகத்தோடு கிளம்பினான்.

''நீ இறந்தாலும் சரி உயிருடன் இருந்தாலும் சரி உன்னைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுவேன்! போலந்துக்காரர்கள் உன்னுடைய எலும்பையும் ரத்தத்தையும் உனது கோஸக் உடலையும் கிழித்து ஆற்றில் போட விட மாட்டேன். உன்னுடைய கண்களைக் கழுகுகள் குத்திக் கிளற வேண்டிய நிலை ஏற்பட்டால் அந்தக் கழுகு நமது நிலத்துக் கழுகாக இருக்கட்டும். போலந்துப் பிரதேசத்திலிருந்து பறந்து வரும் போலந்துக் கழுகாக அது இருக்கக் கூடாது. சவமானாலும் சரி, உயிருடன் இருந்தாலும் சரி, உன்னை உக்ரேன் கொண்டுபோய்ச் சேர்த்தே தீருவேன்.''

உண்மையுள்ள அவனது தோழன் அப்படிக் கூறினான். இரவும் பகலும், ஓய்வெடுத்துக் கொள்ளாமல்,

இன்னும் மயக்கமான நிலையிலேயே சபோரோஷிய செட்சில் கொண்டு வந்து சேர்த்தான். அதன் பிறகும் அவன் சிறிதுகூடத் தளராமல் பலவிதமான பச்சிலைத் தைலங்கள் இவைகளைக் கொடுத்து, கெட்டிக்கார யூதச்சி ஒருத்தியிடம் புல்பாவை விட்டு வைத்தான். அவள் ஒரு மாத காலமாகக் கொடுத்த பலவகை மருந்துகளின் உதவியால் புல்பா சற்றுத் தெளிவடைந்தான். அந்த மருந்துகளின் உதவியினாலோ அல்லது அவனுடைய கட்டுமஸ்தான இரும்புத் தேக அமைப்பின் காரணமாகவோ ஒன்றரை மாதத்திற்குள் புல்பா எழுந்து நடக்க ஆரம்பித்தான். அவன் காயங்கள் எல்லாம் குணமடைந்துவிட்டன. ஆழமான, வாட்களின் வெட்டுக் காயத்தின் வடுக்கள் மாத்திரமே அவன் உடலில் இன்னும் இருந்தன. ஆனால் அவன் முகம் களை இழந்து சோகத்தோடு காட்சி யளித்தது. என்றுமே நீங்காத மூன்று கவலைக் கோடுகள் அவன் நெற்றியில் ஆழமாக அமைந்துவிட்டன. அவன் தன்னைச் சுற்றி அந்தச் செட்சைக் கவனித்தான். அங்கு தன் பழைய தோழர்களைக் காண முடியவில்லை. எல்லோரும் இறந்துவிட்டனர். எல்லாமே புதிதாக இருந்தது. தோழமைக்காகவும் தங்களின் உண்மையான மதத்திற்காகவும் நின்று சமர் புரிந்த ஒருவரைக்கூடக் காண முடியவில்லை. தார்த்தாரியர்களை எதிர்த்துத் தாக்கச் சென்ற கோஷிவோயும் கோஸக்குகளும் திரும்பவில்லை. எல்லோரும் இறந்து விட்டனர். சிலர் யுத்தத்திலும், சிலர் பட்டினியிலும், கிரிமியாவின் தண்ணீரில்லாத உப்புநிறைந்த சதுப்பு நிலங்களில் அடிமைகளாகக் கிடந்தும் அவமானம் சகிக்க முடியாமல், உயிர்துறந்து விட்டனர். அவர்களின் பழைய கோஷிவோயும் பிறவீரர்களும் இப்போது இல்லை. கோஸக்குகளின் வீரம் துளிர்த்த இடங்களில் எல்லாம் இப்போது புல் முளைத்துவிட்டது. அங்கிருந்த காட்சி, மிகப் பெரிய விருந்தொன்று நடந்து, எல்லாத் தட்டுகளும் சாமான்களும் உடைக்கப்பட்டு, ஒரு துளி திராட்சை மதுவும் இல்லாமல் காலியாகி, வந்திருந்த விருந்தாளிகளும் வேலைக்காரர்களும் அந்த வீட்டிலிருந்த எல்லாவற்றையும் கொள்ளை கொண்டு போய்விட, விருந்துக்கு ஏற்பாடு செய்தவன் வெறுத்துப் போய் "இந்த விருந்தை ஏற்பாடு

செய்தே இருக்கக் கூடாது" என்று கூறுவது போல இருந்தது. அங்கிருந்தவர்கள் புல்பாவுக்குப் புத்துணர்ச்சி ஊட்ட வீண் முயற்சி செய்தனர். நீண்ட தாடியுடன் கூடிய வயோதிக 'பண்டூரா' வாத்தியக்காரர்கள், இருவராகவும் மூவராகவும் அவன் முன் வந்து அவனுடைய கோஸக்குகளின் வீரதீரங்களைப் புகழ்ந்து பாடிப் பார்த்தனர். ஒருவித உணர்ச்சியுமின்றி வெறிச்சிட்ட பார்வையுடன் புல்பா இவைகளைக் கவனித்தானே ஒழிய அவனது சோகம் கப்பிய முகத்தில் ஒருவித மாற்றமுமின்றித் தலையைக் கவிழ்த்துக் கொண்டு, மெதுவான குரலில் "என் மகன், என் ஓஸ்டாப்" என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தான்.

சபோரோஷியர்கள் மற்றொரு கடற்போருக்குச் சென்றனர். இருநூறு படகுகள் டெனிப்பரில் மிதக்க விடப்பட்டன. அந்தப் படகுகள் ஆசியாமைனர் கரையோரங்களில் குடி இருந்தவர்களின்—வழுக்கைத் தலையும் குடுமியும் கொண்ட மக்களின்-மத்தியிலே சென்று, அந்தக் கரையோரமெங்கும் தீ மூட்டி, இருந்தவர்களை எல்லாம் தங்கள் வாட்களால் கொன்று தீர்த்தன. அந்தப் பிரதேசத்து மக்களின் தலைப்பாகை தரித்த சிரங்கள் பல, இரத்தம்தோய்ந்த வயல்களிலே உதிர்ந்த மலர்கள் போலச் சிதறிக் கிடக்க, பல தலைகள் அதன் கரையோரங்களில் மிதந்தன. பல சபோரோஷியர்களின் தார் படிந்த கால் சட்டைகளையும் சக்தி வாய்ந்த அவர்களின் முஷ்டிகளிலிருந்த கோஸக் சாட்டைகளையும் அந்தப் பிரதேசத்து மக்கள் கண்டனர். அந்த நாட்டின் திராட்சைக் கொல்லையிலே புகுந்து, திராட்சைக் கனிகளை விழுங்கி, வயல்களைத் தீக்கிரையாக்கிவிட்டனர். மசூதிகளில் சாணங்களை மலைகளாக நிரப்பினர். உயர்தரமான பெர்ஸிய கம்பளங்களைத் தங்கள் அழுக்குப் படிந்த கோட்டுகளைத் துடைக்கப் பயன்படுத்தினர் இந்தச் சபோரோஷியர்கள். இது நடந்த வெகுகாலங்களுக்குப் பிறகுகூட இவர்களின் குறுகிய சுங்கான்கள் பல அந்தப் பிரதேசங்களில் காணக் கிடைத்தன. அவர்கள் சந்தோஷத்துடன் தங்கள் நாட்டுக்குத் திரும்பினர். ஆனால் பத்துத் துப்பாக்கி அமைந்த

துருக்கியரின் கப்பல் ஒன்று அவர்களைத் துரத்தி, குண்டு களை வீச, இவர்களுடைய சிறு படகுகள், குப்புறக் கவிழ்ந்து பலர் மூழ்கிவிட்டனர். ஆனால் எஞ்சியவர்கள் மறுபடியும் ஒன்றுகூடி, பன்னிரெண்டு சிறு பீப்பாய்கள் நிறைய நாணயங்களோடு டெனிப்பரின் முகத்துவா ரத்தை அடைந்தனர். ஆனால் இந்தச் செய்திகளெல்லாம் புல்பாவை மகிழ்விக்கவில்லை. வேட்டையாடுவதற்காக அவன் காடுகளுக்கும் திறந்த வெளிகளுக்கும் செல்வான். ஆனால் தன் துப்பாக்கியை உபயோகிக்காமல் திரும்பிவிடு வான். துயரமிகுதியால் கடற்கரை யோரமாக அமர்ந்து கொண்டு தன் துப்பாக்கியைத் தூரவைத்துவிட்டு நீண்ட நேரம் தன் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு "என் ஓஸ்டாப், என் ஓஸ்டாப்" என்று எந்நேரமும் சொல்லிக் கொண்டே இருப்பான். அவனுக்கு முன்னே விரிந்து பரந்து கிடக்கும் கருங்கடலின் தொலை தூரப் புதர்களி லிருந்து கடற் பறவைகள் ஓலமிட்டுக் கொண்டிருந்தன. அவனுடைய வெள்ளை வெளேரென்று நரைத்த மீசை யில் கண்ணீர்த் துளிகள் ஒன்றன்பின் ஒன்ருக விழுந்தன.

புல்பாவால் இனிமேலும் பொறுக்க முடியவில்லை. கடைசியில், "என்ன வந்தாலும் வரட்டும், அவன் என்ன வாஞன் என்று பார்க்கத்தான் போகிறேன். அவன் உயி ரோடிருக்கிருஞ? இல்லை சவக்குழியிலிட்டு விட்டார்களா? இல்லாவிட்டால் இறந்தும் இன்னும் புதைக்காமல் வைத் திருக்கிருர்களா? என்பதை என்ன செலவாஞலும் பார்க் கவே போகிறேன்."

வாட்கள், ஈட்டிகள், ஒரு பானை நிறைய உணவு வகை, பிரயாண பாத்திரம், குண்டுகள், குதிரையைக் கட்டும் வளையங்கள் இவைகளுடன் பிரயாணமாகி ஒரே வாரத்திற்குள் உமண் நகரை வந்தடைந்தான். அவன் நேரே,அழுக்கடைந்த ஒரு சிறு குடிசையை நோக்கிச் சென் ருன். அதன் ஜன்னல்கள் மிகச் சிறியதாகக் கண்களுக் குக்கூடத் தெரியாது அழுக்குப் படிந்து கிடந்தன. புகை போக்கிகளில் கந்தைகள் சுற்றப்பட்டும் கூரைகளில் பல துவாரங்களும் அதில் கணக்கற்ற சிறு பறவைகளும் மண்டிக் கிடந்தன. அந்தக் குடிசையின் வாயிலருகே ஒரு

வண்டி குப்பை கொட்டிக் கிடந்தது. பலவித நிறம் மாறிய கற்களைப் பதித்த தலையணியுடைய ஒரு யூதச்சி யின் தலை அந்தச் சிறு ஜன்னல் மூலம் எட்டிப்பார்த்தது.

''உன் புருஷன் வீட்டிலிருக்கிருனு?'' என்று கேட்டுக் கொண்டே புல்பா தன் குதிரையின் கடிவாளக் கயிற்றை அந்த வீட்டின் கதவிலிருந்த வளையத்தில் கட்டி விட்டான்.

''வீட்டில்தான் இருக்கிருர்'' என்று கூறிக் கொண்டே, குதிரைக்குக் கோதுமையும், வந்தவனுக்கு பீரும் கொண்டுவந்து கொடுத்தாள்.

''சரி, எங்கே உன் யூதன்?''

''அடுத்த அறையில் பிரார்த்தனை செய்துகொண் டிருக்கிருர்'' என்று மரியாதையுடன் பதிலுரைத்துவிட்டு அவன் சுகமாய் இருக்கவேண்டும் என்று வாழ்த்தினுள்.

''நீ இங்கே இருந்துகொண்டு குதிரைக்குத் தீனிபோட் டுத் தண்ணீர் காட்டு. நான் அவனுடன் ஒரு வேலையாகப் பேசப் போகிறேன்.''

அந்த யூதன் வேறு யாரும் அல்ல, யான்கல்தான். அவன் அந்தப் பிரதேசத்தில் குடியேறி, குத்தகைக்காரனு கவும், மதுக் கடைக்காரனுகவும் மாறி, சுற்றுப்புறமுள்ள எல்லா கனதனவான்களையும், பிரபுக்களையும் வளைத்துக் கொண்டு, பின்னர் மெள்ள மெள்ள அவர்களுடைய செல்வங்களை உறிஞ்சிவிட்டான். அந்தப் பிரதேசமெங் கும் தன் யூதச் செல்வாக்கை நிரந்தரமாகவும் ஸ்தாபித்து விட்டான். அவனிருந்த மூன்று மைல்களுக்குட்பட்ட எல்லாக் குடிசைகளும், தங்களுடைய எல்லாவற்றையும் இழந்து, செல்வங்களைக் குடிக்காகப் பணயமாக்கி விட்டு, வெறும் கந்தலும், கிழிசலும் மிஞ்சக் காட்சியளித்தன. ஏதோ ஒரு பயங்கரமான பிளேக் வியாதியோ அல்லது பெரும் யுத்தமோ வந்து மறைந்தது மாதிரியான காட்சி அளித்தது. யான்கல் இன்னும் ஒரு பத்து ஆண்டுகள் அந்தப் பிரதேசத்தில் வாழ்ந்தால் அந்த மாகாண முழு வதையுமே சுத்தமாக்கிவிட் டிருப்பான்.

புல்பா அந்த அறைக்குள் காலடி வைத்தான். அழுக்கடைந்த ஒரு கந்தல் துணியைத் தலையில் மூடிக்கொண்டு தன் மதச் சம்பிரதாயப் பிரகாரம் கடைசி முறையாகத் துப்புவதற்குத் திரும்பினுன்; எதிரே புல்பா நிற்பதைக் கண்டதும், உடனே புல்பாவின் தலைக்கு இரண்டாயிரம் டுக்கட்டுகள் விலை வைத்திருப்பதுதான் அவன் மனத்தில் தோன்றியது... தன் யூத உள்ளத்தில் இந்தப் பண ஆசை நிரந்தரமாக வேரூன்றி ஒரு புழுப்போல அரிப்பதை நினைத்து அவனே ஒருகணம் வெட்கப்பட்டான்.

புல்பா அவனைப் பார்த்து "யான்கல், அந்தச் சபோரோஷியர்கள் உன்னை நாயைப்போலக் கிழித்தெறியாமல் தடுத்துக் காப்பாற்றினேன். இப்போது உன்னுடைய முறை, நீ எனக்கு ஒரு உதவி செய்யவேண்டும்" என்றுன். யான்கல் மரியாதையுடன் எழுந்து தாங்கள் பேசுவதை யாரும் கேட்காமலிருக்கக் கதவை அடைத்தான்.

அந்த யூதனின் முகத்தில் கவலைக் கோடுகள் படர்ந்தன.

"என்ன உதவி? என்னுல் செய்யக்கூடியதாக இருந்தால் நான் ஏன் செய்யக் கூடாது?"

"பேசி நேரத்தைக் கடத்தாதே. என்னை வார்ஸாவுக்கு அழைத்துச் செல்."

"வார்ஸாவுக்கா? ஏன் வார்ஸாவுக்கு?" என்றுன். அவனுடைய தோள்களும் புருவங்களும் வியப்புடன் மேலெழுந்தன.

"வார்த்தைகளில் நேரத்தை வீணுக்காதே! என்னை வார்ஸாவுக்கு அழைத்துச் செல். என்ன வந்தாலும் வரட்டும், அவனை மறுபடியும் ஒருமுறை பார்த்து ஒரு வார்த்தையேனும் பேசவேண்டும்!"

"யாரோடு ஒரு வார்த்தை?"

"அவனேடுதான், என் மகன் ஒஸ்டாப்புடன்."

"பிரபுவுக்கு விஷயம் இன்னும் தெரியாதா......?"

"எனக்கெல்லாம் தெரியும். என் தலைக்கு இரண்டாயிரம் டுக்கட்டுகள் விலைகூறி இருக்கிறார்கள். என்னுடைய தரத்தை அறிந்த முட்டாள்கள்! நான் உனக்கு ஐயாயிரம் தருகிறேன். இதோ இப்போது இரண்டாயிரம்" புல்பா ஒரு தோல் பையிலிருந்து நாணயங்களைக் கொட்டினான்: "மீதி நான் திரும்பிய உடன்" என்றான்.

அந்த யூதன் உடனே ஒரு துணியை எடுத்து அந்த நாணயங்களை மூடிக்கொண்டான்.

"எவ்வளவு அழகான நாணயங்கள்! என்ன நல்ல நாணயங்கள்!" என்று ஒரு நாணயத்தை எடுத்துத் தன் விரல்களினால் பிடித்துக்கொண்டு வாயிலிட்டுக் கடித்துச் சோதித்துக் கொண்டான்.

"எவனிடமிருந்து இந்த நாணயங்களை நம் பிரபு கவர்ந்தாரோ, அவன் இவ்வளவு அழகான நாணயங்களை இழந்த மறுகணமே உயிர்விட நினைத்து ஆற்றில் விழுந்து தற்கொலை செய்துகொண்டிருப்பான்" என்றான்.

"உன்னை நான் கேட்டிருக்கவே மாட்டேன், நானே தனியாக வார்ஸாவுக்குச் சென்றிருப்பேன். ஆனால் அந்தப் பாழாய்ப்போன போலந்துக்காரர்கள் என்னை அடையாளம் கண்டுபிடித்துக் கொள்வார்கள். மேலும் வேஷம்போட எனக்கு வராது. அந்தக் கலைக்கென்றே யூதர்களாகிய நீங்கள் பிறந்தவர்கள். நீங்கள் சாத்தானையே மோசம் செய்து விடுவீர்களே! உனக்கு எல்லாத் தந்திரங்களும் தெரியும். ஆகவேதான்—உன்னிடம் வந்தேன். மேலும் வார்ஸாவில் எனக்கு ஒருவரையும் தெரியாது. தனியாக என்னால் ஒன்றும் செய்ய முடியாது. ஆகவே, நீ உடனே சென்று வண்டியைத் தயார்ப்படுத்தி என்னை அங்கே அழைத்துச் செல்" என்றான் புல்பா.

"நான் வண்டியைக் கட்டிக் குதிரைகளைப் போ என்று சொன்னால் போய்விடுமா? பிரபுவை மறைக்காமல் அப்படியே அழைத்துக்கொண்டு போக முடியுமா?"

"சரி, என்னை மறைத்துத்தான் கொண்டுபோ, எங்கே மறைப்பாய், ஒரு காலியான பீப்பாயிலா?"

"பிரபுவைக் காலிப் பீப்பாயில் அடைக்க முடியுமா? எல்லோரும் அதில் 'ஓட்கா' இருக்கிறது என்று நினைத்து விட்டால்?"

"அப்படித் தான் நினைத்துவிட்டுப் போகட்டுமே?"

"என்ன? அப்படித் தான் நினைக்கட்டுமா?" என்று கூறிவிட்டுத் தன் இரு காதுகளையும் கரங்களால் பற்றி இழுத்துக் கொண்டான்.

"ஏன் எதைக் கண்டு அப்படிப் பயப்படுகிறாய்?"

"ஆண்டவன், எல்லோரும் குடிப்பதற்கென்றே 'ஓட்கா'வைப் படைத்தான் என்பதை பிரபு அறியாரா? அங்கே வசிப்பவர்கள் அனைவரும் நல்ல வஸ்துக்களைக் கண்டால் விடமாட்டார்கள். அவர்கள் ருசிமிகுந்தவர்கள். இந்தப் பீப்பாய்களைக் கண்ட உடன் எல்லோரும் மணிக் கணக்காகப் பின்னால் ஓடிவருவார்கள். பீப்பாயில் துவாரமிட்டு ஒன்றும் வெளிவராமல் போவதைக் கண்ட உடன், எந்த யூதனும் காலியான பீப்பாயைக் கொண்டு செல்ல மாட்டான்; அதற்குள் சந்தேகமானது ஏதாவது இருக்கவேண்டும்; அந்த யூதனைப் பிடியுங்கள்; அவன் பணத்தையெல்லாம் பறியுங்கள்! அவனைச் சிறையிலடை யுங்கள், என்பார்கள். எங்கு எது நடந்தாலும் பழியெல் லாம் யூதர்கள் தலைமீதுதானே வந்துவிழும். யூதனுகப் பிறந்துவிட்டவர்களை யாரும் மனிதனுகவே மதிப்பதில் லையே; அவனை நாயைப்போலத்தானே மதிக்கிறார்கள்" என்றான்.

"சரி, மீன்களோடு என்னை ஒரு வண்டியில் போட்டுக் கொண்டுபோ."

"அதுவும் முடியாது பிரபு. அந்தப் போலந்துக்காரர் கள் எல்லாம் ஓநாயைப்போல் பசியால் துடிக்கிறவர்கள். மீன்களை எல்லாம் திருடிக்கொண்டு நம் பிரபுவைக் கண்டு பிடித்துவிடுவார்கள்."

"சரி அப்படியென்றால் சாத்தானின் முதுகின்மீதா வது என்னைக் கொண்டுபோ, எப்படியாவது அங்கு அழைத்துப்போனால் போதும்."

"இதோ பிரபு ஒரு யோசனை!" என்று தன் கரங்களை விரித்துக்கொண்டே அவனிடம் வந்து "நாம் இப்படிச் செய்வோம்: புதுப்புதுக் கோட்டைகளும், மாளிகைகளும் அங்கெல்லாம் இப்போது கட்டப்படுகின்றன. பிரஞ்சு இன்ஜினியர்கள் பலர் வெளி தேசத்திலிருந்து வந்திருக்கின்றனர். ஆகவே நிறையச் செங்கற்களும் பாறைகளும் தினம் நகரத்திற்குச் செல்கின்றன. பிரபு வண்டியில் படுத்துக்கொண்டால் அதற்கு மேலே நான் செங்கற்களை அடுக்கிவிடுகிறேன். பிரபு நன்றாக ஆரோக்கியத்துடன் இருக்கின்றீர்கள். ஆகவே ஒருவிதக் கஷ்டமும் நேராது. நான் கீழே ஒரு துவாரம் செய்து அதன்மூலம் உணவு கொடுக்கிறேன்" என்றான்.

"எதை வேண்டுமானாலும் செய், என்னை அங்கு அழைத்துச் சென்றால் சரி!"

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு செங்கற்கள் அடுக்கிய ஒரு வண்டியை, இரண்டு களைத்துப்போன குதிரைகள் இழுத்துக்கொண்டு உமனை விட்டுக் கிளம்பின. ஒரு குதிரையின் மேல், மைல்கல்லைப்போல யூதன் உட்கார்ந்துகொண்டு தன் தலைமுடி யூதத் தொப்பிக்குள்ளிருந்து வெளியே தொங்க, மேடு பள்ளங்களில் குதிரைகள் ஏறி இறங்கின.

## 11

இந்தச் சம்பவங்கள் நடந்துகொண்டிருந்த அந்தக் காலத்தில் தேச எல்லைகளில் சுங்க அதிகாரிகளோ காவற்காரர்களோ ஏற்படவில்லை. வியாபாரிகளுக்குப் பயமூட்டும் இவர்கள் அங்கு இல்லாததினால் யார் வேண்டுமானாலும், தான் விரும்பியதை எங்கு வேண்டுமானாலும் கொண்டு செல்லலாம். அப்படி யாராவது சோதனை போடவோ திறந்து பார்க்கவோ முனைந்தால் அது சந்தேகத்திற்குரிய ஒன்றைப்பார்த்துவிட்டு ஏற்பட்ட சம்பவமாகவோ அல்லது அதிகாரம் சிறிது படைத்தவர்களின் சந்தோஷத்திற்காகவோ ஏற்பட்ட சம்பவமாகத்தான் இருக்கும். ஆனால் செங்கற்கள் யாருடைய கண்களையும்

கவரவில்லை. ஆகவே ஒருவிபத்தும் நேராமல் வண்டி நகர வாசலைக்கடந்து சென்று விட்டது. அந்தச் சிறிய துவாரத்தின் மூலம் வீதியில் உண்டாகும் வண்டிக்காரர்களின் சப்தமும் நகரத்தின் பிற இரைச்சலும் மட்டுமே புல்பாவுக்குக் கேட்டன. யான்கல் தனது தூசு படிந்த குதிரையின்மேலிருந்து கொண்டு மேடு பள்ளங்களில் தூக்கித் தூக்கிப் போட பல கிளை வழிகள் மூலம் சென்று ஓர் இருண்ட சந்திற்குள் நுழைந்தான். அந்தச் சந்தின் பெயர் 'அழுக்குத் தெரு' அல்லது யூதர்கள் சந்து. வார்ஸாவிலிருந்த எல்லா யூதர்களும் அங்குதான் குடியிருந்தார்கள். நகரத்தின் பின்புறச் சந்துகள் போலத் தலை கீழாக அந்தச் சந்து அமைந்திருந்தது. சூரியனின் கதிர்கள் அங்கு என்றுமே விழுவதில்லை போலிருக்கிறது. மரத்தாலான வீடுகளின் ஜன்னல்களிலிருந்து துருத்திக் கொண்டிருந்த பல கம்பங்கள் காலத்தால் கருகிப்போய் மேலும்அந்த வீடுகளை இருட்டாக்கிக்கொண்டிருந்தன. சில இடங்களில் செங்கற் சுவர்கள் வீடுகளின் மத்தியிலே தெரிந்தன. ஆனால் அவைகளும் நாள்பட்டுக் கருமையாகி விட்டன. எங்கோ ஒரு சில உயர்ந்த சாந்துபடிந்த சுவர்கள் மட்டும் சூரியனின் ஒளியில் மின்னிக்கொண்டிருந்தன. அங்கிருந்த, உபயோக மற்ற சட்டிகள், தட்டுகள், கந்தைகள், குப்பை கூளங்கள் எல்லாம் பார்ப்பவர் கண்களைத் துன்புறுத்தின. வெளியே நடப்பவர்களின் ஐந்து புலன்களையும் அலற வைக்கும் வண்ணம், தங்களுக்கு உதவாத எல்லாக் குப்பைகளையும் வீதியிலே விட்டெறிந்தனர். ஒரு வீட்டிலிருந்து மற்றொரு வீட்டுக்கு நடுவே கம்புகளை இணைத்து அதன்மேல் யூதர்களின் மேல்ஜோடுகள், சிறு கால்சட்டைகள், வேகவைத்த வாத்துக்கள் இவைகளைத் தொங்கவிட்டிருந்தனர். குதிரைகளின் மேல் செல்லும் யாரும் இதைச் சுலபமாகத் தீண்டிவிடலாம். எங்கோ ஓரிடத்தில் அழகிய ஹீப்ருப் பெண்ணின் சிறு முகம் இந்தப் பழங்காலத்து வீடுகளின் ஜன்னல்களில் தெரியும். யூதச் சிறுவர்கள், தங்கள் கிழிந்த ஆடைகளுடன், சுருண்ட கேசத்துடன் கத்திக்கொண்டு மண்ணில் புரண்டு விளையாடிக் கொண்டிருந்தனர். சிவப்புக் கேசங்களுடைய ஒரு யூதன் விநோதமான பறவையின் முட்டையைப்போன்ற

தன் முகத்தை ஜன்னலுக்கு வெளியே நீட்டி உடனே யான்கலிடம் பேச ஆரம்பித்தான். யான்கலும் வண்டியை அவ் வீட்டின் வாசலில் நிறுத்தினான். மற்றொரு யூதன் வந்து நின்றான். புல்பா செங்கற் சுமைகளிலிருந்து எழுந்து வந்த போது மூவரும் ஏதோ சுவையோடு பேசிக் கொண்டிருந்தனர்.

யான்கல் இவன் பக்கம் திரும்பி எல்லாம் நடந்து விடும் என்றும், ஓஸ்டாப் நகர சிறையில்தான் இருக்கிறான் என்றும், காவலாளிகளைத் திருப்திப் படுத்துவது சிறிது சிரமமான காரியமானாலும் அவனோடு சந்திக்க ஏற்பாடுகள் செய்ய முடியுமென்றும் கூறினான்.

புல்பா அந்த மூன்று யூதர்களுடன் ஒரு அறைக்குள் சென்றான்.

யூதர்கள் மறுபடியும் புரியாத தங்கள் பாஷையில் பேச ஆரம்பித்தனர். புல்பா அந்த மூவரையும் கவனித்தான். அவனுடைய முரட்டுத்தனமான முகத்தில் ஒரு வித நம்பிக்கை ஒளி வீசியது. பயங்கரமான துயரத்தின் எல்லையில் தத்தளிப்பவனுக்குச் சமயத்தில் ஏற்படும் நம்பிக்கைபோல, அவனது வயோதிக உள்ளத்தை வாலிபனின் உள்ளம் போலத் துடி துடிக்கச் செய்தது.

புல்பா தன் குரலில் வெற்றியின் ஒலி பிரதிபலிக்க, "யூதர்களே கேளுங்கள்! நீங்கள் எதையும் செய்யக்கூடியவர்கள். கடலின் நீர் மட்டத்துக்குக் கீழேகூடச் சென்று குழி தோண்டக் கூடியவர்கள். யூதன் ஒருவன் விரும்பினால் தன்னையே கூடத் திருடிக்கொண்டு விடுவான் என்றொரு பழமொழி உண்டு. என் ஓஸ்டாப்பை விடுதலை செய்யுங்கள்! சாத்தானின் கரங்களிலிருந்து அவனை விடுவிக்க உதவி செய்யுங்கள். அப்படிச் செய்பவனுக்குப் பன்னிரெண்டாயிரம் டுக்கட்டுகள் தருவதாக வாக்களித்திருக்கிறேன். அதோடு இன்னும் பன்னிரெண்டாயிரத்தைச் சேர்த்துக்கொள்ளுங்கள். என்னுடைய எல்லாச்சொத்துக்களையும், மறைத்து வைத்திருக்கும் தங்க நகைகள், கோப்பைகள் எல்லாவற்றையும் கொடுத்து விடுகிறேன்.

இதுபோக, நான் இனிமேல் யுத்தத்தில் வெற்றி பெற்று, அடைகின்ற சொத்துக்களனைத்திலும் உங்களுக்குப் பாதி சேரும் வகையில் வாழ் நாள் முழுதுக்கும் ஓர் ஒப்பந்தம் எழுதித் தருகிறேன்.''

''அவ்வளவு சுலபமாகச் செய்து முடிக்கக்கூடிய காரியமல்ல பிரபு'' என்று யான்கல் ஒரு பெருமூச்சுடன் கூறினான்.

''இல்லை, இந்தக் காரியத்தை முடிக்க முடியாது'' என்றான் மற்றொரு யூதன்.

''நாம் ஏன் முயற்சி செய்யக்கூடாது, ஆண்டவன் உதவி புரிந்தாலும் புரிவார்'' என்று கூறினான் மற்ற இருவரையும் பார்த்துக்கொண்டே மூன்றாவது யூதன்.

உடனே மூவரும் ஜெர்மானிய மொழியில் பேச ஆரம்பித்தனர். புல்பா தன் செவிகளை எவ்வளவுதான் கூர்மையாக்கிக் கொண்டு கேட்டபோதிலும் அவனால் ஒன்றும் புரிந்துகொள்ள முடியவில்லை. அவனுக்குப் புரிந்ததெல்லாம் அடிக்கடி அவர்கள் குறிப்பிடும் மர்தோஹை என்பதுதான்.

''பிரபு, நாங்கள் இது விஷயமாக ஒருவரைக் கலந்து பேசவேண்டும். அவரைப் போன்ற கெட்டிக்காரர் உலகத்திலேயே கிடையாது. அவர் சாலமனைப்போன்ற அறிவாளி. அவரால் எதையாவது செய்ய முடியாது போனால் உலகத்தில் வேறெவராலும் அதைச் செய்ய முடியாது. நீங்கள் இங்கேயே உட்கார்ந்து கொண்டிருங்கள். இதோ சாவி, யாரையும் உள்ளே விடாதீர்கள்'' என்றான் யான்கல்.

அந்த யூதர்கள் வெளியே சென்றனர்.

புல்பா அந்த அறையை அடைத்துக்கொண்டு அந்தச் சிறு ஜன்னல் மூலம் அழுக்கடைந்த யூதத் தெருவையே பார்த்துக் கொண்டிருந்தான். அந்த மூன்று யூதர்களும் வீதியிலே நின்று கொண்டு மிகவும் சுவாரஸ்யத்தோடு பேச ஆரம்பித்தனர். இவர்களோடு நான்காவதாக ஒருவனும் கடைசியாக ஐந்தாவதாக மற்றொருவனும் சேர்ந்து

கொண்டனர். அவர்கள் மீண்டும் மர்தோஹை; மர்தோ ஹை என்று குறிப்பிடுவதைக்கேட்டான். அவர்கள் அந்த வீதியின் ஒரு மூலையையே நோக்கிக் கொண்டிருந்தனர். கடைசியில், அந்த வீதியின் மூலையிலிருந்த பாழடைந்த ஒரு வீட்டிலிருந்து யூதச் செருப்பும் கால் சட்டையும் வெளியே வருவது தெரிந்தது. இந்த யூதர்கள் எல்லோரும் ஒரே குரலில் "ஹா! மர்தோஹை, மர்தோஹை" என்று கூவினர். யான்கலைவிட ஒல்லியாகவும் குட்டையாகவும் ஆனால், சுருக்கம் மிகுந்த முகத்தோடு மிகப் பருத்த மேலுதடும் கொண்ட ஒரு யூதன் இந்தப் பொறுமையற்ற யூதர்களை நோக்கி வந்தான். எல்லா யூதர்களும் ஒருவரை ஒருவர் முந்திக்கொண்டு விஷயத்தைச் சொல்லத் துடித்தனர். அதே சமயத்தில் மர்தோஹை, அந்தச் சிறு ஜன்னலை அடிக்கடி திரும்பிப் பார்த்தான். புல்பா தன்னைப் பற்றித்தான் பேசுகிறார்கள் என்று கண்டு கொண்டான். மர்தோஹை கரங்களை அசைத்தான்; அவர்களது பேச்சில் குறுக்கிட்டான்; சிறிது நேரம் அவர்கள் சொல்வதையே கேட்டான்; அடிக்கடி ஒரு பக்கமாக எச்சிலைத் துப்பினான். தன் கோட்டின் பைகளில் தன் கரங்களைத் துருத்திக்கொண்டு ஏதோ கிலு கிலுக்கும் சிறு இரும்புச் சாமான்களை வெளியே எடுத்தான். அந்தச் சமயத்தில் அவனது அழுக்கடைந்த கால் சட்டைகள் வெளியே தெரிந்தன. அதன் பிறகு அந்த மூன்று யூதர்களும் ஒரே இரைச்சலுடன் பேச ஆரம்பித்தனர். அருகே காவலிருந்த யூதன், அவர்களை அமைதியாக இருக்கும்படி சமிக்ஞை காட்டினான். புல்பா எங்கே தனக்கு ஆபத்து ஏற்படுமோ என்று பயந்தான். யூதர்கள் வீதியிலே தவிர வேறெங்கும் பேசமாட்டார்கள் என்பதும் அவர்கள் பாஷையைச் சாத்தான்கூடப் புரிந்து கொள்ள முடியாது என்றும் தெரிந்து அமைதி அடைந்தான்.

சிலநிமிஷ நேரங்களுக்கெல்லாம் அவர்கள் எல்லோரும் புல்பாவின் அறையை அடைந்தனர். மர்தோஹை, புல்பா அருகேவந்து அவனைத் தட்டிக் கொடுத்து "நாங்களும் ஆண்டவனும் ஒருகாரியத்தைச் செய்ய மனத்தில் நினைத்து விட்டால், எங்கள் மனம்போலவே ஆகும்" என்றான்.

உலகத்திலேயே இதுவரை தோன்றியிராத அந்தச் சாலமனை புல்பா கவனித்தான். அவன் உள்ளத்திலே ஒருவித நம்பிக்கை உதயமாயிற்று. அந்த யூதனின் தோற்றமே நம்பிக்கை அளிப்பது போன்றிருந்தது. அவனது மேலுதடு மட்டும் பயங்கரமாக இருந்தது. அவனது சக்திக்கு அப்பாற்பட்ட சில சந்தர்ப்பங்களால் அது அவ்வளவு பெரிதாகி இருக்கிறது என்பது நிச்சயம். இந்தச் சாலமனின் தாடியெல்லாம், அவனது வலது தாடையிலிருந்த ஒரு டஜன் ரோமங்களே. அந்தச் சாலமனின் முகத்திலே எண்ணிறந்த காயங்களின் தழும்புகள் நிறைந்திருந்தன. அவனது அபாயகரமான செயல்களினுல் தருவித்துக்கொண்டவை போலும். இப்போதெல்லாம் அந்தத் தழும்புகளை அவன் கணக்குப் பார்ப்பதையே விட்டு விட்டுப் பிறவி அடையாளங்களைப் போலப் பாவித்துக் கொண்டான் போலும்.

அவனைப் பார்த்து வியந்து பாராட்டும் அவனது சகாக்களுடன் மர்தோஹை வெளியே சென்றுன். புல்பா மறுபடியும் தனியாக விடப்பட்டான். இதுவரை அனுபவித்திராத ஒரு வகை ஆர்வத்தோடு விநோதமான சூழ்நிலையில் அவன் உள்ளம் அனலாகத் தகித்துக்கொண்டிருந்தது. அவன் இப்போது பழைய புல்பா அல்ல— யாருக்கும் தலைவணங்காத அசைக்க முடியாத மரத்தைப் போன்றவன் அல்ல. இப்போது அவன் பலவீனமான மெல்லிய உள்ளம் படைத்தவன். ஒவ்வொரு சப்தத்தையும் கேட்டு அலறிப் புடைத்துக்கொண்டு எழுந்திருப்பான்; தெருக்கோடியிலே காணும் ஒவ்வொரு யூதனின் முகத்தையும் கண்டு அலமருவான். அவன் அன்று பகல் முழுவதையும் இந்த நிலையிலேயே கழித்தான். எதையும் சாப்பிடவில்லை, ஒன்றுமே குடிக்கவுமில்லை. அந்தச் சிறு ஜன்னலை விட்டுத்தன் கண்களை அகற்றவே இல்லை. மாலை மங்கும் நேரத்தில் மர்தோஹையும் யான்கலும் உள்ளே வந்தனர். புல்பாவின் உள்ளம் துடிப்பையே இழந்துவிட்டது.

"என்ன, எல்லாம் வெற்றிகரமாக முடிந்ததா?" என்று ஒரு காட்டுக் குதிரையைப் போல அவசரத்தோடு கேட்டான் புல்பா.

அந்த யூதர்கள் தைரியத்தை வருவித்துக்கொண்டு பதில் சொல்வதற்கு முன்பே, மர்தோஹையின் முன் நெற்றியிலே தவழ்ந்து கொண்டிருந்த அவனுடைய ரோமங்கள் இப்போது மறைந்திருப்பதைக் கவனித்தான் புல்பா. அவன் ஏதோ பேச விரும்புவதையும், ஆனால் எதுவும் பேச முடியாமல் அர்த்தமில்லாமல் உளறிக்கொட்டுவதையும் கண்டான். அவன் சொல்வது ஒன்றுமே இவனுக்குப்புலப்படவில்லை. யான்கல் ஏதோ ஜலதோஷம் பிடித்துக்கொண்டவன் போலத் தன்வாயை மூடிக்கொண்டு நின்றிருந்தான்.

யான்கல், ''பிரியமுள்ள பிரபுவே, காரியம் நிறைவேறாது. ஆண்டவன் சாட்சியாக முடியாது! அவர்கள் மிகவும் மோசமான ஆட்கள், அவர்கள் தலைகளிலே காறி உமிழவேண்டும்! மர்தோஹையும் அதைத்தான் கூறுவார். வேறு எவரும் செய்ய முடியாத அளவுக்கு அவர் முயற்சி செய்து பார்த்தார். ஆனால் ஆண்டவன், நம் மனம் போல நடக்க விரும்பவில்லை போலும்! மூவாயிரம் சிப்பாய்கள் வந்திறங்கி இருக்கின்றனர். நாளை அந்தக் கைதிகளை எல்லாம் கொல்லப்போகிறார்கள்'' என்றான்.

புல்பா அந்த யூதர்களின் கண்களையே நோக்கினான். ஆனால் முன்னைப்போலக் கோபமோ திகிலோ அந்தப் பார்வையில் இல்லை.

''நம் பிரபு அவரைப் பார்க்க மட்டும் விரும்பினால் ஏற்பாடு செய்ய முடியும். காவற்காரர்கள் அதற்கு ஒப்புக்கொள்வார்கள். அதுவும் அதிகாலையில் போனால்தான் பார்க்க முடியும். வார்டர்களின் தலைவன் உத்திரவாதம் சொல்லி இருக்கிறான். அவர்களுக்கு அடுத்த உலகத்தில் கூட அமைதியில்லாமல் போகட்டும்! ஓ, என்ன கஷ்டம் கொடுத்துவிட்டனர்! அவர்கள் மிகவும் பண ஆசைபிடித்தவர்கள். எங்களை விடப் பண ஆசை உடையவர்கள். ஒவ்வொருவனுக்கும் ஐம்பது டுக்கட்டுகள் வீதம் கொடுத்தேன், அந்த வார்டர்களின் தலைவனுக்கு...''

''நல்லது என்னை அவனிடம் அழைத்துச் செல்'' என்றான் புல்பா தீர்மானமாக. அவன் உள்ளம் மறுபடியும் கெட்டித்துவிட்டது.

யான்கல் கூறிய யோசனைப்படி ஜெர்மனியில் இருந்து வந்த ஒரு பிரபுவைப் போல மாறுவேஷம் போட்டுக் கொள்ளச் சம்மதித்தான். அந்த முன் யோசனை உள்ள யூதன் அதற்குத் தகுந்தபடி ஆடைகளையும் முன்கூட்டியே வாங்கி வந்திருந்தான்.

அதற்குள் இரவாகிவிட்டது. அந்த வீட்டின் எஜமானன்—சிவப்புத் தலையும், சுருங்கிய உடலும் கொண்ட யூதன்—புல்பாவுக்கென, ஒரு மெத்தையையும், போர்வையையும் கொண்டுவந்து ஒரு பெஞ்சியின்மேல் விரித்தான். அதைப் போன்ற மற்றொரு மெத்தையைத் தரையில் போட்டுக்கொண்டு யான்கல் படுத்துவிட்டான். அந்தச் சிவப்புத்தலை யூதன் ஒரு கோப்பையில் ஏதோ பானம் பருகினான். பிறகு தன் கோட்டைக் கழற்றிவிட்டு ஜோடுகளோடு ஒரு கோழிக்குஞ்சு போலத் தோன்றினான். சிறு பெட்டியைப் போன்றிருந்த ஒன்றினுக்குள் தன் மனைவியுடன் படுக்கச் சென்றுவிட்டான். இரண்டு யூதக் குழந்தைகள் அந்தப் பெட்டியைச் சுற்றி நாய்க்குட்டிகள் போலப் படுத்துக்கிடந்தன. புல்பா தூங்கவில்லை. அந்தப் பெஞ்சின்மேல் தன் விரல்களால் தாளமிட்டுக் கொண்டு மௌனமாகத் தன் சுங்கானை வாயில் வைத்தபடியே புகைத்துக்கொண்டிருந்தான். அந்தப் புகை யான்கலின் நாசியில் புகுந்தது. அவன் தன் போர்வையை இழுத்துத் தன் முகத்தை மூடிக்கொண்டான். வைகறையின் மங்கிய ஒளி வானத்தைத் தீண்டியதும் யான்கலைத் தன் காலால் தீண்டி எழுப்பினான் புல்பா.

"யூதா எழுந்திரு. எனக்கு அந்தப் பிரபுவின் ஆடையைக் கொடு."

ஒரே கணத்தில் தன் ஆடையை அணிந்துகொண்டான்; தன் மீசைக்கும் புருவங்களுக்கும் மையிட்டுக் கொண்டான். தலையில் ஒரு கருமையான தொப்பியை அணிந்துகொண்டான். பல ஆண்டுகளாகப் பழகிய கோஸக்குகள் கூட இப்போது அவனை அடையாளம் கண்டுகொள்ள முடியாது. பார்ப்பதற்கு முப்பத்தைந்து வயதுள்ளவனைப் போலக் காட்சி அளித்தான். அவன்

கன்னங்களிலே ஒருவித ஆரோக்கிய ஒளி வீசியது. அவன் முகத்திலிருந்த தழும்புகள் அவனுக்கு ஒருவிதக் கம்பீர தோற்றத்தையே அளித்தன. தங்க ரேக்குகளால் செய்யப்பட்டிருந்த அந்த ஆடை அவனுக்குக் கச்சிதமாக அமைந்துவிட்டது.

வீதிகள் இன்னும் உறங்கிக்கொண்டிருந்தன. வியாபாரிகள் கூடத் தங்கள் கூடைகளுடன் வெளியே கிளம்பக் காணும். உட்கார்ந்து கொண்டிருக்கும் கொக்கைப் போலிருந்த ஒரு கட்டடத்திற்கு முன் வந்தனர் புல்பாவும் யான்கலும். அது ஒரு தாழ்ந்த அகன்ற பெரிய கருமையான கட்டிடம். அதன் ஒரு பக்கத்தில் கொக்கின் கழுத்தைப் போல் நீண்டு மெலிந்த கோபுரம் போன்ற ஸ்தூபியும் அதன் உச்சியிலே சிறு கூரையும் அமைந்திருந்தன. அந்தக் கட்டடம் பலவிதத்தில் உபயோகிக்கப்பட்டது. சிறைச்சாலையாகவும், கோர்ட்டாகவும், வசிப்பதற்கு வீடுகளாகவும் உபயோகிக்கப்பட்டது. நமது பிரயாணிகள் வாசலைக் கடந்து ஒரு பெரிய அறைக்குள் பிரவேசித்தனர். ஏறக்குறைய ஆயிரம் பேர் அங்கே உறங்கிக்கொண்டிருந்தனர். இவர்களுக்கு முன்னே ஒரு சிறு கதவருகே இரண்டு காவல்காரர்கள் ஒருவரை ஒருவர் தங்கள் உள்ளங்கைகளில் இரு விரல்களால் அடித்துக்கொள்ளும் விளையாட்டை ஆடிக்கொண்டிருந்தனர். அவர்கள் புதிதாக வந்திருப்பவர்களை அவ்வளவாகக் கவனிக்கவில்லை. யான்கல் அவர்களைப் பார்த்து "சார் நாங்கள் வந்திருக்கிறோம், நான் சொல்வது கேட்கிறதா?" என்றான்.

அவர்களில் ஒருவன் தன் ஒரு கரத்தால் கதவைத் திறந்து "உள்ளே போ!" என்று கூறிக்கொண்டு மற்றொரு கரத்தைத் தன் தோழனிடம் அடிப்பதற்காகக் காட்டினான்.

அவர்கள் ஒரு குறுகிய இருண்ட நடைபாதைக்குள் நுழைந்தனர். அந்தப் பாதை அவர்களை ஒரு பெரிய அறைக்குள் கொண்டுவந்து விட்டது. அந்த அறையின் மேல்பக்கம் எல்லாம் சிறு ஜன்னல்கள் நிறைந்திருந்தன.

"யாரது போவது?" என்று உடலெங்கும் ஆயுதம் தரித்த பல சிப்பாய்கள் கத்தினார்கள். புல்பா அவர்களைப் பார்த்தான். "ஒருவரையும் விடக் கூடாதென்று எங்களுக்கு உத்தரவு" என்றனர்.

"நாங்கள்தான், கருணையுள்ள கனவான்களே, நாங்கள்தான்" என்று யான்கல் கத்தினான்.

ஆனால் அவன் சொல்வதை யாரும் கேட்கவில்லை. அதிர்ஷ்டவசமாக, ஒரு பருத்த சிப்பாய் அங்கு வந்தான். அவனது தோற்றத்திலிருந்தும், எல்லோரையும்விட அதிகமாகக் கத்தினதிலிருந்தும் அவன்தான் அங்கு பெரியவன் என்று தெரிந்தது.

"நாங்கள்தான் பிரபு. உங்களுக்கு ஏற்கனவே எங்களைத் தெரியுமே, இந்தப் பிரபு மறுபடியும் உங்களுக்கு நன்றி செலுத்துவார்" என்றான் யான்கல்.

"அவர்களைப் போக விடுங்கள் பிசாசுகளே, சாத்தானின் பெற்றோர்களே! வேறு எவரையும் உள்ளே விடாதீர்கள். உங்கள் வாட்களை அகற்றிவிட்டு நாய்களைப் போலக் கீழே கிடக்காதீர்கள்......"

அவனுடைய உத்திரவின் கடைசிப் பகுதியை நமது பிரயாணிகள் கேட்கவில்லை.

"நாங்கள்தான்...... நான்தான்......நண்பர்கள்......" என்று எதிர்ப்படும் ஒவ்வொருவனிடமும் கூறிக் கொண்டே வந்தான் யான்கல்.

பாதை முடியும் இடம் வந்ததும் அங்கிருந்தவன் ஒருவனை நோக்கி, "இப்போது நாங்கள் உள்ளே போகலாமா?" என்று யான்கல் கேட்டான்.

"போகலாம்; ஆனால் சிறைக்குள்ளே போக அனுமதிப்பார்களா என்பதுதான் தெரியவில்லை. ஜான் அங்கில்லை. வேறொருவன் அவன் இடத்திற்கு வந்துவிட்டான்" என்றான்.

"ஐயோ! நிலைமை மிகவும் மோசமாகத் தோன்றுகிறதே பிரபு" என்றான் யான்கல்.

"மேலே நட!" என்றான் புல்பா தீர்மானமாக. அந்த யூதனும் நடந்தான்.

சிறைக் கதவின் வாசற்படியருகே வாட்களை வளைத்திருந்த இடத்தில் மூன்றடுக்கு மீசை உள்ள ஒரு சிப்பாய் நின்றிருந்தான். அவனுடைய மீசையின் மேலடுக்கு மேல் நோக்கி இருந்தது; இரண்டாவது அடுக்கு நேரே நோக்கிக் கொண்டிருந்தது; மூன்றாவது அடுக்குக் கீழ் நோக்கி வளர்ந்திருந்தது. இதோடு அவனைப் பார்ப்பதற்கு ஒரு பூனையைப் போலிருந்தான்.

யூதன் தன் உடலைக் கூனிக் குறுகிக்கொண்டு மிகவும் பவ்யமுடன், அவன் பக்கமாகச் சென்று,

"கருணை மிகுந்த பிரபுவே! கண்யமிக்க கனவானே!"

"யூதா, என்னிடமா பேசுகிறாய்?"

"தங்களிடம்தான், கருணைமிக்க பிரபு!"

"ஹூம், நான் ஒரு சாதாரணச் சிப்பாய்!" என்று பூரிப்போடு கூறிக்கொண்டே தன் மீசைகளைத் தடவி விட்டுக் கொண்டான்.

"கடவுள் சாட்சியாகச் சொல்கிறேன், உங்களை வேவோட் என்றே நினைத்துவிட்டேன்!" என்றான் யூதன். பிறகு, தன் தலையை அசைத்துக்கொண்டு கரங்களை விரித்தபடியே, "எவ்வளவு கண்யமிக்க உருவம்! பெரிய கர்னலைப் போன்ற ஆகிருதி! ஒரே ஒரு மயிரிழைதான் பாக்கி, அதன் பிறகு இவர் ஒரு கர்னலாகிவிடுவார். நம் பிரபு, பறவையைப்போல வேகமாகப் பறக்கும் குதிரை மேல் அமர்ந்து, பல ரெஜிமெண்டுகளை நடத்திச் செல்லும் படியான கௌரவம் அடைந்துவிடுவார்."

அந்தச் சிப்பாய், தனது கீழடுக்கு மீசையை இன்னும் அதிகச் சந்தோஷத்தோடு தடவி விட்டுக்கொண்டான்.

"ராணுவ வீரர்கள் எவ்வளவு இனிமையானவர்கள் ஓ, எவ்வளவு நல்ல மனிதர்கள்! அவர்களது, மின்னுகின்ற உடைகளும் பளபளக்கும் சின்னங்களும் சூரியனைப்

போல ஜொலிக்கின்றன. கன்னிப் பெண்கள் இவர்களை எங்கு கண்டாலும்...... ஓ ஓ'' யூதன் மறுபடியும் தன் தலையைப் பவ்யமாகத் தாழ்த்திக் கொண்டான்.

இப்போது அந்தச் சிப்பாய் தனது மேலடுக்கு மீசையை முறுக்கிவிட்டுப் பற்களின்மூலம் குதிரை கனைப்பதுபோல ஒருவித சப்தம் செய்தான்.

அந்த யூதன், ''பிரபு எங்களுக்கு ஒரு உதவி செய்ய வேண்டும் என்று பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். இந்தக் கனவான் அன்னிய தேசத்திலிருந்து வந்திருக்கிறார். தம் வாழ்க்கையிலேயே இதுவரை கோஸக்குகளைப் பார்த்ததில்லை- அவர்கள் எப்படி இருப்பார்கள் என்று பார்க்க விரும்புகிறார்?'' என்றான்.

வெளிநாட்டுக் கனதனவான்களும், பிரபுக்களும் போலந்துக்கு வருவது அப்போது புதிதல்ல. ஆசியாவில் பாதியான இந்த ஐரோப்பிய மூலையைக் காண பலர் ஆவலோடு வந்தனர்—அவர்கள், மாஸ்கோவும் உக்ரேனும் ஆசியா கண்டத்திலிருப்பதாகக் கருதினார்கள். ஆகவே அந்தச் சிப்பாய் தாழ வணங்கிவிட்டுத் தானும் ஏதேனும் சொல்ல விரும்பி,

''அவர்களைப் பார்க்கவேண்டும் என்று பிரபு அவர்கள் ஏன் விரும்புகிறார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. அவர்கள் நாய்களைப் போன்றவர்கள், மனிதர்களல்ல. அவர்கள் மதத்தை ஒருவரும் பெருமைப் படுத்துவதில்லை'' என்றான்.

''சாத்தானின் மகனே, நீ பொய் சொல்கிறாய்! நீதான் நாய், எங்கள் மதம் பெருமைப்படுத்தப் படவில்லை என்று சொல்ல உனக்கு எவ்வளவு தைரியம். உங்களுடைய நாஸ்திக மதத்தைத்தான் யாரும் பெருமைப் படுத்துவதில்லை'' என்றான் புல்பா.

''ஹா—நீ யார் என்று தெரிந்துகொண்டேன். நண்பா, நான் காவல்புரியும் கூட்டத்தினரில் ஒருவன்தான் நீயும். கொஞ்சம் பொறு என் ஆட்களைக் கூவி அழைக்கிறேன்!''

புல்பா தன் தவறை உணர்ந்தான். ஆனால் அவனுடைய ஆத்திரமும் பிடிவாதமும், நிலைமையைச் சமாளிக்கும் வண்ணம் ஏதேனும் சமாதானம் சொல்ல விடவில்லை. யான்கல் நல்ல வேளையாக அவன் உதவிக்கு உடனே வந்தான்.

"மாட்சிமை தங்கிய பிரபுவே, எங்கேனும் பிரபு ஒருவர் கோஸக்காக இருக்க முடியுமா? அவர் கோஸக்காக இருந்தால் இந்தப் பிரபுவின் ஆடைகளும், இந்தக் கம்பீரத் தோற்றமும் எங்கிருந்து வரும் ?"

"உன் பொய், புளுகுகள் இனிமேல் எனக்கு வேண்டாம்" என்று கூறிவிட்டு, கத்துவதற்காகத் தன் வாயை அகலத் திறந்தான்.

"பெருந்தன்மை மிக்க கோமானே, ஆண்டவன் பேரால் கேட்டுக்கொள்ளுகிறேன். சற்று அமைதியாக இருங்கள், வேறு யாருக்கும் இதுவரை வழங்காததுபோல நாங்கள் உங்களுக்குப் பரிசு வழங்குகிறோம். தங்களுக்கு இரண்டு தங்க டுக்கட்டுகள் தருகிறோம்" என்று கத்தினான் யான்கல்.

"ஹூம், இரண்டு டுக்கட்டுகள்! இந்த இரண்டு டுக்கட்டுகள் எனக்கு எம்மாத்திரம், எனது பாதிதாடியை க்ஷவரம் செய்வதற்கு நாவிதனுககு இரண்டு டுக்கட்டுகள் கொடுக்கிறேன் நான், எனக்குக் கொடுத்தால் நூறு டுக்கட்டுகள் கொடு யூதா, இல்லாவிட்டால் நான் சப்தமிடுவேன்" என்று தன் வாயை அகலத் திறந்துகொண்டு தன் மேலடக்கு மீசையை முறுக்கிவிட்டான்.

"இவனுக்கு ஏன் இவ்வளவு?" என்று முகம் வெளுக்க வருத்தத்தோடு கூறினான் யூதன். பிறகு தன் தோல் பையைத் திறந்து அதில் அதற்குமேல் இல்லாததைக் கண்டு மகிழ்ந்தான். மேலும் அந்தச் சிப்பாய்க்கு நூறுக்கு மேல் எண்ணவும் தெரியாது.

"பிரபு நாம் இங்கிருந்து உடனே போய்விடுவோம், எவ்வளவு மோசமான ஜனங்கள் பார்த்தீர்களா?" என்றான் யான்கல். அந்தச் சிப்பாய், நாம் இன்னும் அதிக

மாகக் கேட்காமல் போய்விட்டோமே என்று வருத்தத்துடன் அந்த நாணயங்களை எண்ணிக்கொண்டிருந்தான்.

"ஏண்டா சாத்தானே, பணத்தை வாங்கிக்கொண்டு நாங்கள் கோஸக்குகளைப்பார்க்க அனுமதிக்க மறுக்கிறாய்; இல்லை நீ நிச்சயம் அவர்களை எங்களுக்குக் காட்டத்தான் வேண்டும், பணத்தைப் பெற்றுக் கொண்டு நீ இனிமேல் மறுக்கமுடியாது" என்றான் புல்பா.

"அந்தச் சாத்தானிடமே போ! போகாவிட்டால், நான் சப்தமிட்டு எல்லோரையும் அழைத்துவிடுவேன். ஆகவே போய்விடுங்கள்."

"பிரபு, பிரபு, நாம் போய்விடலாம். அவர்களைப் பிளேக் வாரிக்கொண்டு போகட்டும்! அவர்கள் பயங்கரமான கனவுகளைக் காணட்டும்!" என்று யான்கல் கதறிக்கொண்டே வந்தான்.

புல்பா திரும்பி மெதுவாகத் தலையைத் தாழ்த்திக்கொண்டு நடந்தான். யான்கல், பணம் வீணாகிப்போனதைக் கண்டு, அவனைத் தூற்றிக்கொண்டே வந்தான்:

"அவன் மேல் சீறிப் பயன் என்ன? நாய் குரைத்துக் கொண்டு போகட்டும்! அவர்களால் திட்டாமல் இருக்கமுடியாது. எல்லாம் என் பாபம்! மனிதர்களுக்கு ஆண்டவன் என்னென்ன சோதனைகளைச் செய்கிறார். நம்மை விரட்டி அடிப்பதற்காக நூறு டுக்கட்டுகள்! ஆனால் நமக்கோ—நம் காதுகளை வெட்டிவிட்டு, நம் முகத்தை யாரும் பார்க்கவே கூசுகின்ற அளவுக்கு அடித்து விரட்டுகிறார்கள். ஆனால் இதற்காக யாரும் எங்களுக்கு ஒரு நூறு டுக்கட்டுகள் கூட கொடுப்பதில்லை, அட ஆண்டவனே! கருணையுள்ள தெய்வமே!"

இந்தத் தோல்வி புல்பாவின் உள்ளத்தை இன்னும் கடினப்படுத்திவிட்டது. அவனது கண்களிலே ஆளை விழுங்கும் அனல் கக்கிக்கொண்டிருந்தது.

தூக்கத்திலிருந்து விழித்தவன்போல, "நாம் அந்த மைதானத்திற்குப் போகலாம், அவர்கள் எப்படித்தான்

அவனைச் சித்ரவதைச் செய்கிறார்கள் என்று பார்ப்போம்'' என்றான்.

''ஐயோ, அங்கே ஏன் பிரபு போக விரும்புகிறீர்கள்? நாம் அவருக்கு இப்போது ஒருவித உதவியும் செய்ய முடியாதே''.

''நாம் போகத்தான் வேண்டும்'' என்றான் புல்பா.

அந்த யூதனும் ஒரு தாதியைப்போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டே பின்னால் ஓடினான்.

தண்டனைகளை நிறைவேற்றும் இடத்தைக் கண்டு பிடிப்பது சிரமமாக இல்லை; எல்லாப் பக்கங்களிலிருந்தும் ஜனங்கள் திரளாக அங்கே சென்றுகொண்டிருந்தனர். அந்த முரட்டுத்தனமான காலத்தில் இதைப்போன்ற காட்சிகளைச் சாதாரண மக்களே யன்றி, உயர்ந்த வகுப் பாரும் விரும்பிக் காணத் துடித்தார்கள். சாதுவான கிழவி களும், கோழையான இளம் பெண்களும், இந்தக் காட்சி களைப் பார்த்துவிட்டு இரவில் தங்கள் கனவுகளில் வெறும் இரத்தம் தோய்ந்த பிணங்களையே கண்டு அலறி ஓலமிட்டுக்கொண்டு, குடித்துவிட்ட குதிரை வீரனைப் போலக் கதறினாலும், இந்தப் பொழுதுபோக்கில் கலந்து கொள்ளாமல் இருப்பதில்லை. ''சே, என்ன பயங்கரமான சித்ரவதை!'' என்று தங்கள் கண்களைத் திருப்பிக்கொண்டு ஜுர வேகத்தில் கத்தினாலும் அந்தக் காட்சியைக் கடைசி வரை இருந்து பார்த்துவிட்டே போவார்கள். சிலர் திறந்த வாய் மூடாமல், கரங்களை நீட்டிக்கொண்டு இன்னும் நன்றாகப் பார்க்கத் தங்கள் முன்னுள்ளவர்களின்மேல் விழுந்துவிடுபவர்கள்போலத் தவ்வுவார்கள். சிறிய குறுக லான பல தலைகளுக்குமேலே, கொலைகாரனின் பருத்த முகம் தெரிந்தது. தன் தொழிலில் மிகவும் திறமைசாலி என்ற பெருமிதத்தோடு அவன் அந்தக் கூட்டத்தைக் கவனித்துக்கொண்டும், ஆயுதம் தாங்கிக்கொண்டிருந்த மற்றொருவனிடம் ஜாடையாகப் பேசிக்கொண்டும் இருந் தான். இருவரும் விடுமுறை நாட்களில் ஒரே மதுக் கடையில் மதுவருந்தியதால், முன்னவன் மற்றவனைத் தன் உடன் வளர்ந்த சகோதரன் என்று கூப்பிடுவான். சிலர்

காரசாரமாக இவைகளைப்பற்றி விவாதித்தனர். இன்னும் சிலர் சப்தங்கள்கூட செய்தனர். ஆனால் அங்கிருந்த பெரும்பான்மையோர், உலகத்தில் நடப்பவைகளை யெல்லாம் பார்த்துவிட்டுத் தங்கள் நாசிகளைச் சொறிந்துவிடும் ரகத்தைச் சேர்ந்தவர்கள்.

முதல் வரிசையில், அடர்ந்த மீசையுடன் காட்சி தரும் நகரக் காவற்காரர்கள் • அருகே இராணுவ உடையுடன், ஒரு பெரிய கனவானைப்போல அல்லது கனவான் என்று தன்னைப் பிறர் நினைத்துக்கொள்ள வேண்டும் என்றோ, தன் வீட்டிலிருந்த எல்லா ஆடை யணிகளையும் அணிந்து கொண்டு நின்றிருந்தான். நிச்சயமாக அவன் வீட்டில் இப்போது கிழிந்த சட்டையும் பழைய ஜோடு மட்டும் தான் மீந்திருக்கும். இரண்டு வடம் சங்கலிகள், ஏதோ ஒரு நாணயத்தோடு அமைந்து அவனது கழுத்தை அலங்கரித்துக்கொண்டிருந்தன. அவன் தனது காதலி யான இஸிபா அருகில் நின்றுகொண்டு ஒவ்வொரு கண மும் அவளுடைய சில்க் ஆடையை யாரும் அழுக்காக்கி விடாமல் சுற்றிப் பார்த்துக்கொண்டான். அவன் அங்கு நடக்கும் எல்லா விஷயங்களைப் பற்றியும், முழுவிவரங் களுடன் விரிவாகக் கூறிக்கொண்டிருந்தான். அந்த விவரங்களுக்குமேல் வேறு யாரும் ஒன்றுமே சேர்க்க வேண்டி இருக்காது.

"கண்ணே இஸிபா, நீ இங்கே பார்க்கும் அவ்வளவு ஜனங்களும், அந்தக் குற்றவாளிகள் தண்டிக்கப்படுவதைக் காணவந்திருக்கிறார்கள். அங்கே கையில் கோடரியும் பிற ஆயுதங்களையும் வைத்துக் கொண்டு நிற்கிறானே, அவன்தான் கண்ணே, இவர்களைச் சித்ரவதை செய்து கொல்லப் போகிறான். அவர்களைச் சக்கரத்தில் வைத்தோ வேறு முறையிலோ சித்ரவதைச் செய்யும்போதும் அவர் கள் உயிருடன்தான் இருப்பார்கள். அவர்களுடைய தலை களை வெட்டிய உடன் அவர்கள் இறந்து விடுவார்கள். அதுவரை அவர்கள் கத்துவார்கள், உதைத்துக் கொள்ளு வார்கள். ஆனால் தலைகள் துண்டிக்கப்பட்ட உடன், உதைத்துக் கொள்ளவோ, சப்தமிடவோ முடியாது. எதை யும் சாப்பிடவோ, குடிக்கவோ கூட முடியாது. ஏன்

தெரியுமா கண்ணே, அதன் பிறகு அவர்களுக்குத் தலை இருக்காது'' என்றான்.

இஸிபா இந்த விவரங்களை மிகவும் அக்கரையுடனும், வியப்புடனும் கேட்டுக் கொண்டிருந்தாள்.

வீட்டுக் கூரைகள் மீதெல்லாம் ஜனங்கள் நிறைந்திருந்தனர். மாடி வீடுகளின் ஜன்னல்களில், விநோதமான மீசைகள் உள்ளவர்களின் முகங்கள் தெரிந்தன. அவர்கள் தலைகளில் கலசம் போன்ற சிறிய தொப்பிகள் இருந்தன. வீடுகளை ஒட்டிக் கட்டப்பட்டுக் கொடை விரித்த அரங்குகளில், பிறப்பால் உயர்ந்த தனவந்தர்கள் அமர்ந்திருந்தனர். சிரிக்கின்ற அழகி ஒருத்தியின், வெள்ளைச் சக்கரை போன்ற வன்னத் திருக் கைகள், ஒரு இரும்பின் மீது கிடந்தன. பருத்த கனவான்களும், பிரபலஸ்தர்களும், ஒரு வித கௌரவ பாவத்துடன் கவனித்துக் கொண்டிருந்தனர். சிற்றுண்டி விற்பவன் தனது அழகிய தோரணங்களுடன் கூடிய ஆடையுடன் தன் பண்டங்களை விற்றுக் கொண்டிருந்தான். சமயா சமயத்தில் கருமை படர்ந்த அழகிய கண்களை உடைய ஒருகுறும்புக்காரப் பெண் தன்னுடைய, தாமரைத் தண்டு போன்ற கரங்களால், ஒரு 'கேக்கை'யோ, அல்லது பழத்தையோ எடுத்துக் கீழே கூட்டத்தை நோக்கி வீசுவாள். பட்டினியில் அடிபட்ட பலரும், பிரபலஸ்தர்களும் கூட இந்தப் பரிசைப் பெற ஓடினார்கள். மற்றவர்கள் தலைகளுக்கு மேலே தெரிந்த ஒருவன், தனது சாயம்போன சிவப்பு நிறக் கோட்டும், நிறமிழந்த அணிகளும் தெரிய அந்தப் பரிசைப் பறித்துக் கொண்டு அதற்கு முத்தமிட்டு மார்போடணைத்துக் கொண்டு பிறகு அதை வாயில் போட்டுக்கொண்டான். மேலே மாடியில் ஒரு தங்கக் கூண்டிலிருந்த ஒரு கிளி தனது தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டும் ஒரு காலை உயர்த்திக் கொண்டும் இந்தக் காட்சியைக் காண வந்திருந்தது. திடீரென்று கூட்டத்தில் சப்தம் ஏற்பட்டது. எல்லா பக்கங்களிலிருந்தும் ''அவர்களைக் கொண்டு வருகிறார்கள்! அந்தக் கோஸக்குகளைக் கொண்டு வருகிறார்கள்'' என்ற குரல்கள் வெளிவந்தன.

அந்தக் கோஸக்குகள், தங்கள் நீண்டு வளர்ந்த கேசங்களுடன், தலைகளில் தொப்பிகள்கூட இல்லாமல் நடந்து வந்தனர். அவர்கள் தாடிகள் வளர்ந்திருந்தன. பார்வையிலே, திகிலோ, அச்சமோ தோன்றவில்லை. ஒரு வித அமைதியான பெருமையோடு நடந்து வந்தனர். அவர்களுடைய விலை உயர்ந்த ஆடைகள் கிழிந்து கந்தலாக இருந்தன. அந்தக் கூட்டத்தைக் கவனிக்கவோ, அதற்குத் தலை வணங்கவோ இல்லை. எல்லோருக்கும் முன்னே ஓஸ்டாப் நடந்து வந்தான்.

தன் ஓஸ்டாப்பைக் கண்டதும் கிழட்டு புல்பாவின் மனத்தில் என்ன எண்ணங்கள் தோன்றின? அவன் உள்ளத்தில்தான் என்ன இருந்தது? கூட்டத்தின் மத்தியிலே இருந்து கொண்டு ஒரு கணம் கூட இமைக்காமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தான். ஓஸ்டாப் நின்றான். எல்லோருக்கும் முன்னே அவன்தான் அந்தக் கோரமான பரிட்சைக்கு ஆளாக வேண்டி இருந்தது. அவன் தனது தோழர்களை நோக்கித் தன் கரங்களை உயர்த்தி உரத்த சப்தத்துடன் "கிருஸ்தவனுடைய துயர ஒலியை இந்த நாஸ்திகர்கள் கேட்காமலிருக்க ஆண்டவன் நமக்குத் துணை புரியட்டும்! நாம் ஒருவரும் ஒரு சிறு முணங்கல் கூட வெளி விடாமல் இருப்போமாக!" என்றான்.

அதன் பிறகு அவன் பலிபீடத்தின்மேல் ஏறினான்.

"நன்றாய்ச் சொன்னாய் மகனே! நன்றாய்ச் சொன்னாய்!" என்று மெதுவாகக் கூறிக் கொண்டே தன் தலையைக் கவிழ்த்துக் கொண்டான் புல்பா.

கொலைகாரர்கள், ஓஸ்டாப்பின் கந்தலாடைகளைக் கிழித்தெறிந்தார்கள். அவனது கால்களையும் கரங்களையும் புதிதாகச் செய்த மரப் பிணைப்புகளால் பிணித்துவிட்டனர். அதன் பிறகு—மயிர்க் கூச்செறியும் அந்த நரக வாதையான சித்திரவதைக் காட்சிகளை வருணித்து, வாசகர்களின் மனதைப் புண்படுத்த விரும்பவில்லை. பயங்கரமான முரட்டு மிருகப் பிராயத்திலே ரத்தக் களரியான போராட்டங்களில் வாழ்ந்து மனம் கடினப்பட்டு விட்ட

தின் எதிரொலியே இந்த ஈரமிலாச் செய்கைகள். மனித உணர்வுகளுக்கு முற்றிலும் அன்னியர்களாக வாழ்ந்தவர்களுடைய காலம் அது. அந்த நூற்றாண்டின் விதிவிலக்கு போன்ற ஒரு சிலர் மட்டும் ஒரு பயனும் காணுமல் இந்தக் கொடுமையான சித்ரவதைகளை எதிர்த்து வந்தார்கள். உள்ளத்திலே தெளிவு பெற்றிருந்த சில அரசர்களும் கனவான்களும் இதைப் போன்ற மிருகத்தனமான தண்டனைகள் கோஸக்குகள் சமுதாயத்திலே பழிக்குப் பழி வாங்கும் அனலை அதிகமாக்கிவிடும் என்று தடுத்துப் பார்த்தார்கள்.

தற்குறித்தனத்தாலும், கற்பனை செய்ய முடியாத அளவுக்கு முன்யோசனையற்ற போக்காலும், சிறு பிள்ளைத்தனமான கர்வம், சில்லறை வெறுப்பு இவைகளால் தங்களுடைய பாராளு மன்றத்தையே கேலிக் கூத்தாக்கும் அந்த நாட்டு செல்வந்தர்கள் முன்னே, அரசர்களுடைய செல்வாக்கும் அறிஞர்களது உபதேசமும் எம்மாத்திரம்?

சித்ரவதைகளையும், கொடுமைகளையும் ஓஸ்டாப் ஒரு ஜாம்பவான் போலச் சகித்துக்கொண்டான். அவனது கரங்களிலும், கால்களிலும் எலும்புகள் உடைக்கப்படும் அந்த நேரத்தில் கூட அவன் ஒருமுறை கூட அழவில்லை. ஒருவித சப்தமோ முணகலோ வெளிப்படவில்லை. அவனது எலும்புகள் முறிக்கப்படும் ஓசை, சவ அமைதி குடிகொண்ட அந்தக் கூட்டத்தின் கடைசியில் கூடப் பயங்கரமாக ஒலித்தது. பெண்கள் இந்தக் காட்சியைக் காணச் சகிக்காமல் தங்கள் முகங்களைத் திருப்பிக்கொண்டனர். ஆனால் அவன் உதடுகளிலிருந்து ஒருவித சப்தமும் வெளிப்படவில்லை. அவன் முகத்திலிருந்த ஒரு நரம்புகூட வேதனை தாங்காமல் வளையவில்லை. அந்தக் கூட்டத்தில் புல்பா தன் தலையைக் குனிந்த வண்ணம் நின்று கொண்டிருந்தான். பெருமையோடு தன் கண்களை உயர்த்திக் கொண்டு அடிக்கடி "நல்ல செயல் புரிந்தாய்!" என்று கூறிக்கொண்டான்.

ஆனால் சித்திரவதையின் கடைசி கட்டமான மரணத்திற்கு அவனை இழுத்துக்கொண்டு போனபோது அவனது

சக்தி அவனை விட்டு அகன்றுவிட்டது போலும். அவன் தன் கண்களை எல்லா பக்கமும் சுழற்றிக் கவனித்தான். ஆண்டவா! எல்லாம் தெரியாத அன்னிய முகங்களாகவல்லவா தோன்றுகின்றன! அவனுடைய மரணத்தைக் காண ஒரு அன்பு உள்ளம் மட்டும் அங்கிருந்தால்! பலவீனமான தன் தாயின் விம்மலையும் அழு குரலையும் அவன் கேட்க விரும்பி இருக்கமாட்டான். ஒரு மனைவியின் பயங்கர ஓலத்தையோ, தன் வெளுத்த மார்பை அடித்துக்கொண்டும் கேசத்தைப் பிய்த்துக் கொண்டும் அழுகின்ற காட்சியையோ அவன் விரும்பவில்லை. ஆனால் சக்தி வாய்ந்த ஒரு மனிதனின் நெஞ்சுர மிக்க அனுதாபச் சொல் ஒன்றைத் தான் அவன் விரும்பினான். அவனுடைய சொற்கள் மரண வேளையிலே அவனுக்குப் புது சக்தியையும் ஆறுதலையும் தந்திருக்கும். அவனுடைய சக்தி அவனைக் கைவிட்டது. அவனது உள்ளம் வேதனை தாங்காது கத்த ஆரம்பித்தான். "தந்தையே நீ எங்கிருக்கிறாய்? என் குரலைக் கேட்க முடிகிறதா?"

"நான் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறேன்" என்ற குரல், பேரமைதி குடிகொண்டிருந்த அந்தக் கூட்டத்திலிருந்த லட்சக்கணக்கானவர்களை உலுக்கி எடுத்தது.

ஆயுதம் தாங்கிய ஒரு பட்டாளம் அந்தக் கூட்டத்தைத் தேடி ஓடி வந்தது. அந்தப் பட்டாளம் தான் நின்றிருந்த இடத்தைக் கடந்து சென்றதும் பயத்தால் சவம் போல வெளுத்திருந்த யான்கல் அச்சத்தோடு புல்பாவைப் பார்த்தான். ஆனால் புல்பா அங்கு இல்லை. அவனுடைய அடையாளத்தையே அங்கு காண முடியவில்லை.

## 12

புல்பாவைப் பற்றிய அடையாளம் கூடிய சீக்கிரமே தெரிந்துவிட்டது. உக்ரேனின் எல்லையிலே ஒருலட்சத்து இருபதினாயிரம் பேர் கொண்ட கோஸக்குகள் படை திரண்டது. தார்த்தாரியர்களை எதிர்த்துச் செல்லும் ஒரு சிறு படையோ, கொள்ளையடிப்பதற்காக, விரைந்துச்செல்லும் சிறு கூட்டமோ அல்ல இது. பொறுமையின் எல்லை

யைக்கடந்துவிட்ட கோஸக்சமுதாயமே திரண்டுவிட்டது. கோஸக்குகள் தமதுஉரிமைகள் பறிக்கப்படுவதை எதிர்த்துத் தமது பழக்க வழக்கங்களை அவமானப்படுத்தும் தாழ்வினை எதிர்த்துத் தங்கள் தந்தையர்களால் போற்றப்பட்ட தங்கள் மதச் சம்பிரதாயங்கள் அழிக்கப்படுவதை எதிர்த்து, மாதாக் கோவில்களை மாசுபடுத்துவோர்களையும், வெளிநாட்டுப் பிரபுக்களின் ஆணவத்தையும், அவர்களுடைய அடக்கு முறையையும், போப்பாண்டவருடன் ஏற்படுத்தப்படும் இணைப்பையும் எதிர்த்து, கிருஸ்தவ பூமியில் வளர்ந்துவரும் யூதச் செல்வாக்கை எதிர்த்து—இன்னும் பலகாலமாகக் கோஸக் இனத்தின் வெறுப்பிற்காளாகி, அவர்கள் உள்ளங்களிலே வளர்ந்து வந்த இழிவுகளை எல்லாம் எதிர்த்து அந்தப் பேரணி திரண்டது.

இந்தக் கணக்கற்ற கோஸக் படையின் தலைவனாக ஆஸ்ட்ரானிட்ஸா தேர்ந்தெடுக்கப் பட்டான். அவன் வயதில் இளைஞனானாலும் மனத்திறம் மிகுந்தவன். அவன் பக்கத்தில் அவனது நம்பிக்கைக் குகந்த போர்க்கால தோழனான குன்யா இருந்தான். ஒவ்வொரு ரெஜிமெண்டிலும் பன்னிரெண்டாயிரம் பேர் இருந்தனர். ஒவ்வொரு ரெஜிமெண்டுக்கும் ஒரு கர்னல் வீதம் எட்டுக் கர்னல்கள் இருந்தனர். இரண்டு குழுக்களின் தலைவர்களும், ஒரு பொது துவஜதாரியும், தங்கள் தலைவனின் பின்னே அணி வகுத்து நடந்தனர். தலைமைத் துவஜதாரி, பொதுக் கொடியைத் தாங்கிக் கொண்டு முன்னே செல்ல, பல பதாககைகளும் கொடிகளும் அந்தப் படையெங்கும் பட்டொளி வீசின. பல கொடிகள் குதிரைகளின் வால்களில் கட்டப் பட்டிருந்தன. கால் நடையாகப் பல வீரர்களும், குதிரைகள் மீது பல ரெஜிமெண்டுகளும் வந்தன. இவர்கள் போக, சரக்கு வண்டிகளின் கண்காணிப்பாளர்கள், லெப்டினன்ட்கள், ரெஜிமெண்டின் அலுவல்காரர்கள் பலர் அணிவகுத்து வந்தனர். பதிவுச் செய்து கொண்ட கோஸக்குகள் அளவுக்குச் சமமாகத் தாங்களாகவே வந்த தொண்டர்களின் படைகள் வந்தன. கோஸக்குகள் இருந்த இடங்களில் எல்லாம் கிளம்பிவிட்டனர்; சிக்கிரின், பெரியசிலேவ், பாட்டுரின், குளுகோவ், டெனிப்பரின்

மேல்கரை கீழ்க்கரைப் பகுதி, அந்த நதியின் தீவுகள் இவைகளிலிருந்த எல்லா கோஸக்குகளும் திரண்டுவிட்டனர். எண்ணிறந்த குதிரைகளும் வண்டிகளும் அந்த விரிந்த பிரதேசமெங்கும் நிறைந்துவிட்டன. இந்த கோஸக்குகள், அந்த எட்டு ரெஜிமெண்ட் இவர்களிலே மிகவும் உன்னதமான ஒரு படை இருந்தது. அதுதான் புல்பா தலைமையிலிருந்த படை. அவனைப் பற்றிய எல்லாமே மற்றவர்களைவிட அவன் உயர்ந்தவன் எனக்காட்டியது; அவனது முதிர்ந்த வயது; அவனது அனுபவம்; தனது படைகளை நடத்துகின்ற திறமை, எதிரிகளின் மீதிருந்த அவனது அளவு கடந்த வெறுப்பு, சிறிது கூட தயவு காட்டாத அவனது முரட்டுத்தனத்தையும் கொடுமையையும் கோஸக்குகளே அதிகம் என்று நினைத்தனர். அவனது நரைத்த தலைக்குள்ளே கழுமரங்களைப் பற்றியும், தூக்குமேடைகளைப் பற்றியுமே எண்ணங்கள் தோன்றின. யுத்தக் குழுக் கூட்டங்களிலே அவனது பேச்சில் சர்வ நாசத்தைத்தவிர வேறொன்றும் தொனிப்பதில்லை.

கோஸக்குகள் தங்கள் வீரத்தைக் காட்டிச் செய்த போராட்டச் செயல்களையும், அவர்களுடைய போரின் முன்னேற்றத்தைப் பற்றியும் இங்கு விரித்துக் கூறவேண்டியது அவசியமில்லை. சரித்திரத்தின் பக்கங்களிலே இவைகளைப்பற்றிய குறிப்புகள் நிறைந்திருக்கின்றன. ருஷ்யாவில் மதத்திற்காக ஏற்படும் போர் எப்படிப்பட்டது என்பதை எல்லோரும் அறிவார்கள். மதத்தைவிட சக்தி வாய்ந்தது வேறெதுவுமில்லை. புயல் நிறைந்து அடிக்கடி மாறுகின்ற கடலிலே மனித கரங்களினுல் செய்யப்படாத பெரும் பாறையைப்போல,யாராலும் வெற்றிபெற முடியாத சக்தி வாய்ந்தது அது. கடலின் ஆழத்திலிருந்து தனது உடைக்க முடியாத கடினமான சுவர் போன்று எழுந்து நின்றது. அந்த சக்தி எல்லாப் பக்கங்களிலிருந்தும் காட்சியளித்தது. தன்னைச் சுற்றி வரும் அலைகளைப் பயமின்றி நோக்கிக்கொண்டிருந்தது. அதை எதிர்த்து மோதி விடும் கப்பலின் கதி! அதனுடைய பல பாகங்கள் பல துண்டுகளாகச் சிதறி விழ, கப்பலிலிருந்த

அனைத்தும் அழிந்து தண்ணீரில் அமிழ்ந்துவிட, கப்பலி லிருந்தவர்களும் கப்பலோட்டிகளும் போடும் அழுகுரல் கள் வானத்தை நிறைத்தன.

கோஸக்குகளால் விடுவிக்கப்பட்ட நகரங்களிலிருந்து போலந்தியப் படைகள் பின்வாங்கிய செய்திகள் சரித்திரத் தில் விரிவாகக் குறிப்பிடப்பட் டிருக்கின்றன. மேலும் பேராசை கொண்ட யூத வட்டிக் கடைக்காரர்களைத் தூக்கிலிட்டதையும், வெல்லுதற்கரிய இவர்களுடைய படைகள் முன்னே அரச வம்சத்துத் தலைவனான மிக்கோ லாஜ் போடோகியின் எண்ணிறந்த படைகள் சக்தி இழந்து, தோல்விகண்டு, விரட்டி அடிக்கப்பட்டதையும், தனது வீரமிக்க படையின் பெரும் பகுதியை ஒரு சிறு ஓடையில் பயங்கரமான போரில் இழந்து தவித்த விவரத் தையும், பயங்கரமான கோஸக்குகள் அவனது படை யைப் போலோஞேய் என்ற நகரத்தில் வளைத்துக் கொண்டு சின்னுபின்னப் படுத்திவிட, வேறு வழி காணுத அவன் அரசரின் சார்பாகவும், மந்திரிகளின் சார்பாகவும், இவர்களுடைய உரிமைகளையும் பழைய சுதந்திரங்களையும் ஒப்புக் கொள்வதாகப் பிரமாணம் செய்து கொடுத்த விவரமும் அதில் அடங்கி இருக்கும். ஆனுல் கோஸக்கு கள் இதைக் கண்டு ஏமாந்து விடவில்லை. மேலும் போலந்துக்காரர்களின் பிரமாணம் எத்தகையது என் பதும் அவர்களுக்குத் தெரியும். அந்த நகரத்து ருஷ்யப் பாதிரிகள் அவனது உயிரைக் காப்பாற்றி யிராவிட்டால், போடோக்கி ஆறுயிரம் டுக்கட்டுகள் பெறுமான குதிரை மீது சவாரி செய்துகொண்டு, பெரிய குடும்பத்தில் பிறந்த பெண்களின் எண்ணங்களைக் கவர்ந்துகொண்டு பிறர் அவனைப் பார்த்துப் பொருமைப்படுகின்ற தன் பழைய பெருமையையே இழந்திருப்பான். பாராளு மன்றத்தில் உள்ள பல அங்கத்தினர்களுக்கு மகோன்னதமான விருந் தளித்துக் களிக்கும் அவன் நிலை மாறிப்போய் இருக்கும். ஆனுல் அந்தச் சமயத்தில் ருஷ்யப் பாதிரிகள் தங்கள் கரங் களில் சிலுவைகளையும் விக்ரகங்களையும் ஏந்திக்கொண்டு தங்கநிற அங்கிகளை அணிந்துகொண்டு கோஸக்குகளை வரவேற்க வந்தனர். அந்த நேரத்திலே தங்கள் அரச

னுக்குக்கூட மரியாதை காட்டி இருக்க மாட்டார்கள். ஆனால் தங்களுடைய சொந்த கிருஸ்தவப் பாதிரிகளை எதிர்க்க அவர்கள் துணியவில்லை. அவர்களுக்குக் கீழ்ப் படிந்தார்கள். தலைவனும் கர்னல்களும் போடோக்கி யிடம் சத்தியப் பிரமாணம் வாங்கிக்கொண்டு அவனை விடுவித்துவிட ஒப்புக்கொண்டனர். அதன்படி அவர்க ளுடைய கோவில்களை மாசுபடுத்துவதில்லை என்றும் கடந்தவைகளை எல்லாம் மறந்துவிடுவதாகவும் கோஸக்கு களின் வீரப் பண்பிற்கு விரோதமாகப் போவதில்லை என் றும் உறுதி கூறினான். அவர்களில் ஒரு கர்னல் மட்டும் இந்தச் சமாதான ஒப்புதலுக்கு இணங்கி வரவில்லை. அவன்தான் புல்பா. தனது கரங்களால் தலையிலிருந்து கேசத்தைப் பறித்துக்கொண்டு, "தலைவனே, கர்னல்களே, பெண்கள் செய்யக்கூடிய இந்தக் காரியத்தைச் செய்யா தீர்கள். போலந்துக்காரர்களை நம்பாதீர்கள். அந்த நாய் கள் துரோகம் செய்து விடுவார்கள்" என்று கத்தினான்.

சமாதான ஒப்பந்தக் குறிப்புகளை ரெஜிமெண்ட் அலு வலர்கள் பூர்த்தி செய்துகொண்டு வந்ததும் தலைவனே அதில் தன் கையொப்பமிட்டதைக் கண்ட புல்பா, தன் னுடைய விலையுயர்ந்த துருக்கிய வாளை உருவி, பலம் பொருந்திய அதன் எஃகுத் தகட்டை நாணலைப்போல் இரண்டு துண்டாக ஒடித்து, எதிரெதிர் பக்கங்களில் ஒவ்வொரு துண்டை எறிந்துவிட்டு,

"போய் வருகிறேன்! துண்டாகிப் போன அந்த இரு துண்டங்களும் ஒன்றாக இணைந்து மறுபடியும் ஒரே வளாக முடியாதோ அதைப்போல நாமும் இனிமேல் இந்த உலகத்தில் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ள முடியாது. என்னுடைய கடைசி வார்த்தைகளைக் கேட்டுக் கொள் ளுங்கள்—" இங்கு அவனுடைய தொனி உயர்ந்து இது வரை காணாத ஒருவிதப் புது சக்தியுடன் ஒலிக்க ஆரம்பித் தது. அவனது தீர்க்க திருஷ்டியுள்ள வார்த்தைகளைக் கேட்க அவர்கள் அஞ்சினர்.

"உங்களுடைய மரண வேளையிலே நீங்கள் என்னை நினைத்துக் கொள்ளுவீர்கள்! சாந்தியையும் சமாதானத்

தையும் விலை கொடுத்து வாங்கிவிட்டதாக நினைக்கிறீர்களா? இனிமேல் அமர்க்களமாய் வாழலாம் என்று நினைக்கிறீர்களா? அதுதான் முடியாது. உங்களை மற்றவர்கள் தான் ஆளுவார்கள். தலைவா, உன்னைப் பிடித்து உன் தலையைச் சீவி அதிலே கோதுமையை நிறைத்து, ஊரூராக அதைக் கொண்டுபோய் பல நாட்களுக்குச் சந்தைகளில் வேடிக்கை காட்டுவார்கள். கனவான்களே, நீங்களும் உங்கள் தலைகளைக் காப்பாற்றிக்கொள்ள முடியாது. ஆடுகளைப்போலத் தீயிலிட்டு உங்களைப் பொசுக்கி விடுவார்கள். இல்லாவிட்டால் இருள் அடர்ந்த சிறைக்குள்ளே கற்சுவர் சூழ்ந்த அறைகளில் அழுந்திக் கிடக்கப் போகிறீர்கள்.'' பிறகு தனது ஆட்கள் பக்கம் திரும்பி, ''உங்களிலே இயற்கையான மரணம் அடைய விரும்புபவர்கள் யார்?—சூட்டடுப்பு வரிசைகளிலே அழுந்தி உழன்று சாகாமல், பெண்களின் படுக்கையிலே சாகாமல், மதுக்கடையின் வேலி யருகே குடித்துவிட்டுச் செத்தழுகிப் பிணமாகாமல்—ஒரு உண்மையான கோஸக் மரணத்தை —மணப் பெண்ணும் கணவனும்போல எல்லோரும் ஒரே சமயத்தில் சாக விரும்புகிறீர்களா? அல்லது வீடுகளுக்குத் திரும்பிச்சென்று நாஸ்திகர்களாய் மாறி, போலந்து பாதிரிகளைத் தோள்களில் தூக்கிச் சுமக்கப் போகிறீர்களா?'' என்று கேட்டான்.

''நாங்கள் உங்களையே பின்பற்றுவோம் கர்னல், உங்களையே பின்பற்றுவோம்'' என்று அவனது ரெஜிமெண்டிலிருந்தவர்களும் இன்னும் பலரும் இவன்பக்கம் வந்து விட்டனர்.

''அப்படியானால் என்பின்னே வாருங்கள்'' என்றான் புல்பா. தனது தொப்பியைப் புருவம் வரை இழுத்து விட்டுக்கொண்டு, வராமல் நின்றுவிட்டவர்களை முறைத்துப் பார்த்தான். பிறகு தனது குதிரையின்மேல் அமர்ந்துகொண்டு தனது ஆட்களைப் பார்த்து ''எங்களைக் கருணையற்ற சொற்களால் யாரும் தூற்றவேண்டாம்! இளம்புங்கள் பிள்ளைகளே, கத்தோலிக்கர்களைச் சென்று கண்டு விட்டு வருவோம்'' என்றான்.

தனது குதிரையைத் தட்டிவிட்டுப் புல்பா முன்னே செல்ல, நூற்றுக்கு மேற்பட்ட வண்டிகளும், பல கோஸக்குகளும் குதிரை மீதும் கால்நடையாகவும் அவனைப் பின்பற்றி நடந்தனர். பின் தங்கிவிட்ட தன் தோழர்களை ஆத்திரத்துடன் திரும்பிப் பார்த்துக் கொண்டே புல்பா சென்றான். ஒருவரும் அவனைத் தடுத்து நிறுத்தத் துணியவில்லை. படையின் முன்னிலையிலேயே அவன் பிரிந்து சென்றான். புல்பா நீண்டநேரம் திரும்பித் திரும்பிப் பார்த்தான்.

கர்னல்களும் தலைவர்களும் தங்கள் தலைகளைக் கவிழ்த்துக்கொண்டு நின்றிருந்தனர். ஏதோ பயங்கரமான விளைவை எதிர்பார்த்து அஞ்சுவதுபோல, சிந்தனை வயப்பட்டு அவர்கள் நீண்டநேரம் அப்படியே நின்றிருந்தனர். புல்பா கூறியது பொய்யாகிவிடவில்லை. அவன் தீர்க்க தரிசனத்தோடு கூறிய ஒவ்வொன்றும் அப்படியே நடந்தன. கனீவ் என்ற இடத்தில் நடந்த துரோகத்திற்குப் பிறகு அந்தத் தலைவனின் தலையையும் பிற உயர்ந்த ராணுவ வீரர்களின் தலைகளையும் துண்டித்துக் கம்புகளில் குத்திவைத்தனர்.

அதன் பிறகு புல்பா என்னவானான்? தனது ரெஜிமெண்டோடு போலந்து தேசத்திற்குள் வெகுதூரம் முன்னேறிப் பதினெட்டு நகரங்களையும் போப்பாண்டவனின் தொடர்பு கொண்ட கோவில்கள் நாற்பதையும் தீயிட்டுக் கொளுத்தி கிராகவ் சமீபமாக வந்துவிட்டான். பல பிரபுக்களைக் கொன்று, அவர்களுடைய செல்வமிகுந்த மாளிகைகளைச் சூறையாடினான். பல ஆண்டுகளாகச் சேமித்து வைத்திருந்த பழம்பெரும் 'ஒய்ன்' போன்ற பானங்கள் நிறைந்த பெரிய பெரிய மதுக் கிடங்குகளை உடைத்து அவைகளைப் பூமியில் வெள்ளமாக வாரி இறைத்தான். கோஸக்குகள் தங்கள் எதிர் வந்த எல்லாவற்றையும், விலையுயர்ந்த ஆடை அணிகலன்களையும் கிழித்துச் சின்னாபின்னப்படுத்தினர். "எதையும் விட்டுவைக்காதீர்கள்" என்று புல்பா கூறினான். கருமை படர்ந்த கண்கள் உள்ள பெண்களிடம்கூட கோஸக்குகள் கருணை காட்டவில்லை. முத்து நகைமிளிரும் முகமும், வெள்ளை

நிற மார்பகங்களும் கொண்ட கன்னிப் பெண்களைக் கூட அவர்கள் விட்டு வைக்கவில்லை. பிரார்த்தனை மேடையருகே சென்றும்கூட அவர்கள் தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள முடியவில்லை. புல்பா பிரார்த்தனை மேடையோடு சேர்த்து அந்தப் பெண்களையும் தீக்கிரையாக்கினான். பயங்கரமான அக்னிஜ்வாலையின் மத்தியிலே பரிதாபகரமான கூக்குரலுடன் பலஜோடி பனிக்கரங்கள். வானத்தை நோக்கி உயர்ந்தன. அந்தக் கூக்குரல் பூமியைக்கூட அசைத்து நாணலைக்கூட அநுதாபத்தோடு வளைத்துவிட்டிருக்கும். ஆனால் அந்தக் கொடுமை நிறைந்த கோஸக்குகள் இதைக் கவனிக்கவே இல்லை. வீதியிலே போகும் குழந்தைகளைத் தங்கள் ஈட்டியின் முனையில் குத்தி அவர்களையும் அந்தத் தீயில் தூக்கி எறிந்தனர்.

"நாசமாய்ப்போன போலந்துக்காரர்களே, இதுதான் ஓஸ்டாப்பின் மரணவிருந்து" என்று கத்தினான் புல்பா.

இதைப்போன்ற மரண விருந்துகளை, ஒஸ்டாப்பின் நினைவாக எல்லா நகரங்களிலும் கிராமங்களிலும் நடத்த ஆரம்பித்தான் புல்பா. இவனுடைய இந்தப் போக்கு போலந்து அரசாங்கத்தை விழித்தெழச் செய்து, இவனது செயல்கள் சாதாரண கள்ளர் கூட்டத்தினர் செய்கைகளை விட அளவுக்கு மீறியதாக இருந்ததால், உடனே அந்தப் பழைய போடோக்கியை ஐந்து ரெஜிமெண்டோடு, அவனைத் தவறாமல் பிடித்து வரும்படி அனுப்பியது.

தங்களை விரட்டி வருவோரிடமிருந்து அந்தக் கோஸக்குகள் ஆறு நாட்கள் தப்பித்துக்கொண்டு கிராமத்தின் ஒதுக்குப்புறச் சாலைகள் வழியே ஓடினர். வழக்கத்திற்கு மாறான, இந்த நெடு நாளைய ஓட்டத்தால் குதிரைகள் களைத்துப் போயிருந்தாலும், கோஸக்குகளை அவைகள் காப்பாற்றி இருக்கும். ஆனால் போடோக்கி, இந்த முறை தனக்களிக்கப்பட்ட காரியத்தில் கண்ணுங் கருத்துமாக இருந்து, சளைக்காமல் அவர்களை விரட்டிக்கொண்டே வந்து டெனிஸ்டரின் கரையில், கைவிடப்பட்டுக் கலனாகிப் போயிருந்த ஒரு கோட்டையில் தங்கி இருந்த புல்பாவை வளைத்துக்கொண்டான்.

டெனிஸ்டரின் கரையோரமாகச் செங்குத்தாக உயர்ந்த பாறையின் மேல் அமைந்திருந்த அக்கோட்டையின் உடைந்துபோன கொத்தளமும், உதிர்ந்து ஊசலாடிக் கொண்டிருந்த சுவர்களும் தண்ணீரில் நன்கு தெரிந்தன. பாறைகளும் உடைந்துபோன கற்களும் அந்தச் செங்குத்தான குன்றின் உச்சியில் நிறைந்து, எந்த நிமிஷமும் கீழே சரிந்து விழுந்து விடுவதுபோலத் தோன்றியது. திறந்த வெளியை நோக்கி இருக்கும் அதன் இரண்டு பக்கங்களிலும் அரசர் குலத்துத் தலைவனை போடோக்கி புல்பாவைச் சூழ்ந்துகொண்டான். நான்கு நாட்கள் அந்தப் போலந்துக்காரர்களைக் கற்களாலும் பாறைகளாலும் திருப்பி அடித்துப் பார்த்தனர். ஆனல் அவர்களுடைய சக்தியும், உணவுப் பண்டங்களும் வரவரக் குறைந்துவிடவே, எதிரிகளின் அணியைப் பிளந்து போராடியே தப்பித்துக் கொள்ள புல்பா தீர்மானித்தான். அந்தக் கோஸக்குகள் தாங்கள் நினைத்தபடியே போராடி வெற்றி பெற்றிருப்பார்கள். பாய்ந்தோடும் அவர்களது புரவிகளும் வேகமாக அவர்களைக் கொண்டுபோய்ச் சேர்த்திருக்கும். ஆனல் எதிரிகளின் அணியை உடைக்கப் பயங்கரமாகப் போராடிக் கொண்டிருக்கும் வேளையில், புல்பா "நில்லுங்கள்! நான் என்னுடைய சுங்கானைத் தவறவிட்டு விட்டேன். நாசமாய்ப்போன போலந்துக்காரர்கள் கரங்களில் புகையிலை நிறைந்த என்னுடைய சுங்கான்கூடக் கிடைக்கக் கூடாது" என்று கத்தினன். வீட்டிலிருக்கும் போதும், வெளியே போராட்ட காலங்களிலும், கடல் மீதோ தரை மீதோ எங்கு சென்ருலும், என்றும் நீங்காத தனது தோழனைப் போன்ற அந்தச் சுங்கானைத் தேடக் கீழே இறங்கி, புற்றரையில் தன் கரங்களால் தேடினன். அந்தச் சமயத்தில் சிப்பாய்களின் ஒரு கூட்டம் அவனது பலம் வாய்ந்த தோள்களைப் பிடித்துக் கொண்டனர். அவன் தன் தோள்களைக் குலுக்கி அந்தச் சிப்பாய்களைக் கீழேதள்ளி விட முயற்சித்தான். ஆனல் முன்னைப்போல அவர்கள் கீழே விழவில்லை. "வயதான தோஷம், வயதான தோஷம்!" என்று அந்தச் சக்திவாய்ந்த கோஸக் கண்ணீர் விட்டான். ஆனல் அவனுடைய வயோதிகம் இதற்குக் காரணம் அல்ல. ஒரு மனிதனின் சக்தி பலருடைய சக்திக்குப்

பணிந்துவிட்டது; அவ்வளவுதான். முப்பது பேர்களுக்கு மேல் அவனது கரங்களையும் கால்களையும் பிடித்து அழுத்திவிட்டனர். "நமது பறவையைப் பிடித்து விட்டோம்" என்று அந்தப் போலந்துக்காரர்கள் ஆனந்தத்தோடு கூவினர். "அந்த நாய்க்குத் தகுந்த தண்டனையைப் பற்றி இப்போது யோசிக்க வேண்டும்" என்று மேலும் அவர்கள் கூறிக் கொண்டனர். பிறகு தங்கள் தலைவனின் அனுமதியின் பேரில், எல்லோருக்கும் முன்னிலையில் அவனை உயிரோடு கொளுத்துவது என்று தீர்மானித்தனர். அருகாமையில், மின்னல் பட்டு மேல் பாகம் எரிந்துபோன ஒரு மரத்தின் அடித்துண்டு மட்டும் இருந்தது. அதன் அடிப் பாகத்தோடு அவனை இரும்புச் சங்கிலிகளால் பிணித்து அவனது கரங்களை ஆணிகளால் அந்த மரத்தோடு அடித்து விட்டனர். தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்குத் தெரியும் வண்ணம் அவனை மரத்துண்டின் உயரத்தில் கட்டிவிட்டு, அவன் கால்களுக்குக் கீழே விறகுகளை அடுக்கினார்கள். ஆனால் புல்பா கீழே நடப்பதையோ தன்னை உயிரோடு கொளுத்தப் போகும் நெருப்பைப் பற்றியோ கவனிக்கவில்லை. உயரத்திலிருந்து பார்க்கும்போது உள்ளங்கைகளில் நடப்பதுபோலத் தெரியும் தனது கோஸக்குகள், தங்களைத் துரத்தி வருபவர்களை எதிர்த்து அடித்துக் கொண்டே போவதை அந்தப் பரிதாபத்துக் குரியவன் கவனித்துக் கொண்டிருந்தான்.

"சீக்கிரம் அந்தக் குன்றை நோக்கி ஓடுங்கள் பிள்ளைகளே, அந்தக் காட்டுக்குப் பின்னால் இருக்கும் குன்றை அடைந்துவிட்டால் இவர்கள் உங்களை அணுக முடியாது" என்று கத்தினான்.

ஆனால் காற்று அவனது சொற்களை அவர்கள் பக்கம் கொண்டுபோக வில்லை.

"அவர்கள் தொலைந்தார்கள், எல்லாம் ஒரு சாதாரணச் சாமானுக்காக விளைந்த வினை!" என்று துயரத்தோடு கூறிக் கொண்டே மின்னிச் சுழன்றோடும் டெனிஸ்டரைக் கவனித்தான்.

அவன் கண்களிலே ஆனந்தம் துள்ளியது. புதர்களிடையே இருந்து நான்கு படகுகளின் முகத் தோற்றம் வெளியே வருவதைக் கண்டான். தன்னுடைய சக்தி அனைத்தையும் உபயோகித்து உரத்த குரலில் "நதிக்கரைப் பக்கம் ஓடுங்கள்! நதிக்கரையை அடையுங்கள்! இடது புறமாகப் போகும் குன்றின் பாதை வழியே செல்லுங்கள். அங்கே படகுகள் இருக்கின்றன. அவைகளை எடுத்துக் கொள்ளுங்கள். இல்லாவிட்டால் இவர்கள் உங்களை விரட்டிக்கொண்டே இருப்பார்கள்" என்று கத்தினான்.

இந்தச் சமயம் காற்றுச் சாதகமாக வீசவே, அவனது சொற்கள் எல்லாம் கோஸக்குகளுக்குக் கேட்டன. இதனால் அவன் தலைமீது ஒரு கோடாரியின் அடி விழுந்து அவன் கண் முன்னே எல்லாமே சுழல ஆரம்பித்தது.

அந்தக் கோஸக்குகள் முழு வேகத்தோடு அந்தக் குன்றின் சரிவில் இறங்கிக்கொண்டிருந்தனர். ஆனால் எதிரிகளும் அவர்கள் பின்னே துரத்திக்கொண்டே சென்றனர். மேலும் பாதையும் பலவிதமாகச் சுற்றிச் சுழன்று போனதால் அவர்களுடைய வேகம் தடைப்பட்டது. ஒரு கணம் அவர்கள் "நாம் தொலைந்தோம் தோழர்களே!" என்று பேசாமல் நின்றுவிட்டனர். பிறகு தங்கள் சாட்டைகளை உயர்த்திச் சீட்டிச் சத்தம் கொடுத்தனர். உடனே அந்தத் தார்த்தாரியக் குதிரைகள் பாம்புகளைப் போல நீட்டிக்கொண்டு அந்தக் குன்றின் பாறைகளைக் கடந்து, பூமியிலிருந்து மேலே பறந்து டெனிஸ்டரில் குதித்தன. இரண்டு வீரர்கள் மட்டும் நதியில் குதிக்க முடியாமல், உயரத்திலிருந்து கீழே விழுந்து அந்தப் பாறைகளில் குதிரைகளோடு ஒரு சப்தமுமின்றி இறந்துவிட்டனர். மற்றவர்கள் இதற்குள் தங்கள் குதிரைகளுடன் நீந்திக்கொண்டே சென்று தங்கள் படகுகளை அவிழ்த்தனர். போலந்துக்காரர்கள் குன்றின் உச்சியை அடைந்ததும், தாங்கள் இதுவரை கேள்விப்படாத இந்தக் கோஸக்குகளின் சாகஸத்தைக் கண்டு ஒன்றும் செய்ய முடியாமல் தாமும் அதைப்போல் குதிப்பதா வேண்டாமா

என்று யோசித்துக்கொண்டே நின்றனர். ஆனால் அவர்களில் ஒருவன் மட்டும் துணிச்சலுடன் கொஞ்சம் கூட யோசிக்காமல் அந்தக் கோஸக்குகளைப் போலவே ஆகாயத்தில் தன் குதிரையைத் தட்டிவிட்டான். தட்சணமே தன் குதிரையுடன் அதல பாதாளப் பாறைகளில் விழுந்து மாண்டான். அந்த இளம் கர்னல் ஆன்றியை மயக்கிக் கொண்டு போன அந்த இளம் போலந்துப் பெண்ணின் தமையன். அவனுடைய உடல் கூர்மையான பாறைகளில் மோதிக்கிழிந்து அவனுடைய மூளை இரத்தத்தோடு கலந்து குன்றின் பாறைகளின் ஊடே வளர்ந்திருந்த புதர்களில் பட்டுத் தெறித்தது.

புல்பா தன் தலையில் விழுந்த அடியிலிருந்து உணர்வு பெற்று டெனிஸ்டரைக் கவனித்தபோது, கோஸக்குகள் படகுகளில் வேகமாகச் சென்றுகொண்டிருந்தனர். மேலே இருந்து அவர்களை நோக்கிப் பாயும் குண்டுகள் அவர்களை அணுக முடியாமல் தண்ணீரில் அமிழ்ந்துவிட்டன. அந்தக் கிழட்டுத் தலைவனின் கண்களில் ஆனந்தம் மின்னிட்டு ஜொலித்தது.

"போய் வாருங்கள் தோழர்களே, என்னை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். மறு வசந்தத்திற்கு மறுபடியும் மற்றொரு மகத்தான போருக்கு இங்கே வாருங்கள்!" என்று அவர்களை நோக்கிக் கத்தினான். பிறகு,

"நாசமாய்ப்போன போலந்துக்காரர்களே இப்போது என்ன சொல்லுகிறீர்கள்? கோஸக்குகளை நடுங்கவைக்கக் கூடிய சக்தி உலகத்தில் எங்குமே கிடையாதென்பதைத் தெரிந்துகொண்டீர்களா? கொஞ்சம் பொறுங்கள்! கிருஸ்தவ மதத்தின் பழம் பிரிவைச் சேர்ந்த ருஷ்யன் எப்படிப்பட்டவன் என்பதைத் தெரிந்துகொள்ளும் நாள் வரும்! வெகு தூரத்திலிருக்கும் பலர் அதைப் பற்றி இப்போதே பேச ஆரம்பித்துவிட்டனர். ருஷ்ய பூமியிலிருந்து ஒரு அரசன் தோன்றுவான். அவனுக்கு முன்னே பணிந்து போகாத சக்தியே உலகத்தில் இருக்காது" என்றான் தாராஸ் புல்பா.

விறகுகளில் தீப் பிடித்து ஜுவாலை மேலெழும்பி அவனது கால்களைப் பற்றிக்கொண்டு மரத்தையும் பிடித்துக் கொண்டது...... ஆனால் இந்த நெருப்பு, சித்ரவதை, உலகத்திலிருக்கும் வேறு எந்தச் சக்திதான் ருஷ்யரின் சக்தியை வெல்ல முடியும்!

டெனிஸ்டர் நதி சிறியது அல்ல. அதனுடைய கிளை நதிகள் பல. அடர்ந்த புதர்களும், ஆழமான பகுதிகளும், பலவிதக் குழிகளும் நிறைந்தது. ஆனால் அதன் கண்ணாடி போன்ற மின்னுகின்ற மேல் பரப்பின் மீது அன்னங்கள் கூவிக் கொண்டும் நீர் வாத்துகள் வேகமாகப் பெருமிதத்தோடு தவழ்ந்து கொண்டும் போகும். அதன் கரைகளில் அடர்ந்த நாணல் புதர்களிடையே பலவிதமான காடைகளும் சிவப்புநிறக் கழுத்துக்களை உடைய பறவைகளும் மறைந்துவாழும். அந்தக் கோஸக்குகள் அமைதியாகத் தங்களுடைய குறுகிய இரண்டடுக்குத் துடுப்புகளுடைய படகுகளை ஆழமற்ற திட்டுகளில் கொண்டு போகாமல் செலுத்திக் கொண்டே பறவைகளை எழுப்பிக் கொண்டும் தங்களுடைய தலைவனைப் பற்றிப் பேசிக்கொண்டும் சென்றனர்.

---

